திருவாவடுதுறை ஆதீன வெளியீடு—47



உ

ஸ்ரீ

# நமச்சிவாயமூர்த்தி—ஆற்றுப்படை







குருபூஜை மலர்

கர ஆண்டு தைத்திங்கள் 20௳

1952

துறைசை ஆதீன வெளியீடு - 47.



உ

சிவமயம்



ஸ்ரீ

# நமச்சிவாய மூர்த்தி ஆற்றுப்படை

(மூலமும் குறிப்புரையும்)



திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை

ஆதீனம்

21-வது மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ

சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்

திருஅருளாணைப்படி

இயற்றியவர்

வித்துவான் — தே. ஆ. ஸ்ரீநிவாஸன்,

மஞ்சையம்பதி

கரஹு தைமீ 20உ

1952

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு
நீடூழி தழைக மாதோ.

திருச்சிற்றம்பலம்.





இருபத்தொன்றாவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

# முகவுரை

---

**நல்லோன் துறைசை நமச்சிவா யன்பதம்**
**எல்லோரும் ஏத்தல் இனிது.**

இன்பநிலை ஆன்ம உரிமையாகும். இது மெய்ஞ்ஞானத்தால் கிடைப்பது. மெய்ஞ்ஞானம் சமயாசாரியர்களாலே உபதேசமுகமாக அளிக்கப்படுவது. சமயங்கள் பல. இவற்றுள் சிறப்புடையது சித்தாந்தசைவம். இதன் சித்தாந்தங்களைப் போதித்தும் அநுட்டித்தும் காட்டுவன மடாலயங்கள். தென்னாட்டில் சித்தாந்தசைவ மடங்கள் பல உள்ளன. இவற்றின் விழியெனப்படுவது **திருவாவடுதுறை ஆதீனம்.** இவ்வாதீனம் தேவபூத பரம்பரைமுறையால் திருக்கயிலாயத் தொடர்புடையது. இவ்வாதீன ஆதிபரமாசாரியராக விளங்கியருளியவரே **ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திக**ளாவர். இவரது பெருமை எட்டிலடங்காதது. இம்மூர்த்தத்தை நினைப்பாரும், துதிப்பாரும், வணங்குவாரும் எல்லாப்பேறும் எய்தப்பெறுவர்.

இத்தகைய மூர்த்தியினிடம் கொண்டபக்திப் பெருக்கினால் இந்த "**ஆற்றுப்படை**" நூல் முகிழ்க்கலுற்றது. அருளும் தெருளும் பெற்றுரொருவன் அவற்றைநாடி வினவுவானொருவனுக்கு அவையிற்றை அருளவல்ல தலைவர்பற்றிய எல்லாவிவரங்

களையும் எடுத்துரைத்து வழிகாட்டி அனுப்பும் அமைப்பாக இந்தநூல் இயற்றப்படுவது. இப்பாட்டுடைத் தலைவர் திருவாவடுதுறை ஆதீன **ஆதி ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள்** ஆவார். ஆதலின், **ஸ்ரீ நமச்சிவாய மூர்த்தி ஆற்றுப்படை** என இந்நூல் பெயர்பெறும்.

இதன்கண் இப்பரமாசாரியர் இயல்புகளும், இருப்பிடங்களும் ஓதப்பட்டுள. இவ்வழியால் இப் பரமாசாரியரை அடைந்து கசிந்து போற்றி உலகம் வழிபட்டுய்திபெற வேண்டுமென்பதே இந் நூலின் நோக்கமாகும்.

இவ்வாதீன பரம்பரையில் இது போழ்து 21–வது பரமாசாரியராக எழுந்தருளி விளங்குபவர் ஸ்ரீலஸ்ரீ **சுப்பிரமணிய தேசிக சுவாமிகளாவார்.** இப்பரமாசாரியர் திருவருளாணைப்படியே இந்த நூல் இயற்றப்பட்டுள்ளது. இப்பரமாசாரிய சுவாமிகளே இதனை ஆதீன வெளியீடாக மலரும் படி இந்த நூலுக்குரிய திருவுருவப்படங்களையும் உதவித் திருவருள் பாலித்துள்ளார்கள். அறிவிற் சிறிய அடியேனை இங்ஙனம் ஆட்கொண்டருளிய சுவாமிகளின் பெருங்கருணைத் திருவடியை ஏழையேன் நெஞ்சம் என்றும் தஞ்சமாகக்கொண்டு கிடப்பதாக!

மற்றும், இந்நூலுக்கு இவ்வாதீனப் பெரும் புலவர் உயர் திருவாளர் த. ச. மீனாட்சி சுந்தரனார் சாற்றுகவியொன்றும் அளித்துப் போற்றியுள்ளார்கள். தாயொத்த இவர்கள் தடங்கருணைக்கு எழுமையும் நன்றி கூர்வல்.

மேலும், எனது கெழுதகையன்பரும், இவ் வாதீன அடியவருமாகிய திருவாளர் வித்துவான் தியாகராஜ தேசிகரவர்கள் இந்நூல் மலர்ந்து மணங்கமழ்தற்காவன ஆற்றியுதவியமையோடு அரிய முன்னுரையாம் பொன்னுரையும் அருளியுள் ளார்கள். இவர்களது பெருநட்பு என்றும் எம்மைப் பேணுவதாக என்று நன்றி யுரைப்பதன்றி வேறு யாது செய்ய வல்லேன்!

இந்நூலை நல்ல முறையில், சுருங்கியபோதில் அச்சிட்டுதவிய திருப்பாதிரிப்புலியூர் "சரஸ்வதி" அச்சகத்தார்க்கும் எனது நன்றி மிக உரியதாகுக!

நூலாசிரியன்,

**தே. ஆ. ஸ்ரீநிவாசன்.**

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

நேரிசையாசிரியப்பா

மணிநீர்ப் பொன்னி வளமிகு சென்னியின்
அணிநிறை நாட்டிற் றணியாப் புகழ்பெறும்
அந்தண ரீட்டமும் அடியவர் கூட்டமும்
செந்தழல் வேள்வியும் சிவாகம நெறிகளும்
5. மாமண முரசும் வளர்கொடை முரசும்
தாமன்னு வீதியிற் றவமலிந் தெவர்க்கும்
பெருவாழ் வளிக்கும் பேரருண் ஞானத்
**திருவா வடுதுறைத்** தேசிக நாதன்
அலந்தெழு மன்பர்க் குறுமா னந்தன்
10. நலந்தரு சுத்தன் **நமச்சி வாய**
**மூர்த்தி**தன் செந்தா மரைபுரை திருவடிச்
சீர்த்தியை வேட்டவோர் செம்ம லுளத்தனை
**ஆற்றுப் படையினு** லாற்றுப் படுத்தனன்;
வேற்றுப் புலததரும் போற்றும் புலத்தகை
15. தேவன் குடியிற் றேன்றிய மாதவன்
மஞ்சையம் பதியில் விஞ்சிய வாழ்க்கையன்
ஆச்சா ரையங் கார்செய் தவத்தினன்
நாச்சுவை காணுன் பாச்சுவை கண்டோன்
கருவி நூலெலாங் கற்றவன் மற்றவன்
20. பெரிய புலவனும் பேறும் பெற்றவன்

நூல்பல பாடியும் நூற்குரை செய்தும்
சால வாங்கவை தாம்போ தித்தும்
நல்லா சிரிய னெனநா வலர்புகழ்
வயிணவ மதத்து வருகுல சிகாமணி
25. ஆயினுஞ் சைவரைத் தாயென மதிப்போன்
குன்றே யனையவெங் குருமா மணியாம்
திப்பிய ஞானச் **சுப்பிர மணிய**
வள்ளலை மறவா வுள்ளத் தடத்தினன்
**சீனிவா சன்**எனும் சீர்த்தியன்
30. பானிக ரின்சொற் பாவலர் கோனே.

**த. ச. மீனுட்சிசுந்தரம் பிள்ளை,**
*திருவாவடுதுறை ஆதீன வித்வான்.*
**கும்பகோணம்.**



உ

சிவமயம்

# மதிப்புரை

---

ஸ்ரீ நமச்சிவாய மூர்த்தி ஆற்றுப்படை என்னும் இந்நூல், திருவாவடுதுறைத் திருமடத்தே கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளவரும், அம்மடத்தின் ஆதிமூர்த்திகளும் ஆகிய பஞ்சாக்கர தேசிகர் பக்கல் உலக மக்களை ஆற்றுப்படுத்தும் முறையில் இயற்றப் பட்டுள்ளது. சங்கப்பெரும்புலவர் நக்கீரதேவர் இயற்றி வழிகாட்டியுள்ள திருமுருகாற்றுப் படையின் அமைப்பே இந்நூலின்கண்ணும் அமைந்து அழகுசெய்கின்றது. இந்நூலகத்தே இலக்கிய இலக்கணச்சுவைகளும், சித்தாந்த சைவசமயக்கருத்துகளும், கடவுளுண்மை, வழிபாட்டின் திறங்கள், உண்மையன்பு, பூசனைமுறை, தோத்திரவுரைகள் ஆகிய பலபொதுவான செய்திகளும், காணப்படுகின்றன. பல இடங்களில் அழகிய கற்பனை நயங்களும், உண்மை நவிற்சியணிகளும் பொதுளுகின்றன. சுருங்கக்கூறின், இந்நூல், சித்தாந்தத் தெளிவாகிய "அருபரத்தொருவன் அவனியில்வந்து குருபரன் ஆகின்ற" கொள்கையைத் திருக்கயிலாயம் முதல் திருவாவடுதுறைவரை அடுக்கப்பட்டுள்ள ஆறுபடைவீட்டுச் செய்திகளால் அறிவிக்கின்றதென்பதில் ஐயமில்லை.

கடவுளின் உண்மைக்கு ஆன்றோர்கள் எடுத்தாண்டுள்ள உவமையை நினைவூட்டுநிலையில் இதன் ஆசிரியர், "இயல்பெழும் அகரம் இனிதமர்ந்தாங்கு" என்று எடுத்துக்காட்டி உரைவகுத்துள்ளமை, ஆன்றோர் முறைமை தழுவும்தன்மைக்கு அறிகுறியாகும். இறைவனின் இருதிருவடிகட்கும் திருக்குறட் செய்யுளடிகளை உவமைகாட்டுந்திறம் போற்றற்பாலதே. "ஓதக் கடல் உவர் திருக்கை" என்ற வரிகளில் அமைந்துள்ள சிலேடை நயம்வியப்பளிப்பதாகும். இதுபோன்ற சிலேடை இந்நூலிற் பற்பல இடங்களில் பயன்பட்டிருப்பது பாராட்டுக்குரியதே. சிவபெருமான் கொன்றை மாலை கொண்டிருப்பதற்கு இந்நூலில் 22-ஆவது வரிமுதல் 28-ஆவது வரிவரை காட்டப்பட்டுள்ள காரணம் புதுமையின்பம் புணர்த்தவல்லதே. "திருவடி காணிய தெரிந்தெழல் நிகர்ப்ப" என மரங்களின் மேல்நோக்கியவளர்ச்சிக்குத் தரப்பட்டுள்ள தற்குறிப்பேற்றம் எண்ணுவார்க்கு இன்பூட்டும். முனிவர்மகளிர், தேவகந்தருவர், குறிஞ்சிவாழ்குறவர்செயல்களாகக் கூறப்பட்டுள்ள பகுதிகள் பொருளிலக்கண அமைதிபொருந்தி இலக்கியச் சுவைபயக்கின்றன. கயிலாயமுகட்டிற் சிவபெருமான் எழுந்தருளியிருத்தற்குக் "கருப்புரக் குவால்மிசைக் கனலொளி" என்று கற்பித்திருத்தல் சாலக்களிப்பூட்டும். திருவாசகத்தின்மாட்டு இவ்வாசிரியர்க்கு மிக்க ஈடுபாடுண்மை 90—95 வரிகளாலும், 274–280 வரிகளாலும் நாமறியலாம். "எந்தை பூரணன் கருணைமுகந்துமுகந்து முழுதுலகினுக்கும் வார்த்திடும் இயல்பினன் வாதவூரன்" என்ற இடம் உள்ளுந்தோறும் உள்ளமினிக்கப் பண்ணுகின்றது. திருக்கயிலாய மலைவழியழகு கூறும்திறம் சுவைக்கத்

தக்கதாம் "வளிபொரவணங்கி அரஅரஎனமுரல் வரைபல சூழ்தர" என்றுகூறியுள்ள இடத்தே "அரவர" என்ற பதப்பிரயோகம் செய்துள்ள திறமைபுலமைக்குரிய சான்றும். அப்பிராகிருத மான திருக்கயிலாயத்தைத் தமது கற்பனையால் ஆசி ரியர் நம் கண்முன் கொணர்ந்து நிறுத்தும் தகைமை மிகவும் போற்றத்தகுவதே.

படை வீடுகளின் தொடக்கங்களிலெல்லாம் அவ் வவ்வூர்களின் இயற்கைக்கேற்பச் சமயசாத்திர உண் மையும், நுண்மையும் செறித்துச்செல்வது சிந்தைக்கு விருந்தாகும். சிவாகமங்களிலிருந்து அறியக்கூடிய செய்திகளான ஐம்முகம்-கரங்கள் முதலியனவற்றை அழகும் கற்பனையும் தத்துவமும் ததும்பப்பாடியிருத் தல் படிப்பார் யாவரும் தெரிந்துமகிழற்குரியது. சூக்குமஉடம்பினை "உருமுதல் என்றழைத்திருப் பது கருதத்தக்கதே.

இத்திருமடத்துப் பூருவாசாரியர் திருப்பெயர் களை வகை வகையாக வழங்கி, அத்திருப்பெயர் களின் அடைவிலேயே சித்தாந்த உண்மை பொதிந்து கிடத்தலை 176, 193-ஆவது வரிகளின் உரைவளம் காட்டச்செய்துள்ளமை போற்றற்பாலதே. பெண்ணு கடத்துக்கும் வெண்ணெயம்பதிக்கும் இயைபுகாட்டி யுள்ளமை ஊன்றி உணரும் பெற்றிமையுடையது. சுசீந்திரப்படைவீட்டுவரிகள், தம்பிரான்மார்களின் பூசனை இயல்புகளையும், ஏனைச்சைவநெறியினர் பலர் பூசை முறைகளையும் எடுத்துரைக்கின்றன. "உருத் திர கோடியர்" என்னும் திருப்பெயர்ச்சொல்லினை எங்ஙன மெங்ஙனமெல்லாம் மடக்கி மடக்கி யமைத் துள்ளார் என்பது உரையாலும் வரியாலும் உணரத்

தக்கதாகும், "கடுங்கொதி துழவியகாம்பகல் மூழை" என்ற உவமை ஒவ்வொருவரும் உன்னற்குரியஅரிய தொன்றும். அந்த அந்தத்தலங்களின் மூர்த்தம், தீர்த்தம் முதலன சமத்காரமாக எடுத்தாளப்பட்டுள்ள நயம் துய்க்கற்பாலதாம். "வயவேந்தெனப் பொலி வாழ்வுடைச் சைவம்" என்பன போன்ற இடங்கள் இவ்வாசிரியர்க்குச்சைவத்தின் பாலுள்ள நற்பற்றினையும், நன்மதிப்பையும் நமக்குக்காட்டும். ஓரான்மா, படிப்படியாகப் பக்குவப்பட்டுச்சிவத்தின் திருவடியடைதலை திருப்பெருந்துறைப்படை வீட்டடிகள் செம்மையின் விளக்குகின்றன.

காவிரியாறு கடல்புகும் செய்தியும் முறையும் கவனிக்கத்தக்கன. கரும்பு, வாழை, தெங்கு, பொய்கை, கால்வாய், நெற்பயிர், இவற்றின் மூலமாக உணர்த்தப்பட்டுள்ள உண்மைகள் உவகை தருகின்றன. "நெய்யடிசிலின் தீ அவிக்கும் நியமம்" என்ற இடத்து உரைநயம் படிக்கத்தக்கதாகும். 370-ஆவது வரியின் பொருள், கருதிக்கருதிக் களிப்புறத்தகுவது. ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகளின் எங்கும் நிறைந்த தன்மை திருவாவடுதுறைபற்றிய வரிகளில் காட்டப்பட்டுள்ளன. மற்றும் இம் மூர்த்திகளின் பல்வகைத் தடத்த சொருப இயல்புகளும், உருவவருணனைகளும் நெஞ்சையள்ளும் பான்மை உடையன. தீக்ஷையியல்புகூறியிருக்கும் குறிப்பு குறிக்கொளத்தக்கதே. 440 முதல் 486-ஆவது வரிவரையில் அடுக்கிக்கூறப்பட்டுள்ள அருச்சனைச்சொற்கள் அருமைப்பாடுடையன. திருவாவடுதுறையின் சிறப்பும், திருமடத்தின் தோற்றமும் நன்குவளமுறக்கிளக்கப்பட்டுள.

"வருபத்தியினரை இருபத்தியொன்றெனத்
தெருளுறத் தமரும் தேசிக மணியாம்

சுப்பிர மணிய விப்புவிக் குரவன்"— என்னும் வரிகளில் சரிதமும் சாத்திரமும் பின்னிச்சிலேடை நயத்துடன் பொலியும் தகையினை இவ்வரிகளின் உரைவளங்கண்டு சுவைக்கலாகும். "நாவடு நீங்கிட நாவலர் புகழும் ஆவடுதுறை" என்ற இடம் பல நல்ல எண்ணங்களை எழுப்பும் என்பது திண்ணம்.

இங்ஙனம் எண்ணில்லாத பற்பல நற்சுவைகள் இப்படை வீட்டில் சமைத்து வைக்கப்பட்டுள்ளமை யாவரும் கொண்டு களிக்க வல்லதே. இந்நூலும், இந்த நூலுக்கு உரையும் சிறந்த முறையில் அமைந்துள்ளன என்பதே எனது உண்மைக்கருத்தாகும். இந்நூலிற்குறிப்புரை பல நூல்களில் பல்கால் துருவியடையும் கருத்துக்களை யெல்லாம் வாரி வழங்குகின்றது. பொதுவாக, இந்நூலையும், இதன் உரையையும் கற்போர் சமய சாத்திர தோத்திர இலக்கிய நயங்கண்டு ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகளின் திருவருளுக்கு இலக்காவர் என்பதே எளியேன் கருத்தாகும்.

இந்நூலினை இயற்றிய ஆசிரியர், அரும்பெரும் புலவர் ஸ்ரீமத்வித்துவான். T. A. சீனிவாஸாசாரியார் அவர்கள் ஆவார்கள். பொம்மபுரம் ஆதீனத்து ஸ்ரீலஸ்ரீ சிவஞானபாலயசுவாமிகள் அருளுக்கு இலக்காகி, இவ்வாசிரியர் "பாடாண்பாட்டு, ஞாயிறு வாழ்த்து, துதிபஞ்சகம், மயிலாசலமாலை, மயிலம் முருகன்பிள்ளைத்தமிழ்ப்பத்து, நீர்மைப்பத்து, அதிசயப்பத்து, குருபூசை நுண்மைவிளக்கம், குருசீட சேவை, தோத்திரப் பாடல்கள், முதலிய பல நூல்களை

இயற்றியும், மற்றும் பிற அறிஞர்கள் இயற்றியுள்ள அன்புவிடு தூது போன்ற நூல்களுக்கு அரிய உரை வரைந்தும் தமிழ்ப்பணியும் சமயப்பணியும் புரிந்து வருகின்றார்கள்.

பண்டுதொட்டே தெய்வத் தமிழையும் சைவ சமயத்தையும் இரு கண்களாகக் கொண்டு பரிபாலனம் செய்து வருவது திருவாவடுதுறை ஆதீனம் என்பது உலகறிந்த செய்தி. இஞ்ஞான்றும் பல அரிய சமய நூல்களையும் தமிழிலக்கிய நூல்களையும் வெளியிட்டருளிச் சைவ சமயத்தையும் தெய்வத் தமிழையும் வளர்த்து அருட் செங்கோல் நடாத்திவரும் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து 21-வது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரியசுவாமிகள் அவர்கள் ஸ்ரீ நமச்சிவாய ஆற்றுப்படை என்ற இவ்வரிய நூலைப் பலரும் கற்றுப் பயனடையவேண்டும் என்னும் பெருங்கருணை கொண்டு வெளிவரத் திருவுளம் பற்றியுள்ளார்கள். இங்ஙனமே என்றும் நிகழ அருளும் வண்ணம் குருமகாசந்நிதானத்தின் திருவடிகளை இறைஞ்சுகின்றேன்.

இங்ஙனம்,

வித்துவான் T. S. **தியாகராச தேசிகன்,**

திருவாவடுதுறை ஆதீன அடிப்பவன்.



ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக பரமாசாரிய சுவாமிகள்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருஆவடுதுறை

## திருக்கயிலாய பரம்பரை மெய்கண்டார் சந்தானம்

ஆதி

# ஸ்ரீ நமச்சிவாய மூர்த்தி

# ஆற்றுப்படை

## நூல்

---

### 1. திருக்கைலாயம்.

உலகம் பொறுத்தளி உயருயிர் அறிவுற
இலகுறு மொழிபயில் எழுத்தினம் இணங்குற
இயல்பெழும் அகரம் இனிதமர்ந் தாஅங்கு,
யாவையும் யாவரும் அகப்படக் கரந்து,
5 உயர்வொடு நலனிடை உவமங் கடந்து,
உரைவரம் படங்கா துயிர்க்குயி ராகி,
அகம்புறம் பரந்தருள் அவிர்சுடர்ப்
[பரம்பொருள் ;
காலங் கடந்த கவின்பே ரியற்கை;
ஆலம் பயந்த அருந்திறல் வித்தே;
10 எண்ணில் உயிர்க்கென இயன்ற உருவம்;
கண்ணில் அடங்காக் காட்சித் ததுவே;
கீழென மேலெனக் கிளர்ந்தும் கவிந்தும்

ஆழ்கயத் தமலர்மரை நிரைபுரை சிறிதுறச்
செருக்குநர் முருக்கியும் சேர்குநர்த் தாங்கியும்
15 திருக்குறள் நிகர்த்தொளிர் உருக்கிளர் சேவடி;
எதிர்நலங் குறியா இயல்பிற் ருகி,
வெப்பொழிந் துலகம் விளங்கல் வேண்டி,
ஓதக் கடலுவர் ஒழித்திட முகந்து,
பொதுமையிற் போத நீர்வலம் பொழிந்து,
20 பொதியருட் கடம்புரி புயல்மருள் திருக்கை;
ஒருவா தமைஇய வொண்ணுத லதிபன்;
திருமா மறைமுதல் தெரிபொரு ளாகியும்,
ஆநிரை புரக்கும் அருங்கடன் மேற்கொள்
தானுறு கொழுநன் ஆகியுந் தாங்குதல்
25 தாரணி தெரிப்பான் தனக்கென அமைந்த
ஏரணி முல்லை யிரும்புனத் தரிவைகொண்
டுறுந்தீங் கொன்றையு முருவகை தொடுத்தணி
நறுந்தீங் கொன்றையின் நகுதார் மார்பினன்;
நீரற வறியா நெடும்புறப் பெருங்கடல்
30 அளறுபட முகந்தங் கந்தரத் தெழீஇக்
கந்தரம் கடுப்பக் கந்தரங் கறுத்து
மழுவின் மின்னியும் வன்னியின் உரறியும்
வெள்ளந் தகைஇய விரகுடை மடையின்
ஒள்ளிய வெள்ளி ஓங்கலின் மீமிசை
35 உருகியர் விழியென ஓவறப் பொழிதந்
தாணவங் கழன்ற ஆவியின் வெளுத்திட,
ஒழிந்த பிறைமதி உருகிவழிந் தாஅங்(கு)
அருவிகள் பலவும் அரவமிட் டிழிதர,
உச்சியி னமர்ந்த நச்சர வணியோன்
40 திருவடி காணிய தெரிந்தெழல் நிகர்ப்ப
ஆரம் தேக்ககில் அசோகம் வேங்கை

பலவும் நிவந்து பசுமை பரப்பத்,
துன்னிய முனிவரர் வாழ்க்கைத் துணையினர்
உடனுறை கற்பின் உவகை நெஞ்சினர்
45 தளிர்புரை மேனியர் தாமரை அடியினர்
தோயாத துகிலினர் தூமணி இழையினர்
திலதம் தைஇய திங்கள் முகத்தினர்
குன்று மணத்த குழல்பொதி முடியினர்
விருந்தினம் அருத்துறும் அருந்தவ
[நோக்கினர்
50 மாசறு கேள்வி மடுத்திடு செவியினர்
நேயமுற் றுருருங்கு நெருங்கினர் சார்ந்து
படிறிலீ ரத்துப் பண்ணுறை கிளவியின்
சேரலன் போற்றிய செல்வன் சேவடி
தீந்தொடைக் குறிஞ்சித் திவவியாழ்
[மிழற்றெனத்
55 தேந்தொடை நாவின் வழுத்தித் திகழ்தர
ஒருபால், ஒருபால், உம்பர் குழாம்பல
செவிவழிப் பருகிச் செல்வுழித் தொடர்வர
நான்மறை பயந்த நாதம் புலப்படத்
தான்முறை கிளக்கும் தகுசொல் நரம்பினம்
60 தூங்காத் தெய்வதத் துணைபுரி கருவிகொடு
நீங்கா இசைபயில் நீள்புகழ் விஞ்சையர்
பாங்கா மெவரையும் பத்தியுட் படுத்துப்
பரமனை விரவிடப் பண்ணிப் படர்தர,
நிலைபெறும் வென்றி நினைந்த நெஞ்சமொடு
65 தலைமூன் றமைந்த கொலையூன் றியநெடுங்
குடுமிச் சூலம் கொள்கையின் நாட்டிக்
குன்றம் அதிர்தரத் தொண்டகம் கொட்டி
அண்டினர் எவரும் அஞ்சுவர மண்டி
மாலை நாற்றி மணமுறை தீற்றிச்

70 சீரை சுற்றித் திலதம் தீட்டி
ஆரப் புகையும் அகினற் றூபமும்
வீரக் கூற்றுடன் விழைமடை பலவும்
நேரக் காட்டி, நிமிர்வெண் குவட்டின்
மீமிசைச் செம்பொருள் தாமிசை வுற்றமை
75 காட்டுங் கருப்புரக் குவாலின் கனலொளி
விருப்புடன் சுழற்றி வீரம் செறிதரு
விண்ணகக் கொடிச்சியர் திண்ணியற்
[கணனெடும்
அடிபெயர்த் தயரா தாடுற, நீடுறும்
கதிர்நுழை பறியாக் கண்ணகல் சோலைத்
80 தண்ணியல் தாங்கிய விண்ணியல் சிறுபிறை
நிலைத்த கண்ணியென மிலைத்திடு சென்னியன்;
தானென் றென்பதும், தாங்குதல் உண்மையும்,
முத்தொழில் முன்பும், அத்தொழி லிருமையும்,
முன்னேன் என்பதும் முதுநீ ருலகினர்
85 அறிபாக் கருளுளம் அமைந்தார் மாளிகை
தன்தொழில் புரியாத் தாளுடைப் புதவம்
தாங்கி யோங்கும் தகைமை யேய்ப்பக்
கொலைகுறித் திடாவகை கொள்ளுநர்க்
[குதவுவான்
வலனுயர் பெடுத்த வாளெரி மழுவினன்;
90 அறந்திரு வுருவமா அமைவுரு நந்திதாள்
அடிவழி ஒதுங்கி அமரர்கள் வணங்கிப்
பொடிபுனை ந் திலங்கிடும் பொங்கொளி
[முன்பினன்;
மும்மலம் கழிப்பி மூதுயிர் தம்மைத்
தம்மடிப் படுத்தும் கொம்மை சான்ற
95 அருமறை வாசகம் ஆய்ந்து தெரிக்கும்
ஐந்தெழுந் தானமை மந்திரக் கிளவியாம்



திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீ மெய்கண்டசுவாமிகள் மடம் திருவெண்ணெய்நல்லூர்.

நமசிவா யப்பெரும் நற்பெயர் நயந்தோன் ;
மானிடம் தெருளுற மானிடம் பொறுத்தோன் ;
வால்வெள் ளேறுடை வலனுயர் கொடியினன் ;
100 இன்மை காண்புழி இமைப்பின் ஈந்தருள்
இமையா நாட்டத் திறையவன் சேவடி
படருங் கொள்கை பதிந்த நெஞ்சமொடும்
இன்றே செல்வுறின் இயல்புணர் புலவ !
இரங்கிய உள்ளத் தின்னசை யடங்க
105 இன்னே பெறுகுவை முன்னிய நலனே ;
இனியவன், வேரியல் பதமுறும் ஏனமும்
முடிகொளும் அன்னமும் முறைமுறை
[களிகொளப்
பகைதவிர் தந்தியும் பற்பல வேங்கையும்
மணியொளிர் கட்செவி மதுப்பொழி யிருலும்
110 தோரணக் கிள்ளையும் துதைபல கவரியும்
களிமயில் ஈட்டமும் அளிபயில் குவளையும்
வளிபொர வணங்கி அரவர வெனமுரல்
வரைபல சூழ்தர வழிபல இவர்தரும்
வேதநீள் கோயில் விளங்குறத் துளங்கும்
115 திருக்கை யிலாருக் கிருக்கை யாகிய
திருக்கை லாயத் திருத்தலும் உரியன் ;
[அதாஅன்று,

## 2. திருவெண்ணெய்நல்லூர்

தானுடை ஒருயிர் தங்குறூஉம் அங்குரம்
தானிகழ் வித்தினைத் தண்ணியல் மென்புலம்
தகுவிளை வெய்துவான் தடவயற் குடையவன்
120 தருகருத் துறுபதத் தகுமுறை தெளித்திடல்
நிகர்வுற மன்பதை நிலவுறும் உலகினை

மடுத்தமர் மாயை விடுத்தருள் திறத்தினன் ;
ஐம்பெருங் குழுவினோ டருள்நெறி
[நடாத்துறும்
முரசெறி யரசனின் முந்துறும் ஐவரும்
125 முறைமுறை தொழில்செய முதன்மைகொள்
[மூர்த்தியன் ;
அலகிலாப் புவனத் தாரிருள் இரிந்திட
இலகொளி பரப்பி யாவையும் விளக்குறும்
பல்கதிர்ப் பரிதியின் இடைநிவந் தொளியுமிழ்
பளிங்கென விளங்கிடும் பான்மைத் **தொருமுகம்;**
130 புரமுறை இறைவனின் பொருந்தி மன்பதை
புறந்தரும் சிந்துரப் பொலிவுடைத் **தொருமுகம்;**
பார்முதல் யாவையும் படுத்தினைப் பகற்றி
ஆருயிர்க் கறிவருள் அணிமைத் **தொருமுகம் ;**
மன்னுயிர்க் கிம்மை மறைத்திடு தன்மைச்
135 செந்நிறத் தொளிகொள் செவ்வித்
[**தொருமுகம் ;**
நுவல்மறை யமர்ந்தே நுண்மைம்யு பருமையும்
நன்மையும் வழங்கருள் வெண்மைத்
[**தொருமுகம் ;**
கிளத்தற் கியலாக் கெழுதகை பொதிந்தங்
கறிதல் வாரா அறிதுயிற் றெருருமுகம்;
140 அளப்பரு மதோமுக மமைவுற் றிருப்பப்
புரத்தல் முதலாஞ் சிறப்பமை தொழில்புணர்
நான்மறை நவில்முகம் நான்கினோ டுயிர்முதல்
ஒருமூன்று மொழியும் உயர்முகம் ஒன்றிட
ஐம்முகம் மறைமுறை அருள்மிகுத்
[தொழுகலின்
145 எனைத்துயிர் தமக்கும் ஏமம் புணர்க்கும்
பாயலும் பனிப்பும் பரவிடல் பொதிந்த

மொய்ம்பமை யகலத்து முழுவலித்
[திணிதோள் ;
மும்மை மாயை முயங்கல ரொன்றும்
தன்மை விளக்கும் தறுகண் முத்தலை
150 ஆலம் பிலிற்றும் சூலத் **தொருகரம் ;**
பருமுதல் தடிந்து பாதபம் வீழ்த்துமா
றுருமுதல் துணித்திடு மொள்வாய்ப் பரசிற்
**றொருகரம் ;** இருவினை யுயர்குவைத் துகளினை
எரிசெய் யொள்ளழல் ஏந்திடும் **ஒருகரம் ;**
155 ஆர்க்குறு மவாமுதல் அலக்கண் துணிக்கும்
கூர்வாள் குலவுறும் **ஒருகரம் ; ஒருகரம்**
நெகிழ்வில் நெஞ்செனும் நீள்சிலை பொடிக்கும்
தகைசால் வச்சிரம் தயங்குறும் ; **ஒருகரம்**
நுணல்புரை சிறுமதி நுங்கிடும் பணித்தே ;
160 ஐம்புல வெங்களி றடக்கிப் பிணிக்கும்
பாசாங் குசங்கொள் பண்பிற் **றொருகரம் ;**
நல்நெறிக் கழைக்கும் நாக்கிளர் மணிகொண்
டிரட்டிடு மியல்பிற் **றொருகரம் ;** அடியவர்
அஞ்சுவரல் தவிர்க்கும் அபயத் **தொருகரம் ;**
165 வரைவில வழங்கும் வரதத் **தொருகரம் ;**
மாயிருந் தகைசால் ஆயிர ந் திருமுகன்
அம்முகம் ஏற்குறும் அளவில் பல்கரன் ;
முத்திறத் துயிர்க்கும் முறைமுறை யருள்செய
எத்திறத் திறைக்கும் ஏவல் தரும்பொருள் ;
170 ஒருமலத் தாருயிர்க் குண்ணின் றருளியும்,
இருமலத் தேய்ந்தோர்க் கெதிர்நின் றருளியும்,
மும்மைச் சகலர் தன்மைக் கியைவசெய்
செம்மை ஆசான் ஆகுறும் தேசிகன் ;
முச்சுடர் அவிர்ந்தும் முசித்தல் செல்லாப்

175 பந்தத் தகவிருள் பரிகரித் தருள்மார்
**நந்தி சனக்கு ஞான நற் சோதிதந்**
தகவழி அமைஇச் சகவழி அடைத்தும்,
தடுத்தாட் கொள்வன் தொண்டர் தம்மைத்
தடுத்தாட் கொண்டவர்த் தாங்கிய
[**அருட்டுறை ;**
180 மறையான் தருபாற் கடத்தகம் மதித்தே
மண்ணை யுண்டொழி மாசறக் கழிப்பான்
வெண்ணெய் உணர்த்துபு வீடருள் **விழுப்பதி ;**
கவிக்கிறை பாடியைக் கவிக்கிறை யாக்கிப்
புவிக்கருள் புண்ணியன் புகன்றுறை பூம்பதி ;
185 பெண்ணை வேர்கீண்டு பெருகுறும் பெண்ணைத்
தீம்புனல் தடவயல் கன்னலொடு செந்நெலும்
ஆம்புவிக் களித்திடும் அருமைத் தாயது ;
போதக் கதிர்விளை பொற்பமை நற்பதி ;
துங்கர் குழீஇய சங்கத் தமிழ்ப்பதி ;
190 ஆவடு துறையினர் வழிபட அருள்பதி ;
இத்தகை மொய்த்துறும்
கடங்கொள் வெண்ணெய்க் கடிநக ரகவயின்,
**அருள்மறை உமைச்சிவம்** அடிவழி **தருமுதல் ;**
மெய்கொண் டாரெலாம் மெய்கண் டார்கெனப்
195 புறத்துறு மழவிளம் பொலிவமை சிவமெனப்
போற்றிடப் பொலிதழிழ்ப் போதம் பொழிந்தே
**மெய்கண் டார்**என மிளிர்தலும் உரியன் ;
[அதா அன்று,

## 3. சுசீந்திரம்

பார்கொள் பல்வகைப் பாற்படு பிறவியுள்
ஏர்கொள் மானிடர் ஏர்புகொண் டுண்டிட,
200 நான்குபடு கொள்கையின் ஆறுபுரி நல்வினைப்



திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டதேவர்.



சுசீந்திரம் தெப்பக்குளமும் திருவாவடுதுறை மடமும்.

புண்டரக் கரைவரைப் புரையோன்தாடலை
புணர்ந்துறை நயப்போர் புரிகடன் மூன்றினே
டொன்றுறல் உணர்த்திடு நன்றுசெய்
[நோன்பினர்,
நாப்பயில் கிளவியொடு நாள்முறை நயந்தே
205 நூன்முறை மேன்முறை நுவன்றிடும் பூசனை
உஞற்றிட ஒளிர்ந்தே, உருகுநர்க் கின்பினை
எற்புத் துளையெலாம் இசைந்திட எழிலியின்
வழங்குறு முருவொடும், தண்ணருள்
[மலிபொடும்,
உம்பரின் உருத்திர கோடியர் உவப்புற,
210 இம்பரின் உருத்திர கோடிய ரெனநிகழ்
கண்ணியர் உருத்திர கோடியர் கண்டிட,
மின்னொளி வேலவர் தன்னியல் மன்னியர்
பின்னவர் வேலவர் விரைமலர் பெய்திட,
மேலவர் சரியையின் மேவியே சரித்திட,
215 நார்பெறு முளத்தினர் நடந்திடக் கிரியையின்,
உளம்பிணி யுரத்தினர் யோகத் துறைதர,
மேனிலை ஞானியர் நான்கினுள் மேவிடக்,
கடுங்கொதி துழவிய காம்பகல் மூழையின்
அடும்பிணி அழுந்திய அடியனும் அளிபெற,
220 நெடுங்கடல் முழக்கத்து நிச்சலும் வழிபட,
நீள்சிலம் படிமரை முடிகொள நிமிர்ந்திட,
மூவர் தேவரும் முன்னவன் முகிழ்ப்பெனத்
தரையவர் தெரிதரத் தாணுமா லயனுற
நெஞ்சம் நினையுமுன் னெஞ்சா வளநெடு
225 துஞ்சா நிலையருள் பஞ்சாக் கரரெனக்
குவலயத் தேவருங் குடந்தம் பட்டெழப்,
பசிமுதல் துடைக்கும் வசிவளன் பெருகிடச்,
சுசிஇந் திரம்புகல் சுசீந்திர வளநகர்

வசிஇந் திரனென வயங்கலும் உரியன் ;
[அதா அன்று,

## 4. திருப்பெருந்துறை

230 அரும்பொருள் விழைகுநர்க் கவாத்தபச்
[சென்றளி
பெருந்திறல் மீகான் பொருந்துற மீக்கிளர்
நோக்கமை பல்கொடி நுடங்கிடு பெருங்கலம்
துறைதொறுந் துறுமிட, நுரைபல நரைவரல்
அறைவரை புரைதிரை ஆழ்கடல் வளைஇய
235 நானிலத் துறுபிறப் பெய்திடு நகுதொழில்
உணர்வறி விவைமுறை தொகைஇய
[உடலுளம்
உயிர்கொள் மக்கள் உலகியற் பொருள்கொள
நிறுவிய சமயத் துறைபல நலஞ்சமை
உறுப்பெனக் கொண்டியல் தொன்றிசை
[ஒருகுடை
240 வயவேந் தெனப்பொலி வாழ்வுடைச் சைவம்–
நுவல்பொருள் மூன்றன் நுணுக்கம
[துளங்கொள்
பான்மையிற் பலப்பல படிவழிப் படர்ந்தே
ஒன்ருய் வேருய் உடனுய் நின்றே
நன்றுபுரி நாட்டத்து நங்கை நாயகன்
245 தன்பே ரியல்பும், என்றும் தந்நிலை
தங்கும் அடிமைத் தன்மைத் தென்பதும்,
தளைந்தும் விளைந்தும் களைந்தும் தணிந்திடும்
நீர்மறை பாசத்து நீர்மையும் தெளிந்தே
உப்பினை உறழ்தரும் பாசம் ஒருவியே
250 அப்பினை ஒப்புறும் ஆன்மக் காக்கம்
பற்பல நூலகம் பன்முறை பயின்றே
தெளிவுறல், வேட்கை தெண்கடல் பருகியும்

நீங்கா மரபின் நிலையெனத் தெரிந்தபின்
உண்மை ஞானத் துறைப்பினுக் குழன்றுழி,
255 இருவினை நிகர்ப்பும் இயல்மல பாகமும்
சரியை முதலா கிருபதொடு சார்ந்த
நான்கவை முறையே நல்லருள் நடாத்திட
அந்நெறித் தீக்கையி னமைந்து கடந்தே
ஆசான் பேரருட் கவாவிக் கிடப்புறச்
260 சத்திப் பதிவின் தரந்தெரி தன்மையின்
உண்மை ஞானத் துதயக் கதிர்கிளர்
வண்மை யாசான் வயங்குற விளங்கும்
அதிட்டா னப்பெய ராவே சத்தால்;
இரும்பினைக் காந்தம் ஈர்த்திடல் நிகர்ப்ப
265 உடல்முதல் மூன்றும் ஒழிவறக் கவர்ந்தே
அடல்மலம் அடர்த்தங் கருட்பதத் தார்த்திட்
டைந்தெழுத் தருள்மறை அமுதினை வார்த்தே
மஞ்சன மருவிமா மகிழ்வினுள் மூழ்த்தும்
தஞ்சமா மான்மாத் தஞ்செயல் கழித்தே
270 என்றுரை ஆகமத் தியல்பிவை இருநிலம்
என்றும் தெரிதரக் காட்டிடற் கெம்பிரான்
சிறுதுறை பலவும் செகுத்திடும் பெருந்துறை
தேர்ந்தன னுமென ஞாலம் செப்புறும்;
அவிகொள் மூவெரி அனைய வெம்மையின்
275 வற்றிய என்னுளம் முற்றும் நனைந்திட,
முற்றுணர் மோனனும் கற்றறக் கவாப்பெற,
அன்புபொசி கண்ணீ ராறது புரளப்
பொற்கலத் தெந்தை பூரணன் கருணை
முகந்து முகந்து முழுதுல கினுக்கும்
280 வார்த்திடு மியல்பினன் வாதவூ ரர்க்காக்
குருந்தொசி கண்ணன் திருந்திய செங்கை
உறழ்ந்திடு மறைமல ரோரா யிரமொண்

சங்கஞ் சுமக்கும் துங்கத் தடங்கரை
மருங்கெழு குருந்தின் மணிநிழ லமர்ந்தும்,
285 மறைப்பரி மாறியும் மண்ணடி பொறுத்தும்,
வாச்சிய ருமெனும் பேச்சது மெய்பெறத்
தென்முகத் தெய்வத் திருவோ லக்கம்
நின்முகத் தெதிர்கொள் வண்ணம் நிகழ்த்திட,
முந்துரை ஞான போதகம் முகிழ்த்திடத்
290 தந்துரைத் தாள்புரி தண்ணருள் ததும்பிட
ஆன்ம நாதத் தருந்திறல் விளங்கிட
நேசா லயந்திக ழாசா ருகிமுன்
பெருந்துறை பேணிய பெருந்தகை
[விளங்கிடப்
பெருந்துறை யமர்ந்து பேணலும் உரியன் ;
[அதாஅன்று,—

## 5. திருவிடைமருதூர்.

295 நெடுவரைக் குடகத் துதித்து நெடுங்கடல்
குறுகுங் குறிப்பொடு குலமலர் தளிரினம்
தொடைப்படச் சுமந்தங் கிடைப்படு
[நிலக்கெலாம்
நீரமு தருத்தி நீள்கரை யுட்புலம்
ஆழ்ந்து தெளிந்திடு மமைதி புலப்படப்
300 பொன்கொழித் தொதுக்கும் பூசத்
[துறைபொலி
காவிரி கவின்செய் கழனிநாட் டதுவே ;
இனிமை திணிந்த நெஞ்சமொ டியங்கும்
நீறுதிகழ் நெற்றி நிமலர் குழாமெனக்
கழையமல் கழனிக் கண்ணது ; காரிணைக்
305 கோழிலை விரித்துக் குலைப்பழம் படைத்துக்
கனிவுட னழைக்கும் கதலிகள் சூழ்வது ;
தெண்ணீர் சுமந்து சிவிறிவீ சன்பினர்



குருந்தமரத்தடியில் மாணிக்கவாசகருக்கு உபதேசித்தருளிய இறைவனை திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் தரிசித்தல்.

உண்ணீர் உணர்த்தி யோங்குறு தெங்கினம்
பாங்கர் நிழற்றி நிலவுறும் பாங்கது ;
310 பாசடை பரப்பிப் பல்விளக் கமைஇத்
தேசுடை மடுக்கள் இமைக்கும் திறத்தது ;
புலத்தடை நீராற் புலத்தடை யுயர்வினைக்
கண்ணெதிர் காட்டும் கால்களின் எழுந்தே
பூரண கும்பம் பொறுத்தழை பொற்பின்
315 தொண்டையங் கதிர்கொடு துலங்கி, [யறப்பயன்
ஒன்றுபல விளைக்கும் உவமக் கதிர்விரித்
தென்றும் போற்றுநர் கூற்றுவ ராயினும்
செம்மையிற் படீஇக் கைம்மாறு செய்தரும்
சாலிப் பைங்கூழ் வேலிகட் கிடையது ;
320 தேங்கம ழிருலிடைத் தாங்குறு மருதம்
உம்பரின் ஓங்கிப் பயன்படு மிடையது ;
சிற்றில் சிதைவுறச் சிறுதேர் நடத்திச்
செஞ்சொல் மதலையர் சிறுவிழா நிகழ்த்தும்
முன்றிலும், முதுமறைக் கிடையும் முக்கனி
25 ஒன்றிய மூவர்சொல் ஓதுறும் பள்ளியும்,
கலைபல பன்மொழி கற்கும் சாலையும்,
நெய்கொடு தீயினை வளர்க்கும் நிலைகளும்,
நெய்யடி சிலின்தீ யவிக்கும் நியமமும்,
விண்ணுல கினர்தமை வெருட்டி அழைத்திடும்
330 புண்ணியத் துவசம் பொலிந்தசை மாடமும்,
இருமருங் கினுங்கரை இயல்பது குறிப்ப
ஆறுகிடந் தன்ன அழகமை தெருக்கள்
புறஞ்சூழ் தரவிடை வாய்விடு பொன்வரை
நாற்றிசை யமைந்திடு தோற்றக் கோபுரம்
335 தணிப்பத் தானமை தவளப் பெருவரை
ஈரியல் சமைந்த பேரியல் பொருவும்

புகல்மரு தம்புணர் புரிசைக் கோயிலும்,
ஒருகோட் டத்துச் சுற்றுள் ளுறைதரும்
திருகோட் டித்திகழ் தெய்வதம் பலவும்
340 மருங்கு வட்டத்தே மன்னிடத் துன்னிய
மாடம் பலவும், ஆடரங் கவையும்
அடியா ராய்தரு மடியா ருறையுளும்,
அன்றே துறந்த அருந்திற லடிகளும்
மன்றே மறந்த மன்னரும் மன்னிய
345 தவம்புரி இடனும் தனத்துச் செல்வியும்
மவுனமா மங்கையும் மருவுறு மாடமும்,
சுவடிகொள் நிலையமும் சூழ்தர நாப்பண்
இடையினம் புரையுங் கடையனும் தடையற,
மருதிடைத் துளிக்கும் மணங்கமழ் தேறல் ;
350 மழவெங் களிறும் மறைசொல் மடங்கலும்
மருங்கின் வளர்க்கும் மதிதவழ் குடுமிச்
செய்யநீள் குன்றம் ; பையர வணைமிசை
ஐதுதுயில் கொள்ளும் ஆழியங் கையனும்,
நிரையிதழ்த்தாமரை முதல்வனும், நெருப்புறழ்
355 பீடுகெழு முருத்திரர் பெட்பமை நங்கையர்
காடுகெழு முனிவரும் கடிதொழி லெண்மரும்
எண்வரம் பிகந்த எளியரும் பிறரும்
இறைஞ்சிட இறைஞ்சிட இன்புவான் [பொழியும்
வரையா நலத்து வளந்திகழ் ஒண்முகில் ;
360 குருந்தடி சுவைத்த பெருந்துறை யன்பரும்,
பவப்பொழு தின்கண் சிவச்சொல் முனிவரும்,
வரம்பில் தொண்டுபுரி வரகுண தேவரும்,
தேவரும் பருகிடும் தெவிட்டா அமுதம் ;
காமற் கனலோன் ; காலற் கடிவோன் ;

365 தேவ தேவன் ; மூவா முதல்வன் ;
மடுத்தும் விடுத்தும் மன்னுறும் தெய்வம்
அடுத்துறை அரும்பதி ;
மெய்யிடம் அரும்ப, விரும்பு மேவுளம்
மலர்தர, அலர்தரும் விழிநீர் வழிதர,
370 அம்பல வாணரென அறைதரு மன்பர்
கருவிடை அடையா தருவுருத் தாங்கித்
திருவிடை மருதூர்த் திகழ்தலு முரியன் ;
[அதாஅன்று,—

## 6. திரு ஆவடுதுறை.

எழுத்தெலாம் வழுத்துறும் எண்பே
[ரொண்மலர்,
தன்னீர் விடுத்துடை யுள்ளத் தண்புனல்,
375 உரித்தமை கனியெனு மொண்மதி முதலாக்
கொண்டுபுரி பூசனைத் தொண்டர் முனமவர்
வேண்டிடு மிடந்தொறும் வெளிப்படு
[மியல்பினன் ;
வலம்வந் தலம்வந் தடியிணை வாழ்த்தும்
தலம்வந் தவர்க்கும் தரிசனம் தருவோன் ;
380 திண்ணிய அன்பின் கண்ணப் பர்போற்
புண்ணியர் பண்ணிடும் பூசனை யுகப்போன் ;
மலையும் காடும் மருதமும் கடலும்
நிலைதிரி பாலையும் நீங்கா நிமலன் ;
அனைத்துயி ருள்ளும் அமர்ந்துறை ஆசான் ;
385 நறுங்கனி காட்டியும் நற்கவி சூட்டியும்
நாளும் வழிபடும் நல்லவ ரிதயன் ;
குற்றியே குறுங்கலே கூர்நுதிப் படையே
நத்தியே அன்பொடும் நாட்டிப் பரவிடக்
குளனே வளனுடை நதியே காவே
390 தீவே மன்றே திடரே தீங்கனி

தாங்குறு தருவே பலர்தொகு தடமே
சந்தியே சதுக்கமே சாலையே ஞாலத்
தெந்தை இல்லிடம் இன்மையின் எங்கும்
வெளியன் அளியன் விரும்பலர்க் கரியன் ;
395 பெரியன் அணுவின் சிறியன் பேரிலன்
ஊரிலன் யாதும் யாவரும் உறைவிடன் ;
இன்னன் என்னல் என்வரைத் தன்றே ;
இடம்பட அமைத்தங் கிருக்கின் வண்ணம்
படத்துரு சிலையுருப் பண்பொடு நாட்டி
400 நறும்புகை முதலன விரும்புகை காட்டி
மஞ்சன மாட்டி மாலை நாற்றி
அறுசுவை யூட்டி ஆசையை வீட்டி
அடிமுடி சூட்டிப் பொடிபுனை புனிதர்
வழிபடு மடங்கள் இடங்கொள வாழ்வோன் ;
405 விண்ணே களிக்க விருந்திடல் வீணென
மண்ணே உயர்த்த மன்னிய சிவமே ;
விரிசடை கரந்த விகிதன் எனினும்
தரிதொழில் மறையாத் தண்மலர் **முடியன்** ;
காமன் வேமழற் கடுந்திறல் குறித்த
410 கனற்கண் மறைக்கும் அனற்பொடி **நுதலன்** ;
கேவலக் கங்குல் கெடுக்கும் **விழியினன்** ;
இடைநின் றொன்றுகுறி எட்பூ **நாசியன்** ;
புல்லர்ப் புகழாப் பொருள்மொழிப் புலவர்
நல்லிசைக் கவிகொள் நகுகுழைச் **செவியன்** ;
415 இரத்தல் நீத்திவ ணிருத்தல் தெரிப்பான்
புரத்தல் புகல்புன் முறுவல் **வாயினன்** ;
கறுத்தல் பிழையெனக் காட்டுங் கருத்தின்
கரைவிடங் கரந்த கவினொளி **மிடற்றன்** ;
நாமகள் அச்சம் நழுவிப் போற்றிடச்



திருவாவடுதுறை ஆதீன மடாலய முகப்பு.

420 சேமக் கண்டிகை செறிந்திடு **புயத்தன் ;**
ஏனத் தெயிற்றினை எடுத்துக் கண்மணித்
தாமத் தெரியல் தாழ்தட **மார்பன் ;**
நாதனைத் தம்மை நவில்தடை யுணரார்
வேதனை வீழ்த்தும் போதனை தெரிதரப்
425 போதநூல் சுமக்கும் பொருள்குறி **கரத்தன் ;**
வெவ்வியல் வேங்கை யுரிவிரித் துடாது
செவ்வியல் செப்பும் துவருடை **மருங்கினன் ;**
தன்னடை குநர்தம் தலைக்கணி யாகிய
செம்மரை சுமக்கும் **சேவடிச் சித்தன் ;**
430 நீறுமேற் பூத்தொளிர் நெருப்பினை நிகர்க்கும்
பரந்தவெண் பூதிப் பவளத் துருவினன் ;
அஞ்சக் கரத்தன் அணிமலை மருத்தன் ;
நெஞ்சத் திருள்கடி நிமலக் கதிரோன் ;
செஞ்சொற் புலவர் சேமவைப் பெனயான்
435 அறிதிறம் வகுத்தனன் ; அன்னவற் சார்ந்து
குறியுளங் குவித்துத் தறியெனப் படியின்
வாரணப் பரிசும் ஆமையின் வண்ணமும்
மீனுடை நோக்கும் நின்மிசை மிகுத்தே
செம்பொருள் சேர்க்கும் செவ்வியின் ; [செய்யனை,
440 ஊழி முதல்வ ! ஒண்மலைச் செம்மல் !
ஓதரும் பெரும ! உணர்வரும் புலவ !
விடைமணித் துவச ! வேதிய ரருமறை !
இருகை மதவலி ! எண்கை யேந்தல் !
பிறைவளர் முடிய ! பெரியரிற் பெரிய !
445 தீயினுட் டெறலே ! பூவினுள் மணனே !
கல்லினுள் மணியே ! சொல்லினுள் வாய்மை !
அறத்துறை யன்பே ! மறத்தின் மைந்தே !
பூதத்து முதலே ! வேதத்து வித்தே !

அருட்குடை யரசே ! அளியே ! ஒளியே !
450 வேற்றுமை யில்லோய் ! மாற்றவர் கூற்றே !
கொன்றைத் தாரோய் ! கொல்லர வணிவோய் !
சால்வ ! தலைவ ! சாந்த ! சமர !
இமையா நுதல ! எமையாள் மரப !
வேள்வி முதல்வ ! வித்தகச் சமய !
455 மாதவர் தவமே ! ஏதமில் குணனே !
தமிழின் தந்தை ! இமிழ்கலைக் கிறைவ !
ஆலமர் குரவ ! ஆலமார் களத்த !
பாடுநர் பயனே ! நாடுநர் நயனே !
ஒருவ ! உருவ ! உவமனில் அருவ !
460 தருவே ! கனியே ! தண்மதுச் சுவையே !
கடலே ! அமுதே ! கண்ணுதல் வெளியே !
விழியே ! மணியே ! வீடருள் விமல !
மலவிருட் பகையே ! மாணொளி விளக்கே !
கவலை துடைப்போய் ! கருணை நிதியே !
465 உள்ளெழு மதியே ! உருகுநர்க் கின்பே !
அடியருக் கடிய ! அறியா அடியோய் !
எடுத்த பாத ! தடுத்த செங்கர !
நாடக ! நம்ப ! நல்லியல் முனிவ !
அணியை ! நணியை ! சேய்மைய ! ஐய !
470 வானவர் தாதை ! ஏனையர் தாஅய் !
ஆழி யளித்தோய் ! அரசு கொடுத்தோய் !
பரிகல மருள்வோய் ! படைமுதல் தருவோய் !
தோடுடைச் செவிய ! பீடுடைப் பெம்மான் !
நந்தலில் சோதி ! வந்தாள் செல்வ !
475 எயிலெரி நகைய ! இளநிலா முறுவல !
நாதா ! போதா ! நாதா. தீதா !
கற்றவர் கரும்பே ! நற்றவர் பேறே !
பெரிய நாயக ! பேசற் கரிய !

மறுவிலா மணியே ! குறிகுணங் கடந்தோய் !
480 உருவொலிக் காய ! ஒடுக்கிடு மருத்தே !
வெம்மைப் பரிதி ! தண்மைப் புனலே !
புரக்கும் புவியே ! புண்ணிய மூர்த்தி !
பரசிவ ! பரம ! பரவெளி ! பகவ !
தேவே ! துறைசைத் திருவே ! தேசிக !
485 பேரா யிரனே ! ஊரா யிரனே !
நாடற் கெளியோய் ! **நமச்சி வாய !**'
எனவே இதயம் இளகப் புளகம்
பூப்பப் புடையே புனிதர் இறைஞ்ச,
உமையான் வழிபட் டுமையாள் ஆகியும்,
490 மாசிலா மணியடை யொப்பிலா மங்கையும்,
போகம் தரவளர் மாளிகைப் புனிதரும்,
பவமோடு வித்த நவகோடி சித்தரும்,
கருமூ லந்தவிர் திருமூல தேவரும்,
அருந்தவப் பேறடை பெருந்தவ மன்னரும்
495 போதியும் விடையும் புணர்பதி நடுவண்
தேவநன் மரபும் பூதநற் குலமும்
அபிடே கமதற் காதியா முறையும்
ஒருங்கமை உயர்கோ டொண்கயி லாயத்
தடவரை சமைந்த மடமா டத்துள்
500 வருபத்தி யினரை இருபத்தி யொன்றெனத்
தெருளுறுத் தமரும் தேசிக மணியாம்
**சுப்பிர மணிய** னிப்புவிக் குரவன்
உலகம் உய்ந்திடற் கென்று முளுற்றும்
நேசப் பூசனை ஈசனு ராகி
505 அழகிய திருச்சிற் றம்பல முடையார்
அம்பல வாண ரான்ம வயித்தியர்
தம்மொடு மருவித் தற்பர மாகிப்
பஞ்சாக் கரமெனும் பண்பமை தன்பெயர்

நெஞ்சால் நினைப்பினும் நீடருள் சுரக்கும்
510 நாவடு நீங்கிட நாவலர் புகழும்
**ஆவடு தண்டுறை** அமர்தரு வோனே.

---

**கலி விருத்தம்**

ஆவடு தண்டுறை ஆதி மூர்த்திதன்
பாவரு மடிபுக லாற்றுப் படையினை
ஓவறு மன்பொடும் ஓதுநர் கேட்குநர்
ஏவரு நலமெலா மெய்தி வாழ்வரே!

---

ஸ்ரீ நமச்சிவாய தேசிகர் திருவடி வாழ்க.

## நூல் மூலத்தின் பிழையும் திருத்தமும்.

| நூற் பக்கம் | பாட்டு வரி எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 13 | தமலர்மரை | தலர்மரை |
| 4 | 96 | ஐங்தெழுங் | ஐங்தெழுத் |
| 6 | 136 | நுண்மைம்யு | நுண்மையும் |
| 11 | 282 | மறைமல | மரைமல |
| 16 | 406 | மன்ளிய | மன்னிய |
| 16 | 418 | கரைவிடங் | கறைவிடங் |



திருவாவடுதுறை ஸ்ரீ கோமுக்தீஸ்வரசுவாமிகோயில்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருஆவடுதுறை

திருக்கயிலாய பரம்பரை மெய்கண்டார் சந்தானம்

ஆதி

# ஸ்ரீ நமச்சிவாய மூர்த்தி

# ஆற்றுப்படை நூலின்

# குறிப்புரை

---

## 1. திருக்கைலாயம்.

### வரி 1—3:

முடிபு: உயிர் அறிவுற, இணங்குற எழும் அகரம் அமர்ந்தாங்கு;

வரி—1.

உலகம் — மங்கலமொழி. இங்கு இந்நிலவுலகைக் குறித்து நிற்பது. இஃது ஆகாயத்தினின்றும் முறையே உண்டாதலினாலும், முடிவில் உலத்தல் அடைதலினாலும், இடையே மன்பதைகளின் குற்றங் கெடற்கண் பயன்படுதலினாலும் இப்பெயர் எய்திற்றென்னலாம். அசுத்தமாயா தத்துவங்கள் இருபத்து நான்கினுள் இஃது இறுதியதாகிய பிரகிருதி அல்லது பிரபஞ்சமாம். இது, பிண்டத்தோடு கூடிய உயிர்க்கு நிலைக்களமாயிருத்தல் யாவர்க்கும் உடம்பாடாகலின் இச்சொல் தந்து இந்நூல் தொடங்கப்படுகின்றது.

பொறுத்தல்—தாங்குதல்; அளித்தல் — தருதல்; எல்லாப் பொருட்களையும் தாங்குதல் நிலத்துக் கியல்பாம் அன்றி, அகழ்வாரையும் தாங்கும் பொறையும் இதன்பாலுண்டென்பர். உயிர்க் கிடனு கிய உடம்புகள் திடம் பெற்று வளர்தற்கான உணவு முதலியன ஆக்கியளித்தலும் செய்கின்றமை வெளிப்படை.

உயர்உயிர்-மக்களுயிர்கள்; ஓரறிவுயிர் முதலாக உயிர்கள் பல திறத்தனவாயினும் ஓதி, உணர்ந்து, ஒழுகி. உயர்கதியுறுஞ் சிறப்பு மக்களுயிர்க்கே உள்ளதோருயர்வாகும். புண்ணியத்தால் சிறந்த தேவருயிரும் முத்திப்பேறெய்தற்கு மக்கட் பிறப்பே யடையவேண்டி யிருப்பதும் இதன் உயர்வுக்குச் சான்றும். "மக்கள் தேவர் நரகர் உயர்திணை" என்ற விதிக்கண் மக்கள் என்னுஞ் சொல் தேவர் என்னுஞ் சொற்கு முற்பட அமைந்துள்ளமை காணத்தக்கது. எல்லாவிதஉயிர்களும் படிப்படி யாக உயர்நிலையே எய்துகின்றனவென்பது நூல் துணிபாகலின் வினைத்தொகையாகக் கூறப்பட்டது.

அறிவுஉற—தெருள் பெற; உயிர்கள் உயர்கதி பெறுதற்கு உறுதுணையாக அமைவன மூன்றும். அவை உயிர்க் குரிய அறிவு; உள்ளத்துக்குரிய பத்தி; உடம்புக்குரிய ஒழுக்கம். எனவே, கல்வி யாலும் கேள்வியாலும்அறிய வேண்டுவன அறிந்து, அன்பும் அருளும் பூண்டு தூய ஒழுக்கத்தோடுறை யின், மேற்கதி நண்ணுதல் ஒருதலையாம்.

வரி—2.

இலகுறு மொழி— விளங்குறு மொழிகள்; காலம், இடம் இவைகட்கேற்பப் பற்பல மொழிகள்

தோன்றி. வழங்கி. வழக்கொழிந்து, மறைந்தொழி தலுண்டு. இவற்றுள் அவ்வக்காலத்து அவ்வவ் விடத்து வழங்குதலுறும் மொழியை இத்தொடர் குறிக்கும்; அன்றியும், மக்களுக்கு இலகுவாக அப் பியசிக்கத்தக்க தன்மையுடைய மொழி எனினுமாம். இலகு = சுலபம்.

எழுத்தினம்— எழுத்து வகைகள்; உயிரும், மெய்யுமாம்; முதலும் சார்பும் எனினும்பொருந்தும். எழுத்துக்கள் யாவும் ஒலிவடிவாலும், வரிவடி வாலும் அகரத்தையே முதலாகக் கொண்டுள்ளன என்பது இலக்கணம் "அகரமுதல எழுத்தெல் லாம்" என்பது திருக்குறள். தனது முதன்மை குறித்தற்கண் கீதையிலும் கண்ணன் இதனையே எடுத்தோதியுள்ளமை தேற்றம்.

இணங்குறல் – கூடிநடத்தல்;

வரி—3

இயல்பு எழும்—சுவயமாகவே உள்ள; விகார மின்றி நாதமாத்திரையால் எழுதல் இயல்பெனப் படும் அருவா யிருந்து, உருவருவமாகிப் பின் உருவப்பட்டு வருதல்.

இனிதமர்தல்—தலைமையாயிருத்தல்.

ஆங்கு—போல. உவமஉருபு

## வரி 4–7:

முடிபு: கரந்து கடந்து, ஆகி, பரந்து, அவிர் பரம் பொருள் எனமுடிக்க

வரி—4

யாவையும் — இவ்வுலகமேயன்றி எண்ணற்ற எல்லா அண்டங்களையும், அவ்வண்டங்களுள் பொருந்திய எல்லா வகையான பொருள்களையும் தன்னுள் அடக்கிய பொருள் இறைவன். "தன் அருள் வெளிக்குளே அகிலாண்டகோடியெல்லாம் தங்கும் படிக்கு" என்பர் தாயுமானாரும்

யாவரும்—எல்லா வகையான உயிர்களேயன்றி ஒரு மலத்துயிர். இருமலத்துயிர், மும்மலத்துயிர்களெனப்படும் சகலராகிய உயிர்கள் முழுமையும் என்பதாம் அவன், அவள் எனப்படும் ஆண் பெண்ணாகி வாழுமுயிர்கள் எனினும் ஆம்; எல்லாப் பொருள்களும் உயர்திணை அஃறிணை என்ற பகுப்புக்களுள் அடங்குவதுபற்றி யாவையும். யாவரும் என்றுரைக்கப்பட்டது. இவ்விரண்டு வகைகளும் அவன்—அவள்—அது என மூன்றாக விரித்துரைக்கப்படும்.

(சிவ போ சூ 1)

அகப்படக்கரந்து — இவ்வெல்லாமும் தம்முள் ஏகதேசத்தில் அடங்கிக்கிடக்குமாறு ஒடுங்கச் செய்து; பெரும்பாலை (அ) வேலை வெளியில் சிறுபசுந் திட்டுக்கள் ஆங்காங்கு அமைந்து கிடத்தலையொப்ப இறைவெளியில் எப்பொருளும் அப்பொருள் சுமந்த அண்டங்களும் அடங்கியுள்ளன" என்க. கரத்தல்—மறைத்தல் தம்மை எவ்வுயிரும் எளிதில் அறியவொண்ணா நிலைமைத்தாயிருந்து; ஒடுங்கிய இடனே உண்டாதற்கும் களனாதல் பற்றிக் கரந்து எனப்பட்டது. அனைத்தும் ஒடுங்கிய நிலைமையில் ஏகப்பொருளாம். "அவ்வுருத்தன்னுள் அடக்கிக்கரக்கினும் கரக்கும்"—புறம்

வரி—5

உயர்வொடு நலனிடை உவமங்கடந்து — எப்பொருளையும், இவ்வுலகம் முதற்பொருளுக்கு உயர்விலும், நலத்திலும் உவமங்காட்ட இயலாதென்பது கருத்து. "உவமன் இல்லி" என்றார் அப்பர்சுவாமிகளும். 'ஒப்புடையனல்லன்' என்பதும் இதுவே. எத்தேவரின் எவ்வுயர்வும் இப்பெருந் தேவின் உயர்வுக்கு ஈடாகாது; எத்தேவின் எக்குணநலங்களும் இத்தேவின் நலத்துக்கிணையாகா; இங்ஙனம் சிந்தையாலும், உரையாலும், செயலாலும் உவமங் காட்டவொண்ணாக் கடந்தநிலையே கடவுள் இலக்கணமாயிற்று.

வரி—6.

உரைவரம்படங்காமை — வேதாகமங்கள் தாமும் இறை நிலையைப் பரிபூரணமாக எடுத்துரைக்குமியல்பினவல்ல என்க. "அநிர்வசன்னியம்" என்னும் பெயருண்மையும் இஃதுணர்த்தும். "உடம்பெலாம் வாயாய் நித்தம் பலகவிமாலை சூடிப் பரவினும் முடியுங்கொல்லோ"—என்பதும் இன்ன கருத்தே கொண்டது.

உயிர்க்குயிராகி — உடலை உயிர் உள்ளிருந்து நடத்துவது போன்று, உயிரை உள்ளிருந்து நடத்துவதாகி; உயிர், மலத்தோடு கூடிச் சிற்றறிவும் சுதந்தரவீனமும் உடைமையால் அதனைப் பேரறிவும், சுதந்தரமும், மலரகிதமுமான பரம்பொருள் உள்ளிருந்து நடத்தவேண்டியுள்ளது; ஒரு மரத்தில் இரண்டு பறவைகள் என்றும், அந்தராத்மா என்றும், அந்தர்யாமி என்றும் பல்வேறு விதமாக இச் செய்தி, நூல்களில் குறிக்கப்படும். "உயிர்க்

குயிராய்த்தழைத்ததெது?" என்பது மேற்கோள், "அரன் உயிர்களின் இரண்டறநிற்பன்" என்பதும், அரன் சருவ வியாபகன் என்பதும் இதனால் தேறப்படும்.

வரி—7.

அகம்புறம் பரந்து அருள்—உள்ளும் புறம்பும் இருந்து கன்மவழி செலுத்தி உயிர்களை நற்கதி அடைவிக்கிறது பரம்பொருள்; இங்ஙனம் புரிதல் இறையின் அருட் செயலால் நிகழ்வதாகும். இவ்வருளை அருட்சத்தியென்றும், பரை என்றும் இயம்புவர்

அவிர் சுடர்ப் பரம்பொருள் — உஷ்ணமும், வெளிச்சமும், வேகமுமுடைய சாமானிய சுடர்போலன்றி, எப்போதும் பிரகாசிப்பதாய் எங்கும் ஒளிர்வதாய், சத்து, சித்து, ஆனந்தப் பிழம்பாய் "ஓவற இமைக்கும் சேண்விளங் கவிரொளி" யாய் விளங்கும் மேலானதான பொருள். இம்மைக்குதவும் பொருள் போன்று எம்மைக்கும் உதவுவதாகலின் பரம்பொருள் எனப்பட்டது. "சோதியே; சுடரே! சூழொளிவிளக்கே"; 'தூண்டு சுடரனைய சோதி கண்டாய்" முதலிய மறைமொழிகளும் இதனை உணர்த்தும் "ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ்சோதியை" என்பது திருஎம்பாவை.

## வரி 8–11:

முடிபு: அது பேரியற்கை; வித்து; உருவம்; காட்சித்து

வரி—11.

அது – சுட்டப்படும் தன்மையில்லதாயினும் சுட்டப்படுவதாகிய அப்பொருள் —

வரி—8.

காலம்—எவ்வகைப் பொருளின் தோற்றமும் இறுதியும் காணவல்லது காலம் உயிர்கள் நடப்பதற்குக் கால் போல், தோற்றமும் நிலையும் இறுதியுமாகிய நிகழ்ச்சி நடப்பதற்குக் காலாக நிற்பது. யாவகைத் தோற்றமும் இறுதியும் தான் காணவல்லதாயினும் பரம் பொருளிற்கு அவ்விரண்டு மின்மையால் அப்பொருளை அகப்படுத்து மாற்றல் காலத்துக்கிலது.

கவின்பேரியற்கை—அழகு காணும் நோக்கோடு எப்பொருளையும், இயற்கையையும் காண்பார்க்கு அழகொன்றே பல்வேறு கூறுக எங்கும் தங்கியிருத்தல் புலப்படும். இவ்வியற்கை யழகுகள்யாவும் பேரழகும் பேரியல்பும் கொண்டதொரு பெருந் தேக்கத்தினின்றும் சிறுக வெளிப்பட்டவையே யாகும். ஆதலின், இங்ஙனம் உரைக்கப்பட்டது. தன்னை ஆக்குவாரின்றித் தானே அமைவது இயற்கையாம். உலகுக்கு இப்பெயரிட்டு வழங்குதல் உபசரணையாகும். பரத்துக்கே உண்மை.

வரி—9.

ஆலம்........வித்தே (1) நுண்ணிய வித்தினின்று திண்ணிய ஆலமரம் தோன்றுவது போல, இப்பரம் பொருளாகிய வித்தினின்று யாவும் தோன்றலுறுகின்ற தென்க; சாதாரண வித்து, மரத்தினின்று தோன்றும் சிறுமை யுடையது; ஆனால் இப்பெரு மூலவித்து தானே முளைத்த தாகலின் அருந்திறல் என்ற அடைதந்து கூறப்பட்டது. இஃது இறைமையின் சூக்குமநிலை; இதனைச் சூனியநிலையென்றுரைப்பாருமுளர். (2) அன்றியும், கல்லாலின் கீழ

மர்ந்த பொருளிது என்பதும் இதன் பிறிதொரு பொருளாம்: மரத்தின் கீழ், வித்துக்கிடப்பது போல, இப்பொருள் கல்லாலின் கீழிருப்பதாகும் என்னலாம். (3) மேலும் அழிப்பதே தன்னுற்ற லாகக் கொண்ட ஆலம் என்னும் நஞ்சு. இப்பொரு ளைக் கண்டு தான் அஞ்சியது என்க; இங்ஙனம் அஞ்சிய தன்மையைக் கண்டுதான். உள்ளே சென்று சீரணித்து விடாமலும் வெளியேவீழ்ந்து அனர்த்தம் விளைக்க வொட்டாமலும் இஃது அடக்கப்பட்டுப் போற்றவும் படுகின்றது; "கறை மிடறணியலும் அணிந்தன்று; அக்கறை மறைநவில் அந்தணர் நுவல வும் படுமே" என்பது இதனை விளக்கும் இதனால் இப்பரம் பொருளின் அழிவின்மை கூறப்படுகிறது. (பயந்த = தந்த; அஞ்சிய)

வரி—10

எண்ணில் ..... உருவம். உயிர்கள் அளப்பில அவை கதியடைதற்கான முயற்சிகளும் எண்ணில்லா தன. இவை யெல்லாம் ஐந்தொழில்களில் அடங் கும். அருவம் தொழில் செய்யாது; அருவுருவம் தொழிலுக்காவன கருது மியல்பினது; உருவமே தொழிலாற்றும். ஆகலின் உருவம் வேண்டுவதா யிற்று; மண், குடமாக உருவங்கொண்ட பின் னரே. நீரை நிறுத்திடும். குயவனால் குடம் வடிவுறு கின்றது. பரம்பொருளின் இச்சையால், சத்தி கொண்டு இறைக்கு உருவம் சமைகிறது. இதனு லேயே சத்தியை இறைவனின் தாய் என உரைப் பர்; இத்திருவுரு உயிர்கள் மீதுள்ள கருணையே யாம்; நுண்ணிய நீரணு, நீராகவேனும், ஆலங் கட்டியாகவேனும் ஆகும் உவமையும் இதற்குத்தரப் படும்.

வரி—11.

கண்ணில்........காட்சித்து. கண், தான் சிறிதாயினும் தன்னிற் பெரிய பொருளையும் காணும் ஆற்றலுடையது. இவ்வாற்றல், மாயையாலமைந்த பொருள்கள் மட்டிலேதான் செல்லும். மாயைக்கு அப்பாற்பட்டியைந்தபொருளைக் காணும் திறன் பூதப் புணர்ப்பால் அமைந்த ஊனக்கண்ணுக்கிலது. வெளிச்சத்தைக்காணும் இயல்பு கண்ணுக்கு உண்டெனினும் பேரொளியைக்காண இயலாது கூசுதலுறுகின்றது. அவ்வாறே. உருவம் பூண்ட காலையும் அவ்வுருவையும் அதன் சோதியையும் இக்கண்கள் காணுந்தகையன அல்லவாம். இதனல் இப்பரம் பொருள் காண்டலளவைக்கண் கட்டுப்பட்டதன்றெனல் தேற்றம். ஒளியின் உதவி, காணுங்கண்ணுக்கு இன்றியமையாமை போலவே. காணுமுயிர்க்கு இப்பரம் பொருளின் அருள் முக்கியமாம். இது பற்றியே காட்சித்து எனப்பட்டது.

## வரி 12–15:

முடிபு—கிளர்ந்தும், கவிந்தும், முருக்கியும், தாங்கியும், ஒளிர், கிளர்சேவடி.

வரி—12

கீழெனக் கிளர்ந்து— ஆதாரமின்றேல் ஆதேயம் நிலவாது. உயிர்கள் மாட்டு அருள்மீக் கூர்ந்து, அகப்புறக் காட்சிகட்கு உருவாகிநின்ற அப்பரம் பொருளின் ஊன்றிய திருவடிதான் பாதாளம் ஏழினுக்கும் கீழ்ப்பட்ட ஆதாரசத்திக்கும் அப்பாற்பட்டு எவரும் அறியவொண்ணு நிலையதாய், வேர் ஆதாரமாகி நின்றுகொண்டு மேலுள்ள மரத்துறுப்புகள் வளர்ச்சியடையச் செய்தல் போல், உலகும்

உயிரும் கிளர்ச்சி பெறுதற்கு ஆவன ஆற்றுகின்ற தென்க. 'பாதாளம் ஏழினும் கீழ்சொற்கழிவு பாத மலர்''; ''வண்ண அடியிற்புவி''; என்ற திருவாக்குகள் இக்கருத்துக்கு அரண்செய்வன. மாலறியாச்சேவடி என்பதும் இதுவே பற்றியது.

மேலெனக்கவிந்து — ஆகாயம் எவற்றையும் கவிந்து காப்பது போல, பிரமாண்டங்கட் கெல்லாம் அப்பாற் பட்டதாய்ப்பிரமனுதியோர்க்கும் அறிவரிதாய் நின்று எப்புவனங்களையும் நிழலளித்துத் தண்ணளி செய்கின்றது உயர்த்திய திருவடியென்க. 'ஒருவன் இருதாள் நிழற்கீழ் மூவகையுலகும் முகிழ்த்தன்முறை முறையே'' என்பதும் இது

வரி—13

ஆழ்கயத்....சிறிதுற — கயம்-நீர் நிலை; மரை= தாமரைமலர்; நிரை=கூட்டம்; புரை—உவமம்; ஆழ்ந்த நீர்நிலைக்கண் கிழங்கினின்றும் தோன்றிப் படர்ந்த கொடியிடையே அப்போதலர்ந்த தாமரை மலர்களின் ஈட்ட ஒருமைச் செவ்விதானும் இப்பரம் பொருளின் திருவடிச்செவ்விக்கு ஒரு சிறிதளவே உவமையாகும்படி விஞ்சிய சீர்மை கொண்டதென்க இவ்வடி. செம்மை, அழகு, குளிர்ச்சி, செவ்வரி, இன்பளிப்பு, அணைப்பு முதலிய பல்வகைச் சிறப்புகள் கொண்டது தாமரைமலர். எனினும் தனக்கோராதாரம் வேண்டுவதும். வாட்டமுறுதலும் உடைமையின் திருவடிக்கு முழுநிகராகும் பெற்றி பெற்றிலதென்க. தாமரை — அழகும், மணமும் காட்டி வண்டை அழைத்து மதுவூட்டி அணைத்துத் தன்னுள் உறங்கிக்கிடக்கச்செய்தல் போலே, இறைவன் தாளும் பக்குவிகளை அருகுறச்செய்து

களிப்பூட்டி அனைத்துலகையும், தாய் தன் குழந்தையை அணைத்துக்கிடப்பது போல அரவணைத்து நலம்புரிகின்றதென்க.

வரி—14.

செருக்குநர் முருக்குதல்— கல்வி, செல்வம், பலம், பதவி, புகழ், அதிகாரம் ஆதியவற்றால் செருக்கு அடைபவரை அழிக்கும் திறன் ஊன்றிய திருவடிக்குள்ளது. இவற்றுள் கற்றும் செருக்குற்று இறையடியை மதியாதாரை வள்ளுவனார், "கற்றதனால் ஆயபயன் என்கொல்? வாலறிவன் நற்றாள் தொழா அர் எனின்" என்று வினவித் தெருட்டுகிறார். "கடகரி, நரமடங்கல், காலன், வெண்மதி அரக்கன், அடுமுயலகன் பதைப்ப அடர்த்தனை பதத்தால்" என்பதும் இஃதுணர்த்தும். இதனாலேயே இப்பதம் செய்யும் இதம் பெரிதாம். இவ்வீரம் பாராட்டியே, மதனெரித்த கண்ணுக்கும், புரஞ்சுட்ட நகைக்கும், அயன் தலை கிள்ளிய கரத்துக்கும் மேலாகக் கழல் அடிக்குச் சூட்டப்பட்டது. இதனால் துட்ட நிக்கிரகம் கூறப்பட்டது இட்டர் வாழ்வு செழித்தற்கு இஃதே அடிப்படை.

சேர்குநர்த்தாங்கியும்—குஞ்சிதபாதமாகிய சிலம்படி குறுகியோரை ஆதரிப்பதன் அறிகுறி. இவ்வடி அருளாகரமாயது. "உறுநர்த்தாங்கிய மதனுடை நோன்தாள்" என்பதும் கருதத்தக்கது இவ்வாறன்றி இருதிருவடிகளும் சுந்தரர்க்குத் தூது நடந்தாற்போலப் பயன்படுதல் புரியுமெனவும் கொள்ளலாகும் ஐந்தொழிலாட்டுக்கு இருதிருவடிகளும் பயன்படல் வெளிப்படை.

வரி—15.

திருக்குறள் நிகர்த்து—திருவள்ளுவத்தேவர் செய்ததிருக்குறள். இது குறள் வெண்பாட்டாலாகியது. இப்பாட்டு இரண்டடிகளே உடையது.; முதலடி அளவடி. இறுதியது சிந்தடி ; சக்தியுக்தப் பிரமத்தின் இரண்டு திருவடிகளுக்கும் இப்பாவின் ஈரடிகளும் உவமையாக ஆன்றோரால் கூறப்பட்டுள்ளன. "என்னடிகள் வெண்குறள்நேர் இரண்டடியும் என் தலையில் இருத்தும் இறை"—என்பது மேற்கோள். திருக்கு ஒழித்து திருவினதுநிலையின்மை உணர்த்திப் பெருந்திருவாகிய பேரின்ப நிலைகாட்டுவது திருக்குறள் சிறப்பு. இறையடிகளும் ஆணவம் ஒழித்து. மெய்ம்மை உணர்த்தி, வீடுபேறு நல்கும் சிறப்பின.

உருக்கிளர்—உரு=வடிவு. மரக்கலம்: இறையடிகளின் வண்ணமும் வடிவும் இச்சொல் உரைப்பது. அன்றி மரக்கலம் கரை சேர்த்தல் போல. முத்திக் கரை சேர்ப்பதெனினும் ஆம் "இறைவனடி சேர்ந்தார், பிறவிப்பெருங்கடல் நீந்துவர்" ' என்பது பொய்யாமொழி. அடிச்சோதி மலர்ந்ததுவோ" என்ற ஆன்றோர் வசனம் பற்றி ஒளிர் எனவும் கிளர் எனவும் உரைக்கப்பட்டது.

சேவடி — செம்மை+அடி ; செம்மை — நிறமும் நடுவு நிலையுமாம் '' உதவுங்கருத்தோடு வருபவர்க்கு அடிகளே முதற்கண் தொழிற்படுதலின் அடி முற்கூறப்பட்டது. இதனால் அடியேற்கு என்றும் உதவி செய்ய எழுந்தருள வேணும். அடியேற்குப் போலே இம்மிடியோற்கும் உதவ எழுந்தருளவேணும் என்பது கருத்து. அன்றிப் பாதாதி கேசமாகப் பரவு

தற்கண் பாதம் முற்கூறப்பட்ட தென்பதும் பொருந்தும். இவ்வாறன்றிச் சேவுகைக்கும் அடிஎனினும் கூடும். சே = இடபம்; இடபம் அறத்தினுக்கறிகுறி. திருக்குறள் நாலும் "அறன்வலியுறுத்தல்" என்பதை ஊர்தியாகக் கொண்டியல்வது காண்க; இங்ஙனமன்றி, யாவரும் சேவிக்கத்தக்க அடி எனினும் நல்லதே. (சேவு + அடி);

## வரி 16–20.

முடிபு; ஆகி. வேண்டி. முகந்து, பொழிந்து கடம் புரி புயல் மருள்கை. இவ்வரிகள், பரமனின் திருக்கரங்கட்கு மேகத்தினை உவமைப்படுத்திக் கூறுகின்றன. கடவுளின் கட்புலனாகும் திருக்கரம் கருமுகிலேயாகும். இதுபற்றியே, பொதுமறையில் கடவுள் வாழ்த்தினை யடுத்து வான்சிறப் பதிகாரம் வைக்கப்பட்டுள்ளது. "மலிதுளி பொழிய ஒருகை" என்பதுணரத்தக்கது.

### வரி—16.

எதிர்நலம் குறியா இயல்பு—மேகம் தான் புரியும் உதவிக்கு மாருக எவ்வகை, எத்துணை நன்றியும் உலகத்திடமிருந்து எதிர்பார்க்கவில்லை. "கைம்மாறு வேண்டாக் கடப்பாட்டு மாரிமாட்டு என் ஆற்றுங் கொல்லோ உலகு" என்ற குறட்பா இதனை உணர்த்தும். அன்றியும். உலகத்தால் முகிலுக்குப் பிரதி நன்றி புரிதலும் இயலாது—இங்ஙனமே இறைவனுடைய திருக்கரங்கள் உலகுக்குத் தாம்புரியும் உதவிகட்குக் கைம்மாறு பெறக் கருதுவதில்லை யாகிய இயல்புடையனவாம்.

வரி—17

வெப்பொழிந்துலகம் விளங்கல்—வான் பொய்த்து விடின் உலகம் தீய்ந்து மாய்ந்துபோம். அங்ஙனம் வெதும்பி வீண்படாமைப்பொருட்டே வானம் இடையீடிட்டுத் தண்டுளிவழங்கித் தழைக்கச் செய்கின்றது. 'திங்கள் மும்மாரி பெய்ய" என்று இவ்விடையீடு போற்றிக்கூறப்படுகிறது. — இவ்வாறே இறைவனின் திருக்கரங்கள், உயிர்களின் (மக்களின்) மூவகைத் தாபங்களும் முடிந்தொழியக்காலங்கருதி முயல்கின்றன வென்க "மூ வேடணை என்று முடிந்திடுமோ" என்றுர் வாக்கும் இதனை யுணர்த்தும்

வரி—18

ஓதக்கடலுவர் ஒழித்திடமுகந்து—இரைச்சலிடுங் கடலினின்று அப்பினை உப்பொழித்துத் தன் ஒரு பகுதியால் மேகம் மொண்டுகொண்டு; கடல்; பெரிது; நீர் மிகுதி; ஆனல் உவருடையது; அதனல் நமக்குத்தேவையான அளவிலும். முறையிலும் பயன்படுவதில்லை. அதனைத்தேவைக்கேற்பத் தீமை போக்கித் தெளிவுசெய்து வழங்குகின்றது கொண்மூ — இதுபோன்றே (ஓது+அ+கடல்+ உவர் + ஒழித்து+இடம் + முகந்து) — இறைவன், வேதம் என்கிற அந்தப்பெரிய கடலினின்று அதன்கண் உள்ள நமக்குத் தேவையில்லாதனவற்றை— விளங்காதனவற்றை—நீக்கி எஞ்சிய பகுதியைத் தம் இடக்கரத்திலே சுருங்க அமைத்துக்கொண்டு. எனப்பொருள் கொள்க. ஓத்து=வேதம்; வேதம் கடல் போற்பரந்தது பல துறைகளையுடையது. முழுதும் உணர்ந்து தெளியா இயல்பினது. இதனுள் ஒன்றுக் கொன்று முரணுகக் காணப்படுங்

கொள்கைகள் உவர் எனப்பட்டன. "கர்ம முக்கிய மென்பதும், ஞானமுக்கிய மென்பதும்" இவை போன்ற கருத்துக்கள் நம்மனோர்க்கு விளங்கா முரண்பாடுடையனவாம். இவற்றைத் தீரத்தெளிந்து கூறுவதே சித்தாந்தம் எனப்படும்.

வரி—19.

பொதுமையின் போத நீர் வலம் பொழிந்து—மேகம், தான் பொழிவது இன்னாருக்கே பயன்பட வேண்டும் என்று கருதிக்குறிப்பிட்டுப் பெய்வதில்லை. பொதுவாகவே (போத=போகுமாறு; பாயுமாறு) நீரைத்தன் மற்றொரு பகுதியால் பொழிதருகிறது. (வலம்—பகுதி)—இதனால் மேகத்தின் சமரசம் அல்லது பொதுத்தன்மை புலப்படுகின்றது.— இன்ன தன்மையாகவே, இறைவனும், காலம், இடம், மதம், சாதி. வருணம், நிலை முதலியவற்றால் வேறு வேறாகக் கூறுபட்டுக் கிளக்கப்படும் பல்வகைச் சித்தாந்தங்களையும் அவற்றின் முரண்போக்கிப் பொதுமைப் படுத்தி யாவருக்கும் பொருந்துவதான கடவுட் சித்தாந்தமாக்கி (சைவசித்தாந்தமாக்கி) அதனையும் சுருங்கவும் விளங்கவும் மக்கள் அனைவரும் தேரும் வண்ணம் சிவஞானபோத மாக்கி அதன் பொருளைத் தமது வலது திருக்கரச்சின்முத்திரை முகமாகப் போதித்துதவுகிறான் என்க. (போதம்+நீர்=சிவ ஞான போதமாகிய நீரை); (வலம்=வலது திருக் கரம்); பொழிதல்=தெளிவுபடப் போதித்தல்; சொற்பொழிவு என்றாற்போல;

வரி—20.

பொதியருள் கடம் புரி புயல்—அருள் நிறைந்த கடமையைச் செய்கிற மேகம்; அருள்மாத்திர

மிருந்து கடமை நிகழாவிடினும் பயனில்லை; அருளின்றிக் கடமைக்காக நிகழினும் சுகமில்லை; ஆதலால் அருளொடு விரவிய கடமையே சிறந்ததாம்.— இன்ன தன்மையாகவே இறைவனும் திருவுள்ளத்தே அருள் மிகுதியாகக்கொண்டு திருக்கரங்களாலே நம்மனோரை ஞானநெறிகாட்டி நடத்தி இன்புறச்செய்கின்ருன் என அறியலாம். (மருள்—உவம உருபு) புயலுக்குப் பயிரைச் செழிக்கவும் ஒழிக்கவும் ஆற்றலுண்டு. அதுபோல இறைவனுடைய திருக்கைகட்கும் அடைந்தாரை அணைக்கவும் அடையலரைத்தேய்க்கவும் ஆற்றுலுண்டென்க. "செறுநர்த்தேய்த்த செல் உறழ்தடக்கை" என்பது நக்கீரர் வாக்கு. புயலும் மருளுகின்றகை எனினும் ஆம்.

## வரி 21—22:

முடிபு:—அதிபன்; ஆகியும், ஆகியும் தாங்குதல் தெரிப்பான் அரி தொடுத்தணி கொன்றை தார் மார்பினன்.

### வரி—21.

ஒருவாது அமைஇய ஒள்நுதல் அதிபன்: எந்த நிலையினும் விட்டு நீங்காது பண்பாகியமைந்த ஒள்ளிய நுதலை யுடையாளின் கணவன். இந்நுதலாளை ஆதி சத்தி என்பர். இச்சத்தியின் வடிவு ஞானமே. ஆதலால் சிவத்தின் நீங்காநிலையது; "சத்தன் வேண்டிற் றெல்லாமாம்சத்தி" ஆதலால் அமைஇய எனப்பட்டது. இவ்வாறன்றி, எப்போதும் அமைதியாகவுள்ள கண்ணொளியுடைய நெற்றி யோடமர்ந்த யோகத்தலைவன் எனலுமாம். ஒண்மை— ஒளிபொருந்திய அக்கினிக்கண்ணைக் குறிக்

கும். நெற்றிக் கண்ணே இறைவனுக்குத் தனிச் சிறப்பு. இக்கண் திறக்கப்படின் உலகழியும்; மூடப்படின் உலகு இலகும்; "நுதல்விழிநாட்டத்து இமையோன்" என்பர் ஆன்றோர்.

வரி—22.

திருமா மறைமுதல் — பிரணவம். இப்பிரணவப் பொருளாகவுள்ளவன் இறைவனே. "ஓங்காரத்துள் ளொளிக்குள்ளே ஒளிக்கின்ற உருவம்" என்பர் பெரியோர். இங்ஙனம் பிரணவப் பொருளாக உள்ளான் சிவமே என்பதைக் கொன்றைமலர் (பிரணவபுட்பம்) மாலை உணர்த்துகின்றதென்க.

வரி—23.

ஆநிரைபுரக்கும் அருங்கடன் — பசுவருக்கங்களைப் பாதுகாக்கும் நல்ல கடமையை: காத்தல் தொழில் திருமாலுக்குரியது. (பசு-உயிர்); இஃது அரியது; பரம்பொருளாலளிக்கப்பட்டது.

வரி—24.

தான்உறு கொழுநன் ஆகியும்—இத்தகைய காத்தல் தொழிலைச்செய்கிற (சேய்காக்கும் தாய்போல) தனக்குப் பொருந்திய கணவனுகியும் உள்ளான் சிவன் என்பதையும்; "அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே" என்பது தேவாரம். தாங்குதல்—இரண்டனுருபு கூட்டுக (தாங்குதலை)

வரி—25.

தாரணிதெரிப்பான் — உலகினருக்குத் தெரிவிக்க வேண்டி; தாரணி—பூமி; இங்கு ஆகுபெயர். இவ்வுலகில், தலைவி. தன் தலைவனைத் தாரணியறிய வேண்டித் தாரணி செய்து குறித்தல் மரபாம்; அங்ஙனமே அரியும் செய்தமையாகக் கொள்க.

வரி—25, 26.

தனக்கென அமைந்த ஏரணி முல்லை இரும் புனத்து—தனக்கென்றே இலக்கணங்களாலும் வகுத் தமைக்கப்பட்ட எழுச்சியும் அழகும் வாய்ந்த முல்லை (காடும் காடுசார்ந்த இடனும்) என்கிற நிழலுடைய நிலத்திலே (முளைத்தெழுந்த கொன்றை மரம்) எனக் கூட்டுக. கொன்றை-முல்லைநிலக் கருப்பொருள்களுள் ஒன்று.

அரிவைகொண்டு— அரி+வை+கொண்டு=அரி தான் புல் (நார்) கொண்டு (தொடுத்தணி என்ப தோடு இயையும்); அன்றி (முல்லைப்புனத்துறையும் (திருமாலாகிய) அரிவை + கொண்டு=மங்கை தேர்ந் தெடுத்து எனவும் ஆம்.

வரி—27

உறுந்தீங்கு ஒன்றையும் உருவகை — இயல்பாக (மற்றொன்று சூழினும் தான்மூந்து) உறுகின்ற தீவினை எதையும் (தனக்கும் தான்காக்கும் உயிர்கட் கும்) வாராதிருக்கச்செய்யும் வகையாக; (கொன்றை யால் தீங்குறுது தகைதல் பாரத கதையுட் காண்க)

வரி—28.

நறுந்தீங்கொன்றையின் நகுதார் — மணமிக்க, இனிய தேனைக்கொண்ட கொன்றை மலர் துதைந்து விளங்குகின்ற (மார்பின்) மாலை யணிந்த; நகு= விளங்குகின்ற; எப்போதும் வாடாமல் தெய்வத் தன்மையோடு விளங்கிக் கொண்டிருக்கின்ற என்பது விரிபொருள். "வண்ணமார்பில் தாருங்கொன்றை" என்பது சங்கப்பாட்டு.

மார்பினன் — மார்பையுடைய பரமன்; எல்லா உயிர்க்கும் பாயலாகியும், விரோதிகட்குப் பனிப்பாகி

யும் தனிப்பட்ட சிறப்போடு விரிந்து விளங்கும் மார்வம் என்க.

" புதுமலர்கொண்டரி பூசனையாற்றலின் — மாயோன் மகடூஉ ஆகியகாலைத் தடமுலை திளைத்துச் சாத்தனைத் தருதலின்—ஐயிருபிறப்பினும் அரியருச் சித்தலின்" என்னும் முதுமொழிகளில் மேலதற்கான கருத்துகள் அமைந்திருத்தல் காணத்தக்கது.

## வரி 29–36:

முடிபு: கந்தரம், முகந்து, எழீஇ, கறுத்து, மின்னியும், உரறியும், ஓவறப் பொழிதந்து வெளுத்திட.

### வரி—29

நீர் + அறவு = நீர்வற்றிப்போதலை; உலகம் நீரினை இன்றியமையாதாகலின் இறைவனாணை யால் எப்போதும் நீரினைப்பெற்றுள்ள கடல் என்க. ' உயிர்க்கு ஏமம் ஆகிய நீரறவு அறியாக் கரகம்" என்றார் புறத்தும். நெடுங்கடலும் தன் நீர்மை குன்றுமாதலின் நெடும் புறப் பெருங்கடல் கூறப் பட்டது. இறைவன் எழுந்தருளியுள்ள வெள்ளிப் பருப்பதத்தின் பரப்பனைத்தையும் நனைப்பதற்கு இக்கடல் (சிறுகடல்) பற்றாதுஎன்க. அந்தகார நிலத்தைச் சூழ்ந்தது நாயகக்கடல் என்பது நூல் துணிபு. நீண்ட பரப்பினை உடைய அண்டத்தின் வெளியே உள்ள பெரியகடல் என்பது பொருள்.

### வரி—30.

அளறு—சேறு; அந்தரத்து எழீஇ — மேல் வெளியே கிளம்பி; நீர்முழுதும் முகக்கப்பட்டமை யின் கடல் அளறுபட்டதென்க. கலசத்துப்பிறந்த குறுமுனிவன் அங்கையால் முகந்து, கடலை அளறு படச்செய்தமை ஈண்டுக்கருதத்தக்கது.

வரி—31,

கந்தரம்—கழுத்து ; கடுப்ப=போல ; கந்தரம்—மேகம் ; இங்ஙனம் எழுந்தஎழிலி பெருமானின் மிடற்றைப் போலக் கறுத்ததென்க. இம்மிடறு கறுத்தமையால் தேவர்க்கு அமிருதம் கிடைத்தது. இம்மேகம் கறுத்ததால் உயிர்க்குத்துப்பாகிய அமுதம் கிடைத்ததென்க. இம்மேகங்கள் இறைவன் கபர்த்தத்தே உள்ளவை என்பது பொருந்தும்.

வரி—32.

மழு—எரிகோல் ; வன்னி—நெருப்பு ; உரறுதல்—ஓசையிடுதல். பெருமான் திருக்கரத்தமைந்த மழுப்படை போல மின்னுதலைச் செய்தும். அவன்கை வன்னியைப் போல இடித்தும் பெய்தற்குரிய ஆரவாரஞ்செய்ததென்க. அறப்போர்க்கெழுவார் "எம் அம்பு கடிவிடுதும்; நும் அரண் சேர்மின்" என்று முன்னறிவிப்புச் செய்வது போல இக்கந்தரமும் செய்ததென்க. "மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை" என்பது பழமொழி.

வரி—33

இவ்வரி, வெள்ளியங்கிரிக்கு உவமை கூறுவது. தகைத்தல் ;—தடுத்தல் ; மடை—பேரணை ; விரகு—திறம். பெருகி வரும் பெருவெள்ளத்தை ஊறு செய்யாவகை தாங்கிச் சிறுக விடுதல் மடைக்கியல்பு. மடையைச் சடையாகக் கொள்ளினும் அமையும். பெருமான் சடை, கங்கைப் பெருவெள்ளத்தைத் தாங்கி யொழுக்கிக்காத்த செயல் வெளிப்படை. இம்மடையைப் போல—

வரி—34

ஓங்கல்—மலை ; மீமிசை—மேலும் பக்கமும், இயல்பாகவே ஒளிபொருந்திய கயிலையங்கிரியின்

மேலே; இக்கிரி வருங் கருமேகத்தைத் தடுத்துத் தன்மாட்டுப் பொழியச்செய்ததென்க. இமயமலைக் காட்சி இங்கு நினைவு கூரத்தக்கது

வரி—35

உவமை கூறுவது அழுதடி யடையும் அன்பர் விழிகள் நீர் இடையறாது பொழிவதைப்போல மழையைப்பொழிந்து: "நாயகன் சேவடி தைவரும் சிந்தையும், நைந்துருகிப் பாய்வது போல் அன்புநீர் பொழி கண்ணும்"—என்றபெரிய புராண அடிகள் காணத் தக்கன. ஓவற—இடையறாமல்.

வரி—36.

வெளுத்த மேகத்துக்கு உவமை கூறுவது. ஆன்மா ஆணவமலத்தோடு கூடியிருக்கையின் வன்னத்தோடு கூடிய பளிங்கு போல மலத்துவயத்ததாகக்காணப்பட்டு. இருவினையொப்பு முதலிய பரிபாகம் முற்றப்பெற்றபின் வன்னத்தின் நீங்கிய தூய பளிங்குபோலச் சுத்த நிலைப்படும். "என்னை வெள்ளுயிராக்க வல்ல நாகப்பகைக் கொடியான்" என்ற பெரியார் பாடலினும் இக்கருத்துண்மைகாண்க. ஆவி—உயிர். மேகமும் இங்ஙனம் வெளுத்ததென்க

வரி 37–42:

முடிபு: அருவிகள் இழிதர, ஆரம்...பலவும் பரப்ப;

வரி—37.

அருவிகள் வழிதற்குரிய உவமை உரைப்பது இவ்வரி. இறைவன் திருமுடியின் கண்ணே இருத்தற்குரியபேறு பெற்ற ஒற்றைப்பிறைமதி நீங்கலாக ஏனைக்கற்றைப் பிறைமதி அப்பரமன் பொறுத்துள்ள எரியகலின் வெம்மைக்காற்றாது உருகி

வழிந்தாற்போன்று; பதியறிவு தலைப்படலும் பசு போதம் நிற்கலாற்றாது ஒருவுதல் போல எனினும் ஆம். 'பால் நிலா வழிய வார்த்தாலன்ன மாநீற்றார்" என்ற இடமும் கருதத்தக்கது. "முன்னைச் சிற்றறிவு ஒழிந்து சேர்ந்து"—என்ற சிவப்பிரகாசம் காணத்தக்கது.

வரி—39.

அரவம்— சப்தம்; பற்பல அருவிகளாகித் தொக்கு இரைச்சலிட்டு இறங்கியோடலும்; சுனை யாகி நின்று கோடைக்கண் உமிழப்பெற்று வழிவதும் அருவிக்கியல்பு. அதனோடு மழைநீரும் சேர்ந்தமை யால் அருவிகள் பலவாகி முன்னருவிகளையும் பெரு கச்செய்து வீழலாயின. அரசனாணை பெற்றார் பலர் திரள், சிறைப்பட்டுக் கிடந்தார் சிலரையும் வெளி வீடு செய்து மகிழ்ந்திரைந்து ஓடுவதுபோல் என்ற உவமமும் ஒப்பு நோக்கத்தக்கது. தாங்கள் இழிந் தோடுதலைச் சேய்மையில் நின்றார்க்கும் தெரிவிக்க இரைந்து விரைந்தன. "புகலாசை யிரும்பேயினிப் போவேன் எனப் போய்த்தால்" என்ற இடம் சிந் திக்கத்தக்கது.

வரி—39.

நச்சரவு—விடமுடைப் பாம்பு; வெள்ளிவரை யின் முடியின்கண் எழுந்தருளியுள்ள அரவாபரண னாகிய சிவபெருமானுடைய. நஞ்சுபொருந்திய இயல் புடைய பாம்புகளையும் அத்தன்மையடக்கித் தன் மேலணிந்தவன்; ஆதலால், நம் தீய இயல்புகளையும் களையுமாற்றால் களைந்து திருவடிக்கண் தளைந்தருளு வன் என்பது குறிப்பு.

வரி—40.

காணிய — காண்பதற்காக; பெருமானுடைய திருவடிகளைக் காணவேண்டுமென்ற நோக்கோடே மேல் நோக்கி உயர்ந்து வளர்ந்தன (தருக்கள்); தெய்வ வரையின் முளைப்பனவாகலின் இங்ஙனம் கருதியெழுதல் பொருந்துமென்க. மக்களுள்ளும் அறிவில்லாதவரும், மாக்களுள்ளும் அறிவுடையன வும் உண்டென்னும் இலக்கண நூல்

வரி—41.

ஆரம்—சந்தனமரம்; அசோகம்—தன்கீழ் வரு வாரது சோகத்தை இல்லையாக்கும் மரம். அகரம் இன்மைப்பொருட்டு; இங்குத்தரப்பட்டன குறிஞ்சி நிலத்துவளரும் தருக்களாம்.

வரி—42

பலவும்—இத்தகைய பற்பல மரங்களும்; (அ) பலாமரங்களும்; வருத்தம் நீக்கி வாசம்பூசி, நுண் தாதப்பி தேக்கிலைபரப்பிப் பலவுச் சுளையிட்டு உப சரிக்கும்போலும் இம்மரங்கள்; நிவந்து—உயர்ந்து; தன்கீழுடைவார் தாபமெல்லாம் போகுமாறு பசுமை யான நிழலை யாண்டும் பரவச்செய்தலும். இறை வன் திருவடி நிழலை எய்துவாரும் தண்ணளிபெறு தலை இவை உணர்த்துங் குறிப்பின. பசுமை— பசுமைநிறம்; சத்தியின் நிறம்; அருட்சத்தியின் நிறம் இற்றெென அறியுமாறு பரப்பலும் எனினு மாம்.

## வரி 43–55.

'துன்னிய'—முதல் 'ஒருபால்' இறுதியாக உள்ள அடிகள், தண்ணிய நிழலையுடைய அச்சோலை யின் ஒரு பக்கத்தே பெருந்தவ முனிவரின் பெட் புடைமகளிர் ஒருங்கு திரண்டு வடித்த மொழிகளால்

சிவபிரான் ஸ்ரீபாதத்தைத் துதித்துரைத்தலை உணர்த்துவனவாகும்.

முடிபு—ஒருபால், முனிவரர் வாழ்க்கைத் துணையினர். நெஞ்சினர், மேனியர், அடியினர், துகிலினர். இழையினர், முகத்தினர், முடியினர், நோக்கினர், செவியினர், நெருங்கினராகிச் சார்ந்து—செல்வன் சேவடியை மிழற்றென வழுத்தித்திகழ்தர—

வரி—43

துன்னிய—நெருங்கிய; வாழ்க்கைத் துணையினர்—மலைவிமாராகிய பத்தினிப் பெண்டிர்; முனிவர்கள், தங்களின் கிரகிசய இன்ப அநுபவத்தைச் சொற்களால் பரிமாறிக் கொள்ளுதற் பொருட்டு எப்போதும் சேர்ந்துறைபவராகலின் துன்னிய எனப்பட்டது. அன்றியும், சிவத்தோடு எப்போதும் நெருங்கிவாழும் படியான எனவும் ஆம். சாக்கிரத்தில் கூடியே துரியாதீதத்தைப் பயில்கின்ற எனலும் பொருந்தும். "சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள் உலகிற் சருவசங்க நிவர்த்தி வந்த தபோதனர்கள்" என்பது மேற்கோளாகும். இவர்கள் அரிவையரோடு அனுபவித்தங்கிருந்திடினும் அகப்பற்றற்றிருப்பர் என அறிக. முனிவரர்—இறைவனைச் சதாகாலமும் மனனம்செய்பவர்; அத்தகையினருள் சிரேட்டர். வரம்—சிரேட்டம். ஞானிகளின் தொடர்புகொண்டு அவர்களைச் சிவமாகவே பாவித்துச் சிவத்திற்குப் போலவே அவர்கட்கானவற்றைச் சரியையாதிகளால் புரியும் வாழ்க்கையினுலே துணையாய் நிற்பவர் வாழ்க்கைத் துணையினர் எனப்படுவர். இவர்கள் இருடிபன்னியராகிய பத்தினிப் பெண்டிர். இவர்களின் வேண்டுகை நிகழுந்தோறும் 'உலகில் மழை பெய்யும்.

"தெய்வந்தொழாஅள்'' என்ற தொடக்குடைக் குறட்பாவான் இவரியல்பு அறியப்படும். புதுமணத் தவட்கு அருந்ததி காட்டும் மரபு உண்மை அறிதருக. இனி இம்மாண்புடை மகளிரின் உள்ளமும் உடம்பும் உரையும் உள்ளவாறு கூறப்படும்

வரி—44

உவகை—மகிழ்ச்சி ; உமாதேவிபோலும் தாங்கள். தங்கள் கணவன்மார்களோடு கருத்தாலும் கூடியுறைகின்ற திண்ணிய நிலையாலே மகிழ்ச்சி எப்போதும் நிலைக்கப்பெற்ற மனத்தினை யுடையவர்கள். கற்பு—கல்போல் திண்ணிய நிலை. 'கற்பென்னும் திண்மை'' என்பது தேவருரை. சீதை, கண்ணகியாயினோர்போல் தலைவரைப் பிரிந்து வருந்தும் பெற்றிமை இவர்கட்கு இல்லையாதலின் எப்போதும் உவகை தழைப்பரென்க, நெஞ்சினர் ஆகி வழுத்தித் திகழ்தர எனமுடிக்க.

வரி—45

தளிர்—இளங் கொழுந்து ; மேனி—உடம்பு ; புரை—போல ; தாமரை—ஒரு மலர் ; காலைக் கதிரோன் பொன்னொளி பரப்புகையில் மின்னொளி காட்டி விளங்கும் இள மாந்தளிர் போன்ற எழில் வண்ணத்து உடம்பினை யுடையராகியும் ; இஃது இவர்கள் சாயல் கூறியவாறும். சாய்தல் இல்லாத ஒளியே சாயல் எனப்படும். அன்றியும் இளந்தளிரே வளர்ச்சியை உறுவிப்பது. அதுபோல, இவர்கள் தங்கள் தெய்விக வாழ்விலே வளர்ச்சிக்கனுகுணமானவர் என்பதும் ஒன்று. சிறிது கேடு வேருக்குறினும், கிளைகட்குறினும் முந்தி வாட்டமும் தளர்ச்சியுங் காட்டுமியல்பினது மரத்தினது தளிரே. அதுபோல,

இவர்கள் தமது வாழ்க்கையின் முதலுக்கேனும் சார் புக்கேனும் ஒரு சிறு ஊறு நேரினும் மெல்கும் இயல் படையரென்பதும் கருத்தாகக் கொள்க. இதனுல் இவர்தம் மென்மை உணர்த்தப்பட்டது. மேலும், தளிர் சூரியனுள்ள மேலிட நோக்கியே தள்ளிச் செல்வது போல இவர்கள் மேன்மை யெய்துதலே நாட்டமாக உடையவர் என்னலாம் இதுவன்றி. மருக்கொழுந்து, துளசி முதலியவற்றின் தளிர்கள் இயல்பிலேயே தோன்றும்போதுமுதலே நறுமண முடைமை போல இவர்கள் உத்தம மகளிராதலின் இயல்பிலே கமழும் நறுமண மேனியர் எனக் கொள்ளலாம். தாமரை அடியினர்—மஞ்சுளம் முதலிய தன்மைகளில் தாமரைமலர்போலும் அடிகளையுடையவர்; நீரைவிட்டகலாத மரைமலர் போன்று கணவர் விட்டகலாது அவர் வழிச் செல்லுபவர் எனினுமாம். தாமரை மலருக்குள்ள ஏற்ற இயல்புகளை இயன்ற பெற்றி அடிகளுக்கும் ஒட்டிக் கொள்க.

வரி—46

தோயா—சாயந் தோய்க்கப்பெருத; துகில்—வஸ்திரம்; இழை—ஆபரணம். சாயந்தோய்க்கப் பெருமல் இயல்பாகவே நிறமமைந்த மெல்லிய ஆடையினை உடுத்தியவர்; இயற்கை வன்னமும் மென்மையும் இம்மகளிருடுத்துள்ள ஆடையின் தன்மைகளாம்; இவ்வியல்புகளைக் கொண்ட பட்டாடை என்க. "கோபத்தன்ன தோயாப்பூந்துகில்" எனத் திருமுருகாற்றுப்படை கூறும். இஃது இவர்கள் இயல்பாகவே மென்மையான இயல்புடையவரெனக் குறிக்கும். தூமணி—குற்றமற்ற அரதன மணிகள்;

இவை நலங்கேழ் ஒளியின, இவை இந்திரசாபம் போலும் ஒளிவீசுவனவாம். இவற்றாலாகிய ஆபரணங்களை அணிந்தவர். இவ்வகை இழைகள், அணிவோர்க்கு அவரவர் திறத்துக்கேற்ப நன்மை விளைப்பனவாம். இவற்றினிலக்கண விரிவு சிலப்பதிகாரம் ஊர்காண்காதை கூறும். தங்கள் மரபுக்கேற்ற ஆன்ம குண நலங்களை அகவணியாகவுடையவர் என்பது கருத்தாம்.

வரி—47.

தைஇய — தீட்டப்பெற்ற; பொட்டணிந்த பூரணசந்திரன் போன்ற முகத்தினை உடையவர்; வட்டமும், குளிர்ந்தஒளியும், உடைய முகம் என்க. "நீறில்லா நெற்றிபாழ்" என்ற வாசகமும் கருதத்தக்கது. திங்கள், சூரியனிடமிருந்தே ஒளிபெற்று விளங்குவதுபோல, இம்மகளிரும் தத்தம் தவவலிமை வாய்ந்த கொழுநர்வழி யொழுகுதலால் இத்தகை யொளியினைப் பெற்றனரென்க. திங்கள் என்றமையால் தேய்வின்மை கூட்டிக்கொள்க. வெள்ளிய நீறு தீற்றிய நுதற்கண் சிவந்த பொட்டினை அணிந்திருந்தவர் என்னலாம்.

வரி—48.

குழல் — கூந்தல்; எப்போதும் வாசம் கமழும் கற்பினுக்கறிகுறியான மலர்களைப்பிணித்து. கூந்தலுக்குள்ளே மறைத்து முடிந்த முடியினையுடையவர். கூந்தலுக்கு வெளியே மலர் வெளியே தெரியும்படி முடித்தல் கற்புடை மகளிர்க்கு அணியன்றென்னும் நூல்கள். முனிவர் மகளிராதலின் பின்னித் தொங்கவிடாமல் முடிந்திருந்தனரென்க. அன்றியும் இவர்கள் மூழ்கித்தூய்மையோடு விளங்குபவரென்க.

வரி—49.

அருத்துறும் — உண்பிக்கின்ற; தவநோக்கு— தம்மைக் காண்பவர் உள்ளத்தே காமம் எழா வண்ணம் தடுக்கும் நோக்கு. தம்மை நாடிவரும் இனம் இனமான விருந்தினரை அவர் மகிழும் வண்ணம் உணவளித்து ஆதரிக்கும் அருமையான தவப்பார்வை யுடையவர். "விளக்குப்புக இருள் மாய்ந்தாங்கு ஒருவன் தவத்தின் முன் நில்லாதாம் பாவம்" என்ற வரி ஒப்புநோக்கத்தக்கது எனவே இவரைக் கண்டார் மனத்துக்காமங் கழலுதல் ஒருதலை. "கிழவன் சேட்புலம் படரின் இழை யணிந்து புன்தலை மடப்பிடி பரிசிலாகப் பெண்டிரும் தம்பதம் கொடுக்கும் வண்புகழ்" என்னும் புற நானூற்று அடிகள் சிந்திக்கத்தக்கன; முன்பே திங்கள் முகம் என்றமையால் தேய்தலும் வளர் தலும் பிறத்தலும் இறத்தலுமுடைய செல்வநிலை யும் உலகநிலையும் அறிந்தவராகி, தவநோக்குடைய ராதலால், வருந்தி வந்தோர் மருங்கு நோக்கித் திருந்த அளிக்கும் கடப்பாடுடையர் இம்மகளிரென்க.

வரி—50

மாசு—குற்றம்; மடுத்தல் — நிரம்பக்கொள்ளு தல்; குற்றமற்ற மறைநூற்செய்திகளை நிரம்பக் கேட்டுக்கேட்டுத்துளைப்புண்ட செவிகளையுடைய வர்; செவியின் வெளித்துளை குழையுந்தோடுங் கொள்ளுதல் போல உட்டுளை வேதசாரங்களைக் கொள்ளுதற்கமைந்ததென்க. பல முனிவர்கள் கூடிக்கூடிப் பேசுகின்ற வேதவேதாந்த விஷயங்களை அடிக்கடி கேட்டுக் கேட்டுப்பழகிய செவியென்க. "கற்றலிற் கேட்டலே நன்று", "கற்கக் கசடுஅற"

என்ற இடங்கள் ஏற்கத்தக்கவை. மடுத்து+இடு +செவி எனப்பிரித்துக்கொள்க. இடுதல் காதணி யிடுதலைக் குறிக்கும். ஓலைக்காகத்தோட்கப்பட்ட செவி. ஓலைதாங்கும் அரியசெய்திகளைக் கேட்டற் காக இயல்பானமைந்த துளைச்செவி எனக்கருதுக. பெண்டிர் ஓதுதற்குரியதல்லது மறை நூல்; ஆக லின், கேட்டனரென்க. பணிவிடை யாற்றல், விருந்தோம்பலாதிய செய்திகளால் கிடைக்கும் ஒழிவு நேரம் சிறிதே பெண்டிர்க்குக்கிட்டுவதாகலின் மறை ஓதும் செயல் இவர்க்கு விலக்கித்தரப்பட்டது போலும்! "கொளுத்தியது கொண்டு, கொண்டது விடாமை" மகளிர்பண்புகளுள் ஒன்று ஆதலால் நிறைந்த கேள்வியறிவு பொதிந்த நெஞ்சினர் இவர் என்னலாம்.

வரி—51

நெருங்கினர் — நெருங்கியவர்களாகி; இத்தகைய முனிபன்னியர் தமக்குள் நேயமிக்கவர்களாகி ஒருங்கு சேர்ந்து அக்கயிலை வரையில் இறைவன் திருமுன்னர் ஓரிடத்தை அணுகி; பெரும்பான்மை ஒருங்குகூடி அளவளாவுதல் பெண்டிர்க்கியல்பே யாகும். இவர்கள் அறிவுடை அரிவையராகலின் நேயம் மிகுந்து கூடினர் அறிவாளிகள் ஒன்று கூடிப்பேசி மகிழ்வதைவிட அகல் வானத்தும்பருறை வாரின்பம் பெரிதன்றென்பது துணிவு. இவர்கள் இங்ஙனம் கூடியமை வீணுரையாடுதற்கன்று. தாணுவை இயல் மொழியால் தத்தம் கருத்துக் கெட்டியவகையில் போற்றுதற்கென்க. அடிக்கடி இங்ஙனம் அடியார்களோடு அளவளாவியுறைதல் கழிந்த வாசனை திரும்பிப்பற்றி யிழுக்காதிருத்தற்

குப்பயன்படு மென்பது ஞானநூற்கருத்து. "அவ ரோடிணங்கி யிருப்பதுவும் நன்று" என்பது மூதுரை.

வரி—52.

படிறு — வஞ்சம்; பொய்; ஈரம் = அன்பு; கிளவி—சொல்; பொய்யில்லாத அன்பொடு கலந்த இசை பொருந்திய சொற்களைக்கொண்ட "பொன் வண்ணம்" எனத்தொடங்கும் பாசுரங்களாலே; உண்மையும் அன்பும் இயற்கையோசையும் விரவத் துதிப்பதே தோத்திரத்தின் அழகாம். "இன் சொலால் ஈரம் அளைஇ. படிறிலவாம் செம் பொருள் கண்டார்வாய்ச்சொல்" என்பது குறள்.

வரி—53.

சேரலன்—சேரமான் பெருமாள் நாயனூர்; செல் வன்— சிவபெருமான்; மேற்கூறிய வகையான கிளவியினாலே நாயனூர் திருக்கயிலாயத்துச் சிவபெரு மானுடைய திருவடியைப் போற்றினூற் போன்று; சேரலன்—சேரன்; இவ்வுலகியலிற் சேராதவர் எனினுமாம்; "செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே" என்பதனுல் எல்லாச் செல்வங்களையு முடையவன் சிவபெருமான். குபேரனுகிய செல்வன் நட்பு இவருக்கிருப்பதாகவும் கூறப்படும். இனி, முத்திச் செல்வத்தை யருளுபவன் எனினுமாம். சேவடி—சேவடியின்மீது என ஏழனுருபுகூட்டுக. சேவடி வழுத்தி என முடிபு.

வரி—54

தொடை — பாடல்; குறிஞ்சி — ஒருபண்; திவவு—முறுக்காணி; மிழற்றென—இசைபோல; இனிய ஒலித்தொடர்ச்சி இணைந்த குறிஞ்சிப்

பண்ணை இசைக்கின்ற முறுக்காணியமைந்த குறிஞ்சி யாழின் (வில்லியாழின்) இனிய இசையைப் போன்ற சொற்களைக் கொண்டு: குறிஞ்சி—அங்கிலப்பண்; இஃது அன்பால் கூடச்செய்யும் பண்; தான் பண்ணப்படுவதனாலும் தன் கருத்தின் வண்ணம் பிறரை ஒழுகப் பண்ணுவதனாலும் பண் எனப்படும். "புணர்தல் நறுங் குறிஞ்சி" இலக்கணம்.

வரி – 55

தேம் தொடை—இனிய சொற்றொடை; வழுத்தி—தோத்தரித்து இனிய சொற்றொடை கொண்டு நாவினாலே துதித்து விளங்க ஒருபுறம்; "வாயே வாழ்த்து கண்டாய்'' என்னும் அப்பர் சுவாமிகள் திருவாக்கும், "நாராயணா என்னா நாவென்ன நாவே'' என்னும் இளங்கோ அடிகள் பாட்டும் நாம் நாப்பெற்றதன் பயனாகப் பரமனை நாணாளும் வாழ்த்தவேண்டும் என்பதை உணர்த்தும். இங்ஙனம் பெண்டிரியல்பு கூறியதனாலே ஆடவரியல்பு கூறாமலே அறியப்படும். திருக்கயிலாயக் காட்சியைத் திருவையாற்றிற் கண்ட நாவரையரும் பெண்ணினத்தையே முந்தக் கூறியிருத்தல் காணத் தக்கது. வழுத்தி மீளுங் காலத்தும் பெண்ணினமே முந்த வருவதும் அங்குக் கூறப்படுவதாம். மாக்களினின்றும் மக்களை வேறுபடுத்திக் காட்டுதற்கான சிறந்த உறுப்பு நாவே (பேசும் திறமையே) யாதலின் நாவின் எனப்பட்டது. திகழ்தர—தெய்வப் பொலிவுற்று விளங்க;

**வரி 56–63:**

மற்றொரு பக்கத்தே கின்னரர் முதலிய வித்தியாதர குழாத்தினர் இசையால் பரவி வழிபடுவதை இவ்வரிகள் தெரிவிப்பன.

முடிபு—விஞ்சையர், ஒருபால்—தொடர்வர புலப்பட, கருவிகொடு பத்தியுட்படுத்து விரவிடப் பண்ணிப் படர்தர—

வரி—56.

பிறிதொரு பக்கத்திலே தேவர்கள் கூட்டம் பலவும்; உம்பர்—தேவர்; தேவர்கணம் பதினெண் வகையாகக் கூறப்படும். புண்ணியத்தை இம்மையிற் செய்கையில் யாம் செய்தோம் என்னும் ஆணவ முனைப்புடையவரா யிருந்தமைபற்றி அப்புண்ணியத்தின் இன்ப அநுபவம் துய்க்கும் பொருட்டு உம்பருலகு அடைவர். இம் முனைப்பில்லாதார் வீடுபேறெய்துவர். "எதனால் தியாகம் செய்கின்றாயோ அதையும் தியாகம் செய்; "ஒரு நதியைக் கடக்க உதவி செய்த தெப்பக்கட்டையை அதைக் கடந்து சென்றபின் தூக்கிச் செல்லவேண்டிய தில்லை" என்பன போன்ற வசனங்கள் இங்கு ஒப்புக்கொள்ளத் தக்கன "நானே இதற்கு நாயகமே"; "என்னதோ இங்கதிகாரம்" என்ற வாசகங்களும் இதனை உணர்த்தும்.

வரி—57.

(விஞ்சையர் பாடும் தெய்வ கீதங்களைச்) செவியால் கேட்டு அவ்விஞ்சையர் செல்லுமிட மெல்லாம் உம்பர்குழாம் தொடர்ந்துசெல்ல; இவர்கள் தொடர்ந்து வருமாறு விஞ்சையர் சென்றனர் என்க. "செவியால் கண்ணால் பருகுவோம்; இன்னமுதை மதியோமன்றே" என்பார் சொல் காண்க. சங்கீதம் பிற உயிர்களைத் தன் வழிப்படுத்தும் ஆற்றலுடையது. பாம்பு முதலியன வசமாதல் யாவரும் அறிவது. "கள்ள மூப்பின் அந்தணன் கனிந்த கீத வீதிவாய்" என்ற பாடல் மாதர்வசமாதலைக்காட்டும்.

'செவிகாள்கேண்மின்களோ"; 'சேவகன்சீர்கேளாத செவியென்ன செவியே" என்பனவும் செவியால் நலனடையுமாறு கூறும். பருகி என்றமையால் விழுங்குவது போன்ற சிரமமின்மை புலப்படும். நாதத்தின் ஆற்றல் இஃதாம்.

வரி—58.

நாதம்—ஒலி; கீதநாத சுரங்களை வேதம் வெளிப் படுத்தலின், "நான்மறை பயந்த" எனப்பட்டது. புலப்படாத நாதமும் உண்டாதலால் 'புலப்பட' எனப்பட்டது. சாமவேத கானம்பாடி இராவணன் விடுதலை அடைந்த செய்தி நாதம் நாதனையும் வசப் படுத்தும் என அறிவுறுத்தும். கந்தருவரைச் செவி யணிந்திருப்பதும், தாமே வீணை வாசித்தலும் ஈச னுக்கு நாதத்தின் மீதுள்ள விருப்பு விளக்கும். சிவ சத்திகட்குப்பின் நாதம் கூறப்பட்டிருத்தல் கருதத் தக்கது.

வரி—59.

ஒலியும் முறைப்படும் போது பண்ணுகும் தான் வரிசைப்படி வெளியிடுகின்ற தக்க சொல் போலும் மொழியும் நரம்புக்கூட்டம். விஞ்சையர் கையின் கண் உள்ள நரப்புக்கருவி இது; காலத்துக்கும், செய்திக்கும் இடத்துக்கும் ஏற்றவாறு, பகை, நட்பு முதலிய முறைப்படி உந்துதல் உறழ்தல் முதலிய முயற்சிகளின் வண்ணம் ஒலிப்பது வீணை அல்லது யாழின் இயல்பு.

வரி—60

தூங்கா—ஓய்வடையாத; தெய்வதம்—தெய்வத் தன்மை வாய்ந்த; துணைபுரி—உதவிசெய்கிற; கருவி கொடு—இசைக்கருவிகளைக்கொண்டு; விஞ்சையர்

தாங்கியுள்ள கருவிகள் தெய்வ இயல்புடையனவாத லின் ஓய்வின்றி எப்போதும் ஒலிப்பனவாம். தாமே ஒலிக்கும் கருவிகள் என்றுமுரைப்பர். நரம்பினம் தூங்காக்கருவி; தூணைபுரி கருவி எனக் கூட்டுக.

வரி - 61

பயில்—வாசிக்கின்ற; கின்னரர். கிம்புருடர், கந்தருவர். வித்தியாதரர்—விஞ்சையர் இவர்கள் இசைவிஞ்சை கைவரப்பெற்றவர். இவர்கள் ஓயா மல் தேவகீதங்களைப்பாடிக்கொண்டே யிருப்பவர்; மிக்க புகழினையுடையவர். "பண்ணுலாமிருவர் இசைகொள்நின்செவி" என இறை செவியும் புகழப்படுதல் காண்க. விஞ்சையர்—தும்புருநாரதரு மாம்.

வரி—62

பாங்கு + ஆம் = பக்கத்தே உள்ள; பக்கத்தே உள்ள யாவருள்ளத்தையும் இழுத்துப்பத்திவெள் ளத்திலே அமிழ்த்திச்செலுத்தி; பாட்டு பத்தியை விளக்கும் சாதனம். "அருச்சனைபாட்டேயாகும்" என்ற இடமும் கருதத்தக்கது.

வரி—63

பரமன்—சிவபிரான்; விரவிட = கலக்க; தம் இசையினாலே இவ்விஞ்சையர்கள் யாவரையும் மன முருகி மெய்ம்மறந்து ஆடச்செய்து தாண்டவ மூர்த்தியாகிய ஆண்டவனின் அடிக்கண் கொணர்ந்து ஈடுபடச்செய்கின்றனர் என்க. "பள்ளந்தாழுறு புனலிற்கீழ் மேலாகப் பதைத்துருகுமவர் நிற்க என்னை ஆண்டாய்" என்ற இடம் ஒப்புநோக்கத்

தக்கது "ஆடுகின்றிலை ...பாடுகின்றிலை" என்பது மிஃதுணர்த்தும். "புணர்ப்பதொக்க" என்றமையால் விரவிட எனப்பட்டது.

வரி 64—78.

இவ்வடிகள், கயிலை யென்னும் குறிஞ்சிவாழ் குறமகளிர் கொண்டாடும் பூசனைச் சிறப்பைப் புகல்வன. இவர்கள் வீரமகளிர்; ஆதலால், வெற்றிக்குரிய ஆட்டம் (கூத்து) நிகழ்த்தி விழாக்கொண்டாடுகின்றமை கூறப்படுகின்றது.

முடிபு: கொடிச்சியர், நெஞ்சமொடு சூலம் நாட்டி, தொண்டகம் கொட்டி, அஞ்சுவர. மண்டி, நாற்றி. தீற்றி, சுற்றி, தீட்டி, காட்டி, சுழற்றி, கணனொடும் அடிபெயர்த்து அயராது ஆடுற—

வரி—64.

வென்றி—வெற்றி; நிலையான வெற்றியே தமக்கு எப்போதும் நிகழ்தல் வேண்டுமென்று எண்ணிய உள்ளத்தினோடு;—வெற்றியும் தோல்வியும் மாறிமாறி வருதல் இயற்கையாயினும் அது பீடுடைத் தன்றாதலின யாண்டும் நீங்காது நிலைபேறுடைய வெற்றியையே இவர்கள் விரும்பினர் "கொள்ளுங் கொடியெடுத்துக் கொற்றவையும் கொடுமரமுன் செல்லும்" என்பர் சிலப்பதிகாரத்தும். மறக்குடித்தாயத்து வழிவளம், நிலையமர் வென்றியேயாம், இவர்கள் தோல்வியை எண்ணாது வென்றியொன்றையே நினைந்து பூசிப்பது, நாம் சிறுபயனென்றுங்கருதாமல் பேரின்பமொன்றையே கருத்துட்கொண்டு பூசிக்கவேண்டு மென்பதைக் குறிப்பிக்கும். "தினைத்தனையுள்ளதோர் பூவினிற் றேன் உண்ணாதே" என்ற திருவாசகப்பாடற்

பயனுமிது. நினைவது நெஞ்சத்துக்கு இயல்பேயா யினும் ஒன்றையே நினையப்பழக்குவது நம் கடன். நெஞ்சுகலவாப்பூசனை ஈசனை ஏமாற்றுவதாகமுடியும். புறத்துறுப்புகட்குக் கட்டளையிடும் அப்பர், இடை யிலே "நெஞ்சே நீ நினையாய்" என்றுள்ளமை காண்க. எங்கும் நிறைந்துள்ள இறைவன் கருணை யினால் உயிருக்குள்ளீடான பரமன் பிரேரிக்க, அவ் வழிஆன்மா அமைய, அதன் போதம் உந்த இதன் கீழ்ப்பட்டு நெஞ்சம் கருத, இதன் பிறகே புறத் துறுப்புக்கள் ஒழுகுவதே முழுப்பூசனையும் உண்மைப் பூசனையுமாம். நெஞ்சு கலவாவிடில் ஈசன் கலக்க வில்லையென்பதே பொருள். "நான் கும்பிடும்போது அரைக்கும்பிடு ஆதலால் நான் பூசைசெய்தல் முறையோ" என்பர் பெரியோரும். இதனால் ஒன்றிய நெஞ்சம் இன்றியமையாதது என்க.

## வரி 65–66:

ஊன்றிய— கொண்டுள்ள; குடுமி—முடி; கொள்கை—மரபு; நாட்டி—நட்டு; மூன்றுதலைகள் கவர்த்தமைந்த. பகைமையைக் கொல்லும் நன்மை நிலைபெற்ற, நீண்ட முடிகளையுடைய, (இறை வனுக்குரிய) திரிசூலப்படையினைத் தங்கள் மரபு முறைப்படியே நட்டுவைத்து;—சூலப்படை சிவ பிரானுக்குரியதும் உகந்ததுமானபடை. படைவருக் கங்கள் யாவற்றினுக்கும் இதுவே சூல்போறலின் சூலமெனப்பட்டதாகலாம். இது மூன்று கூரியதலை களைக்கொண்டது. சங்காரத்தை நிகழ்த்த வல்லது. தெய்வீகமுடையது. சிவக்காட்சியின்போது இப் படையினையே முந்தத்தான் கண்டவாற்றை நாவரை யர், "வடிவேறு திரிசூலம் தோன்றும் தோன்றும்"

என்று கூறிக்காட்டியுள்ளனர். இப்படை இறைவன் சாங்கங்களுள் ஒன்றும். "அரன்தன் கரசரணுதி சாங்கம் தரும்அருள்" என்றமையால் இப்படை அருள்வடிவே கொண்டதென்க. இப்படை, ஆரணி, செனனி, ரோதயத்திரி என்னும் முத்தொழிற்குரிய மூன்று சத்திகளையுமே முக்கிளைகளாகக்கொண்டது. இவ்வுண்மையைப் பட்டினத்தடிகள். "மூவிலை ஒரு தாள்சூலம் ஏந்துதல் மூவரும் யான் என மொழிந்தவாறே" என்பர். எனவே இக்கொடிச்சியர், தங்கட்கு வெற்றியை உண்டாக்கித்தரவும், அவ் வெற்றியை நிலைபெறச் செய்யவும். அவ்வெற்றிக்கு மாருகிய தோல்வியைத் தொலைத்தருளவும் சிவனருள் நயந்து அதற்கொரு குறியீடாகச் சூலப் படையை நாட்டினரென்க. கொலை ஊன்றிய என்பதனுல் கொல்லுதலே இதன் தொழிலெனக் கொள்ளற்க ; மறக் கருணை காட்டவேண்டுங் காலத்து இத் தொழில் வெளிப்படுவதாகும். 'வித்து ஊன்றிய' —என்ற சொற்ருெடரில் வித்து தரைக்குள் மறைந் திருந்து வாய்ப்பு கண்டு வெளிப்படுவதுணர்த்துவது போலவே, "கொலை ஊன்றிய" என்ற இடத்தும் பொருள் கொள்க. மற்றும் இத் தொழிலே இதன் இயல்பாவதன்று ; இத் தொழிற்குரிய சத்தி, இறைவனுல் இதன்பால் வேண்டும் காலத்து ஊன்றப் படுகின்றதெனக் கொள்ளல் தகும். பகையாயவர் எவ்வளவு தொலைவிலே இருப்பினும் அவ்வளவு தூரமும் நீண்டுசெல்லும் ஆற்றலுடையதாதலின் "நெடுங்குடுமி" எனப்பட்டது. பூரணப்பிரளயத்தின் போது திருமாலின் களேபரத்தை மலர்போலக் கொண்டு சுழற்றி ஆடும் இயல்பினது இக் குடுமி

யாகும். கொள்கை—நினைவு; தம் குலத்து முன்னோர் நினைவின் வழியே செய்தல் கொள்கையாம். எவர்க்கும், நூல் முதலிய பல கருவிகளாலும் அறியவாராதனவற்றைப் பரம்பரை வழக்கமே உணர்த்த வல்லது. ஆதலின் இதுவே கைக்கொள்ளத் தகுவதென்பது தோன்றக் கொள்கை எனப் பட்டது. நாட்டி—விருப்பத்தோடு நிறுவி; நாட்டம்-விருப்பம். "வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்" என்பதனுல் இவர்களுடைய அபீஷ்டம் இச் சூல மூலமாக இறைவனுல் தரப்படுமென அறிக; நாட்டி—பிரதிட்டை செய்து; அறியப் படாத ஒன்றைத் தாமறியும் வண்ணம் ஒரு குறியின்கண் வந்து தெரியும்படி நிலைபெறத் தங்குவித்தலே பிரதிட்டையாம்; விவரம் ஆகம விதியுட் கூறப்படும். இங்கு இவர் கண்ணப்பதேவர்போல்வாராகலின் மந்திர முதலிய சொல்லிலர்

வரி—67.

தொண்டகம்—ஒரு பறை; மலையிடம் எதிரொலிக்குமாறு தொண்டக முதலிய பறைகளை முழக்கி. மலையிடத்துள்ள எதிரொலிக் கற்கள் இப் பறை முழக்கத்தைத் தாமும் முழக்கிக் காட்டுகின்றன என்க; குன்றத்தின் எப் பக்கத்துள்ள தம்மவரும் வந்து குழுமும் பொருட்டு இங்ஙனம் கொட்டப்படும். தொண்டகம் கூறியமையின் பிறவும் அந் நிலத்துப் பறையும் வாச்சியமும் கொள்ளப்படும். கொம்பும் பறையும் எறிமணியும் பிறவும் பொருந்தும். ஒலியே நலஞ்செய்வதாகலின் இங்குக் கொட்டுமுழக்கம் முற் கூறப்பட்டது,

வரி—68.

**மண்டி** - நெருங்கி; கிட்டே வர நேர்ந்த பிறர் எவரும் உள்ளத்தே தெய்வபயம் கொள்ளும் வண்ணம் திரண்டு; ஏவரும் என்றமையால் தெய்வ மில்லென்போரும். நாமே தெய்வமென்போருங் கூட இந் நிகழ்ச்சி கஃணைக்காண கடவுளெண்ணம் தம்மை யறியாமலே உதிக்கப் பெற்று. இனி முன்போற் கூறுதற்கு முடியாத அச்சம் உண்டாகும்படி; இத னால் தெய்வக் கொள்கையுடையார் ஒழுக்கம் அக் கொள்கையிலாதாரையும் அகப்படுத்தும் வண்ணம் அமையவேண்டும் என்பது பெறப்படும். மண்டுதல் — நெருங்குதல்; ஒன்றின் இடத்தே ஒன்பது நிற்றல். இனி, இவர்கள் சூலப் படைக்குச் செய்த அலங்கா ரம். தூபம். நைவேத்தியம், தீபம் முதலியன பற்றிக் கூறப்படும்.

வரி—69

**நாற்றி**—தொங்கவிட்டு; **தீற்றி**—பூசி; மலை யிடத்துப் புதிய மலர்களாலாகிய மாலை வகைகளை அச் சூலப்படைமீது ஒன்றன்மீதொன்றாகத் தொங்க விட்டு; மாலை சூட்டுதல், தங்கள் மனத்தகத்தே அப் பொருளை வகித்திருத்தலைக் காட்டுதற்கான அறிகுறி யாம். இச் செயல் அன்பு வெளிப்பாடு; மற்று முள்ள மஞ்சள் முதலிய விரைப் பொருள்களை ஒன்றன்பின் ஒன்றாகப் பூசி; மணம்—மணமுடைச் சாந்துகள். இச் செயல் அன்பு செலுத்துதலின் அறிகுறி.

வரி—70

**சீரை**—வஸ்திரம்; **திட்டி**—இட்டு; அலங்கரித் தற்குரிய ஆடைகளை அப் படையில் சுற்றிக் கட்டி;

இஃது அப் பொருளை அன்பால் பிணித்தற்கு அறி குறி. மாசகன்ற புதிய ஆடை மாசகன்ற நல்மன மாம். "சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந்தருளுவது இனியே" என்பதும், பூசலார் மானத மந்திரத்துட் சிவத்தை எழுந்தருளச் செய்ததும் அன்பாற் கட்டு தலையே குறிக்கும். சூலத் தலைகளிடத்தே பொட் டிட்டு; இது தம் உள்ளத்தை முற்றும் அப் பொருள் கவர்ந்தமைக் கறிகுறி. நெற்றிக்குப் பொட்டுப் போல ஆன்ம வர்க்கங்களே இறைவனுக்கு அணி யாம். "என் உயிரை நீ கந்தமாகப் பூசிக்கொள்" என்பது போன்ற வசனங்கள் ஒப்புக்காண்டற் குரிய.

வரி—71

ஆரம்—சந்தனக்கட்டை; அகில்—ஒரு விரை தரு கட்டை; மணமிக்க சந்தனத்தைப் புகைத்துக் காட் டியும்; அகில் கட்டையின் நறுமணப் புகையூட் டியும்; புகைத்தல் யான் எனதென்னும் பற்றுப் புகைந் தொழிந்தமைக்குக் காட்டும் அறிகுறி. இத னால், பொக்கமொழிந்த பூசனை ஈசனை மிக்க உவப்பிக் கும் என்க.

வரி—72

விழை—விரும்பு; மடை—போனகம்; உணவு; தமக்கு இயல்பான வீர வேண்டுகோளுடனே, தமக்கு விருப்பமுள்ள உணவு வகைகள் பலவற்றையும்; "மாற்றார் மறுக; ஒன்னலர் ஒழிக; வெற்றி விளங் குக; தோல்வி தொலைக; இன்பே விளைக" என்பன போன்றவாய தமது உட்கோள்களை அடக்கிக்கொண் டிருக்கும் வீர வாசகங்களைச் சொல்லி; இக் கூற் றுரைகள் சூலப்படைக்கும் தமக்கும் பொருந்துமாறு

கூறப்படுவனவாம். நம் வேண்டுகோள்கள் இங்ஙனமே அமைதல் சிறப்புடையது. இறைவர்க்கு எப்பொருள்மீதும் விருப்பும் வெறுப்புமில்லையாதலால், தமக்கு விருப்பமுடையபொருளை இறைவற்கு அவர் கேளாதே அளித்திட்டு; இது ஆத்தும நிவேதனம். "வேண்டுதல் வேண்டாமையற்றோர் செயல்" இது. குகன் தேனும் மீனும் இராமற்கு அளித்தமையும், கண்ணப்பர் இறைச்சி யுண்பித்தமையும் தமக்கு விருப்பமுள்ளவற்றை இறைவற்கு அளித்தல் வேண்டுமென்றல் புலப்படுத்துவன. இது நன்றிச் செய்கை. இறைவற்குப் பசி போக்குதற்குச் செய்வதன்று. இவ் வகைச் செயலில் அநுசிதமென்பதே இல்லை.

வரி—73.

நேரக் காட்டி-நேர்ந்துகொள்ளும்படி படைத்து; ஒன்றின் மூலமாகக் கொடுத்தல் யாகம்; நேரே கொடுத்தல் தியாகம். "இது சோறு; இது பாயசம்" முதலிய வாசகமூலம் காட்டி ஏற்பித்தல் நிவேதனம். இறைவன் இப் பொருள்களைத் தானே ஏற்றுக் கொண்டுவிடாமல் உள்ளம் மகிழ்ந்து காட்டியோர்க்கே திருப்பியளித்திடுவன் என்க. "கொள்ளேன் என்றல் அதனினும் சிறந்தன்று" என்ற வாக்கு ஈண்டைக்கு நோக்குக. இஃது ஆன்மத் தியாகம் அல்லது தன்னழிவு குறிப்புடையது

வரி 74—75:

"நிமிர்வெண்........கனலொளி"; இனி இறுதியாகக் கருப்பூர வொளி காட்டுதல் கூறப்படும். குவடு—மலையுச்சி; செம்பொருள்—சிவம்; குவால்—குவியல்; கனலொளி — சுடரொளி. கயிலாயவரைமுகடு

வெள்ளை நிறமாயிருக்கும். இதன் மீது செஞ்சுடரொத்த சிவம் பொருந்தியுள்ளது; இது உவமானம். இக்காட்சி போல, கருப்பூரக் கட்டி வெள்ளையானது; அதன் மீது பற்றி ஒளிர்வது செஞ்சுடர். எனவே வெண்மையான கருப்பூரக் குவியலின் மீது சிவந்த ஒளி எரிவது, வெள்ளிய கயிலைவரை மீது சிவபெருமான் எழுந்தருளியுள்ள காட்சியைத் தெரிவது செய்வதாம் எனக் கொள்க; கற்பூர தீபத்தின் சிறப்பு இது; ஏனைத் தீபங்களிருந்தமை சொல்லாமலே கொள்க; இது சிவோகம் பாவனை. எவ் விறைவனுக்கும் இறைவிக்கும் முன் இத் தீபம் காட்டப்படுதலால் எத் தேவும் இச் சிவமே என்பதுண்மை; ஒளி கருப்பூரத்தைப் பற்றி அகப்படுத்திக் கொள்ளுவது போல, சிவமும் சீவனைப் பற்றி அகப்படுத்திக் கொள்கின்றதென அறிக. ஜீவ போதம் அறவே தொலையப்பெற்ற பின் சிவபோதமே ஒளிருமென்பதும் இது.

வரி—76.

மிக்க விருப்புடனே சுற்றிவைத்து. சூலப்படை உள்ளே தெரியும்படிக் கற்பூர ஒளியை மேலுங்கீழுமாக வட்டமாகச் சுற்றிவைத்து. இங்ஙனம் சுற்றுதல் ஓங்காரத்துள் இறைவன் வீற்றிருத்தல் புலப்படுத்துவதாம். ஒளிவட்டம் ஓங்காரம். வழிபாட்டிறை இதனிடையே தெரிவது. "பூசைசெய்பவர்கள் ஆசையிற் காட்டும் பொங்கொளித் தீபநல் வட்டம் —மாசறப் பரிதி மண்டிலங்காட்டும் மற்றதன் நடுவண் நீ முன்னம்—தேசுறப் பொலியும் காட்சியும் காட்டும் திருந்து நீ சிவமெனற்கென்னே" என்பதும் ஓர் உரை. வீரம் செறிதரு—இயல்பாகவே மறஞ்

செறிந்த ; மறம் இவர் குடிக்கே இயல்பு "மூதில் மகளிர் ஆதல் தகுமே" என்றாற்போல்வது வள முள்ள இடத்தே பயிரடர்ந்து வளர்தல் போல இவர்பால் வீரம் செறிந்து மிகுவது என்க.

வரி—77

விண்ணகக் கொடிச்சியர்–அண்டவெளி முகட்டி லுள்ள கைலை வாழும் குறமகளிர். திரிசூலப் படை யைக் கொழுகொம்பாகக் கொண்டு தமது எவ்வகை வாழ்வுக்கும் அதனையே சுற்றிப் படரும் மனமுடைய மகளிராதலின் 'கொடிச்சியர்' எனப்பட்டது. திண் ணியல் கணனொடும் — வலிமையையே இயல்பாக வுடைய தம் கூட்டத்தாருடன். இது கொழுநரையும் உட்கொண்டது ;

வரி—78,

தாளத்துக்கேற்ப அடிகளைப் பெயர்த்துவைத்து (வரங்கிடைக்கப் பெற்ற) ஆனந்தமேலீட்டினால் களைப்புத் தோன்றாமலே தோளோடு தோள் பற்றி நின்று கூத்தாடுதலைப் புரிய; இது குன்றக்குரவை. இவ்வாறு இயல் இசை, நாடகமென்னும் முப்பகுதி யான வழிபாடுகள் முறையே முனிவர்பெண்டி ராலும், விஞ்சையர்மகளிராலும், குன்றக்கொடிச்சிய ராலும், அச் சோலையில் நிகழ்த்தப்பட்டமை தெரியப் படும். இவை சோலைக்குள் நிகழ்ந்தகாட்சிகளாம்.

வரி 78—81:

முடிபு: சோலை இபல்தாங்கிய–சிறுபிறை மிலைத் திடு சென்னியன் ;

வரி—78

நீடுறும்—மிகவும் உயர்ந்து வளர்ந்துள்ள; வள மிக்க வரையும், வற்றாத கங்கையும், பொய்யாத மழை யும் இறையொளியும் பிறவும் வாய்ப்புடைமையின்

இதன்கண் உள்ள மரங்கள் வானுறவோங்கி வளம்பெற வளர்ந்து கொடிகள் படரப்பெற்று அடர்ந்து இருண்டு வண்டுந்தேனும் கிண்டுபு திளைப் பத்திருவுநீடிப் பெருமான்முடியெனப் பொலிந்தன. இத்தகைய சோலைஎன்க. இத்தகைய சோலை யினுடைய எனவிரிக்க.

வரி—79.

கதிர்—கிரணம்; கண்—இடம்; ஆதித்த ராதி யோருடைய ஒள்ளிய கிரணங்கள் உள்ளுருவி நுழைதலை எப்போதும் அறிதலில்லாத விசாலமான இடத்தினைக்கொண்ட சோலை; "மந்தியும் அறியா மரன்பயில் அடுக்கம்" என்பது முருகு கதி ரோனும் அடிவழிப்புகுந்தால் அடையலாமேயன்றி முடிவழி இறங்குதற்கியலாதென்க. பருவங்கருதா மல் பசந்தும் அடர்ந்து மிருந்தமையின் அக்கதிர் நுழைதலை எப்பருவத்தும் இச்சோலை அறிந்தில தென்க. அறியாமையைக் கதிருக்கும் ஏற்றலாகும்.

வரி—80

தண்—குளிர்ச்சி; இயல்—சஞ்சரிக்கின்ற; சிறு பிறை—ஒற்றைக்கீற்றுப்பிறைமதி; மேற்சொல்லப் பட்ட சோலையினுள்ளிடம் போன்ற குளிர்ச்சித் தன்மையைத்தாங்கியுள்ள, வானத்திலே உலவுகின்ற ஒற்றைப்பிறைமதியினை; தம்மைச்சார்ந்தார் தன்மை பூண்டவரையும் பெருமான் தலையால் தாங்குவன் என்பது இதன் குறிப்பு. "அடிசார்ந்தாரடியார்க் கும் அடியேன்" என்பதுபோல. ஓயாமல் ஓடிக் கொண்டிருப்பவனுக்கு வேண்டியது நிலைத்து நிற்பது தான். ஆதலின், ஓடும்சிறுபிறைக்கு உட்காருவதற்கு இடங்கொடுத்தாற்போலும், இளைப்பாற்றுபவன்.

என்னும் பேருக்கியைய முடியில் அணிந்தான் பரமன் சிறுமை கருதாது அணிந்தான் என்பதைப்புலப்படுத்தும் சிறு என்னும் சொல். இதனுல் ஒரு புதுப்பிறப்பை எய்தினது மதியாதலின் பிறை எனப்பட்டது சிறுபிறையினை எனவிரிக்க.

வரி—81.

கண்ணி — மூடிமாலை; மிலைத்தல் — சூடுதல்; சென்னி—முடி; இதுவே நமக்குரிய நிலைபெற்ற முடிமாலையாதற்குரியதென மதித்து அப்பிறையினை முடித்துக்கொண்ட திருமுடியினையும் உடையவன். அரவாகிய நாணினுல் தொடுக்கப்பெற்று, கங்கைநீர் தெளிக்கப்பெற்று இம்மதிமாலைவாடா வண்ணம் சூடப்பட்டதென்க. "தூமதி சடைமிசை சூடுதல் தூநெறி யாமதியானென அமைத்தவாறே" என்ற வரிகளும் ஈண்டுக்கருதத்தக்கன. தூமதிமுடிக்கணிந்த செயல் வெளிப்படை. தன்களங்கம் ஒழித்தற்குத்தானே தேயவேண்டிய நிலை சந்திரனுக்கேற்பட்டது ஒரு பாட நமது சிறுமதியும் தேய்ந்தொழியின் பெருமதியாக்கும் பொருட்டு இறைவனுல் அங்கீகரிக்கப்படும் என்பது கட்டுரை.

## வரி 82–89.

இனி இப் பரமன் திருக்கரத்தொருபடை கூறலுறுகின்றது இப்பகுதி. படைகள் தொழிலுங் குணமுங் குறித்தலுடையனவாகலின் சாங்கம் எனப்படும். இச் சாங்கம் உயிர்கட்கு அறிவைக் கொடுப்பதாகிய திருவுருவிற் றேன்றுமியல்பின. இங்ஙனம் இறைவன் உருவுபற்றிச் சிந்திதனுயினும் இயல்பால் அசிந்திதனே யாவன்.

முடிபு—என்பதும், உண்மையும், முன்பும் இருமையும், என்பதும் அறிபாக்கு—மாளிகை ஓங்கும் தகைமை ஏய்ப்ப—உதவுவான எடுத்த மழுவினன்

சிவபெருமான், மேல்வலத் திருக்கரத்திலே மழு என்னும் படையொன்றைத் தாங்கியுள்ளான். அப் படைமூலம் நமக்கு என்னென்ன அறிவுறுத்தப்படுகின்றன என்பதை 82-84 அடிகள் தெரிவிக்கின்றன. மழு—எரியிரும்பு; எரிகோல்; இது ஆலம்பில்கும் சூலம் போல் கவர்த்த தன்று. ஒன்ருகவே யிருப்பது. பழுக்கக்காய்ந்திருப்பது. தீவண்ணத்தது. இதனை வாளெனவும் கூறுப.

வரி—82.

தான்—இப்பரமன்; தாங்குதல் — சுமத்தல்; ஆதாரமாயிருத்தல். சமயந்தோறும் வேறுவேறுவகையாக இறைவனுகிய தான் கூறப்படினும் எல்லாத் தேவர்க்கும் கருத்தாவாகிய தான் ஒரே பொருள் என்ற அறிவினையும், எல்லாப்பொருள்களையும் உயிர்களையும் தாங்குபவன் தாளுெரு பொருளே என்ற உண்மையினையும்; மழுப்படை ஒரே கோலாதலின் இறைவன் ஒருவனே என்பதை உணர்த்துகின்றது. கவர்த்தல் ஐயப்பாட்டை விளக்குமாதலின் கவர்படாதே ஒன்ருய் நின்று இதனை உணர்த்துகின்றதென்க. அப்பூதியடிகளார் மகனுரை அரவு விடம் அறப்பாடிய அப்பர் திருவாக்கினுள் இக் கருத்துக்கள் பொதுளுதல் காணலாம். இறைவனுடைய ஆற்றலே (பிரிவற்ற சத்தியே) யாவற்றையும் தாங்குவது. ஆதாரசத்திக்கும் ஆதாரமாய் நிற்பது சிவமேயென்பதை மழுப்படை இறையொருகை தன்னைத் தாங்கியிருக்கு முகத்தால் உணர்த்துகின்றதென்க.

வரி—83

முன்பு — வலிமை; இருமை — மறைத்தலும் அருளலுமாகிய இரண்டையும்; உயர்களின் மல நீக்கத்தின் பொருட்டு உடலின்கண் செய்யப்படும் படைத்தல் முதலிய மூன்று தொழில்களின் வலிமையும், அம்முத்தொழிற் படுவதற்கியைய உயிரின்கண் செய்யப்படுவனவாகிய மறைத்தல், அருளல் என்னும் இரண்டு தொழில்களும்; இவ் வைந்தொழில்களும் இறைவனின் ஆற்றலாலேயே நிகழ்கின்றன வென்பதையும் மழுப்படை உணர்த்துகின்றதென்க. தீயானது உணவுப் பண்டத்தைப் படைக்கிறது; அதனைப் பாகஞ் செய்கிறது. அதனை அழிக்கவும் செய்கிறது. கோலானது பசுக்களை ஓரிடத்துக்கு ஓட்டிவருகிறது. கூட்டமாக மேயச் செய்கிறது; வீட்டுக்கு இளைப்பாற ஓட்டுகிறது. தீக்கோல், முழுதும் தீவடிவங் காட்டிக் கோலை மறைக்கின்றது; பிறகு கோலைப்பற்றிக் கிடத்தலை உணர்த்தித் தெளிய வைக்கின்றது. இங்ஙனம் சாமானிய நிலையிலே ஐந் தொழிலையும் சாதாரணத் தீயிரும்பு செய்கின்றது இறைவன் கைம்மழுவும் இம் முறையை விசேடித்து உணர்த்துகின்றது. திரோபவம் திதியினுள்ளும், அநுக்கிரகம் சங்காரத்தினுள்ளும் அடக்கியும் கூறப் படுமாதலால் முத்தொழில் என முன்னர்க் கூறப் பட்டது. இவற்றுள் சிருட்டியாவது மலபாகம் வரச் செய்வது; திதியாவது கன்மத்தை நுகர்விப்பதாகும்; சங்காரமாவது இளைப்பாற்றலாம். திரோபவமாவது வினையின் குணங்குற்றம் தோன்றுதபடி மறைத் தனுபவிக்கச் செய்து இருவினையொப்பு வரச்செய்தலாம்; அனுக்கிரகம் பந்தமறச் செய்கையாகும் இவ்வளவும் இறைவன் அருளாலே நிகழ்வதாகும். இறை

வனுக்கு இவற்றால் ஏதும் விகாரமின்றாம். முன்பு என்றமையால் இறைவன் சந்நிதானத்தில் இங்ஙனம் அவனருளால் நிகழ்கின்றதென்க. "சாற்றிய கதிரோன் நிற்கத் தாமரை அலரும்; காந்தம் காற்றிடும் கனலை; நீரும் கரந்திடும் காசினிக்கே" என்பது சிவஞான சித்தியார்.

வரி—84.

முன்னோன்—முதன்மையானவன்; முதுநீர்—பழமையான கடல்; முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருளாகியவன் இறைவன் என்பதையும் பழமையான கடலால் சூழப்பட்ட இவ்வுலகிலுள்ளவர்கள் (அறியும் பொருட்டு) என அடுத்த அடியோடு தொடரும் படைக்கலங்களுள் மிகவும் பழமையானது கோல்தான் இப் பழமைப் பழக்கத்தாலேயே இப்போதும் ஒன்றைத் தாக்குதற்குக் கருதுபவன் ஒரு குச்சியையே ஒடித்து எடுத்தேகும்படி நேருகிறது. இம் மழுப்படையும் இவ்வாறே தான் பழமையான படை என்பதை உணர்த்துவதன்மூலமாகத் தன்னைத்தாங்கியுள்ளோன் மிகவும் பழமையானவன் என்பதை உணர்த்தும். முதலில் அமைந்த விருட்சம் என இதனை மொழிவர். திருவள்ளுவரும் இப்பழமை காட்டுதற் பொருட்டே வாளா பகவன் என்னாது ஆதிபகவன் என்றார். பழமைக்குச் சுதந்தரமுடைமை ஓர் அழகு. அஃது ஆன்மாக்கட்கு இல்லை மண்ணினும் பழமையானதும் பெரிதுமானது என்றற்கு முதுநீர் எனப்பட்டது.

வரி—85, 86, 87.

அருள்உளம் — தண்ணளியமைந்த நெஞ்சம்; மாளிகை—பேரில்லம்; தாள்—தாழ்ப்பாள்; பூட்டு;

புதவம் கதவு; தகைமை—தன்மை; ஏய்ப்ப—போல. மாளிகை, புதவம் தாங்கி ஓங்கும் தகைமை ஏய்ப்ப—என்பது உவமை. உயிர்கள்மாட்டுச் செந்தண்மை இயல்பாகவே அமையப்பெற்றவர் வாழ்கின்ற திருமாளிகையானது, தன்னுடைய சாத்திக் கொள்ளுதல், பூட்டிடப்பெறுதல் முதலான தொழில்களைச் செய்யாமல் (செய்யவேண்டிய அவசியமில்லாமல்) ஆனால் தாழக்கோல் முதலிய உறுப்புகளைப் பெற்றுள்ள கதவினைப் பெயர்மாத்திரைக்குத் தாங்கிக்கொண்டு உயர்ந்து விளங்கும் தன்மையைப் போன்று—உயிர்களிடம் அருள் பூண்டுள்ளவர், தம்மிடம் எந்தச்சமயம், எவர், எந்த உதவியை நாடி வருவரோ என்ற ஆன்ம இரக்கமுடைமையால் தாமிருக்கும் வீட்டின்கதவை எப்போதும் திறந்தே வைத்திருப்பர். இன்றேல் இவர்கள் காட்சிக்கெளியராதல் அரிதாய்விடும். "அடையாத வாயில் அகம்" என்று இத்தகையோர் மாளிகை சிறப்பிக்கப்படும். கதவுக்குரிய பாதுகாப்புத்தொழில் வேண்டாமையால் கதவுக்கு அவசியமில்லையாயினும் மாளிகைக்கு அஃதோரங்கமாக வேண்டப்படுகின்றது. இங்ஙனமே, சிவபெருமான் எல்லாம் வல்லவனுயினும், மழுவாயுதத்தைப் பொறுத்துள்ளமை காண்க.

வரி—88

உதவுவான்—உதவும் பொருட்டாக; கொல்லுதலைக்குறிக்கோளாகக் கொள்ளாத விதமாகக் கொண்டு, எவரேனும் தங்களை ரட்சித்துக்கொள்ளும் பொருட்டு வருந்துவாராயின், அவர்களுடைய ரட்சிப்புக்குதவும் பொருட்டாகவும்,—பரசுராமன் முதலியோர் சிவபெருமானருளினலேயே பரசுபெற்று

அரசுகுலம் கட்டறுத்தனர் என்ப. சிவாபராதம் குறித்த தந்தை தாளெறிதற்கு வாளாக்கிடந்ததும் இதுவே. எத்தேவரின் எப்படையும், இம்மழுப் படையின் ஆற்றலின் அமிசம் பெற்றே மறத்தொழி லாற்றுகின்றதென்க. தனக்கோரலங்காரமாகவும் ஆர்த்த ரக்ஷணார்த்தமாகவுமே இறைவன் படைகள் இலங்குகின்றன என்னும் நூல்கள். தன் வலிமையில் ஐயமும், பிறர் வலிமைக்கு அச்சமும் உடையானுக் கன்றே படை வேண்டப்படுவது. மகாதேவனுக்கு இவ்விரண்டும் இலவாம் என்க. இவனது தலைமை குறிப்பிட வந்த தமிழ் விரகரும் "மழுவாள் நெடி யோன் தலைவன் ஆக" என இப் படைமுகத்தானே குறிப்பித்தமை தெருளப்படும்.

வரி—89.

வலன்—வலதுபுறம்; எடுத்த—உயரப்பிடித்த; மேலாம் வலத் திருக்கரத்திலே உயர்வாகத் தூக்கிப் பற்றிய வாளாகிய (அ) ஒளி பொருந்திய எப்போதும் எரிந்துகொண்டிருக்கிற மழுப்படையுடையவன்; அறக் கருணைக் கறிகுறியாக இடது பக்கத்தே தேவியாரிருத்தலின, மறக்கருணைக் கறிகுறியாக இதனை வலப்புறத்தே கொண்டனன் போலும்! அன்றியும். தான் என்னும் காட்டும் பக்கம் வலமாத லின் அப் பக்கத்தே தாங்கினன் என்னலாம். தனது பெருமைக்கொரு காட்டாக உயர்த்திப் பிடித்தனன். தனது பெருமை என்பது உயிரின் ஒன்றாயும் உடனாயும் நிற்பதேயன்றி வேறாய் நிற்பதைக் குறிக்கும். தீயினாற் காய்ச்சப்பட்ட இரும்பு தீயே யாயினும் இரும்பின் வேறாய்த் தீ நிற்றல் காணப் படும். எரி—பாச சங்காரத்தின் அறிகுறி.

## வரி 90–92:

**முடிபு: நந்தி அடிவழி அமரர்கள் ஒதுங்கி வணங்கி புனைந்து இலங்கிடும் முன்பினன்.**

வரி—*90*

நந்தி—நந்திதேவர்; தருமமே தம்முடைய அழகிய வடிவமாக அமையப்பெற்ற திருநந்திதேவருடைய திருவடியினாலும்—இறைபால் அன்பும், அவன் தரும் ஆணையும், குன்றா இன்பும் கொண்டியல்வது அறம். எவ்வகையானும் எல்லாவுயிர்க்கும் நன்றாற்றலே அறனும். மக்களாவார்க்குப் பேரின்பம் விளைத்தற்குரிய வேதாகம விழுமிய நெறியை ஐயமும் திரிபுமற வரையறுத்துக்கூறுதல் அறம் எனப்படும். இவ்வெல்லா இயல்பும் இத்தேவரிடம் பொருந்திக்கிடத்தலின் அறம் கொண்ட உரு எனப்பட்டது. "மனத்துக்கண் மாசு இலனாதல்; அனைத்து அறன்" என்பர் தேவர். தாம் மாசற்ற திருவுள்ளம் பெற்றிருப்பதோடமையாமல் மாநில மக்களும் மாசற்றுத் தேசுறு முத்தியிற் றிகழ்தல் வேண்டுமென்ற சிந்தையுடையராய்ச் சிவஞானாசாரியத்துவம் பூண்டுள்ள பெரும் தகைமை நம் நந்திதேவருடையதே என்க. இது பற்றியே, "தேவர்பிரான் வளர் கயிலைக் காவல்பூண்ட திரு நந்தி" எனவும், "அருட்குழகர் எழிற்கயிலை முழுக்காவல் நந்திபிரான்" எனவும் "நந்தி அருளாலே நாதனாம் பேர் பெற்றோம்" என்றெல்லாம் இவர் போற்றப்படுவர். ஆகலின் அருளுருவும் அறத்துருவும் ஒன்றும். திருவுருவம் என்றமையால், "உருவமும் அழகும் நல் ஒளியும் கீர்த்தியும்-செருவிடை வெல் வலத்திறலும், சிந்தைசெய் பொருளவை வருதலும் போகமும் நல்ல திருவுடை அறத்தது செய்கை" உடையவர் என்பது

பெற்றும். "கைலை நடந்தனைய திருவுரு" எனவும் புகழ்வர் பெரியோர். அமைவுறு—என்றமையால் இப்பேறு புண்ணியம் அற்றக்கால் நீங்கும் தன்மை வாய்ந்த ஏனைத்தேவர் சுகப் பேறுபோன்ற தன்று. யாண்டும் நிலைபேறுடையதாமென்க. எல்லாத்தேவரையும் களிப்புறச் செய்பவராதல் பற்றி நந்தி எனப்படுவர். தாள்—திருவடி. யாவரையும் தாங்குவது.

வரி—91

அமரர்கள்—தேவர்கள். நந்திதேவர் சிவசந்நிதானத்தே கைப்பிரம்போடுலவும் கடப்பாட்டாளராதலால் வந்துநெருங்கும் தேவர்களை வரிசைப்படி நிறுத்துதற் பொருட்டுக்கடிதோச்சி மெல்ல எறிவர். தேவர்கள் அவர் குறிப்பித்த வழியிலே உள்ளடங்கி நின்று பரமனை வணங்குவரென்ப. அரிக்கணங்களும், பிரமர்களும், இந்திரர்களும் விஞ்சையர் முதலிய வமரர்கள் பலரும் விழி பிதுங்கிட உடல்நெருங்க அரதனத் திருவோலக்கங் காணிய வருவது வழக்கமாம். இவர்கள் காரணத்தேவர் காரியத்தேவர் எனப்பட்டாராய்ச் சிவனருள் செய்த சத்தி விசேடத்தாலே படைப்பு முதலிய தமக்குரிய அதிகாரம் நிலை பெறவும் நடைபெறவும் வேண்டி நாளும் துதித்து வணங்குவது இயல்பாம்.

பொடி—திருநீறு; கொள்ளுவார் மலம்பொடி படுப்பது. பெருமானது திருவருள் பெற்றதற் கறிகுறியாக அளிக்கப்படுவது திருநீறு. அதனைப்பூசிப் பொலிவர் தேவரென்க. "நீறு செவ்வே இடக் காணின் நெடுமாலடியார் என்றேத்தும்" என்பதனுல் யாவரும் நீறுபுனைதல் கொள்ளப்படும். "நீறு

தாங்கிய திருநுதலானை" எனச்சிவபரம் பொரு ளும் போற்றப்படும். "நீறில்லா நெற்றிபாழ்" என்பதனால் திருநீறு புனைந்ததுமே ஒரு விளக்கம் ஏற்படும் என்பதை அறியலாம். எவர் புனை யினும் இவ் விளக்கம் உண்டாவது இயல்பு. "இனத்தியல்பாம் அறிவென்பதுண்மையே" என் னும் பிரபுலிங்க லீலை மாயை பூசை கதி 34-ஆம் பாட்டின் கருத்தும் காண்க. இங்ஙனம், அமரர்கள் இயற்கை ஒளி, திருநீற்றொளி, சிவபரம் பொருளின் பேரொளி ஆகிய இவ்வொளிகள் முச்சுடரொளியும் ஒருங்கு கூடினாற்போன்று மிக்கொளி செய்தலால் பொங்கொளி எனப்பட்டது. "சேண்விளங் கவி ரொளி;' என்றாற்போன்ற ஒளி என்க. இவ்வொளி மங்குதலறியாததாதலின் பொங்கு எனப்பட்டது கண்ணிமைத்துக் காணவேண்டாது கூசுதல் விளக் காத மாசில் தேசென்க. இத்தகைய பேரொளி திக மும் சந்நிதானத்தை உடையவன் பரமன் முன்பு —முன்னிடம்; 'சன்னிதி குணமதாகும்'—என்ற இடம் கருதத்தக்கது.

## வரி 93–97:

முடிபு—கழிப்பி, அடிப்படுத்தும் வாசகம் தெரிக் கும் கிளவியாம் பெயர் நயந்தோன். இனி இத்தகைய பதியாவன் உயிர்களுய்யும் வண்ணம் வெளியிட்டருளி யுள்ள திருப்பெயர் இன்னதென்பதும், இஃது இறை வற்கு மிகவும் சிறந்த திருநாமம் என்பதும், இதுவே வேதாகம உடன்பாடுடைய திருமந்திரம் என்பதும் இவ்வரிகளறிவிப்பனவாம்.

### வரி—93

மும்மலம்—மூன்றுவிதமலங்கள்; அவை ஆணவம், கன்மம், மாயை என்பன; மலம்—குற்றம் எனக்

கொள்ளின்காமம் வெகுளிமயக்கம் என்றனவற்றைக் குறிக்கும். கழிப்பி—நீக்கி ; நீங்கிய வழி அனுகூலப் படுத்தி ; முதுமை+உயிர். ஆணவ முதலிய மூன்று மலங்களையும் நீங்கச்செய்து பழமையாகிய உயிர்களை —ஆணவமலமானது 'பசுக்களைக் கட்டிய பாசம் மூன்றனுள்' முதன்மைத்து. இதனை ஈசனாலயத்துப் பலி பீடம் காட்டும். "ஆய பதிதான்" என்னும் திரு மந்திரம் 2411-ஆம் பாட்டு உணர்த்தும். ஆணவ மலம் அளவற்ற சத்திகளையுடையதாய் அளவற்ற உயிர்களுடன் என்று ஆன்மா உண்டோ அன்று முதலே செம்பிற் களிம்புபோல அனாதியாய்க் கலந்து நிற்பதொன்றாகும். கேவல அவத்தையில் உயிர்களின் அறிவு தொழில்களை மறைத்து நிற்கும். சகலத்தில் மோகஞ் செய்வித்துப் போகஅனுபவத்துக் கேற்ற கர்த்தாத் தன்மையை நிகழ்த்தி நிற்கும். எனவே கேவல சகலங்களில் உயிர்கட்கு அஞ்ஞானத்தை உண்டுபண்ணுவதாம். இருள் ஒன்றாயினும் பல கண்களையும் கூடி மறைப்பதுபோல இதுவும் ஒன்றாயிருந்து பல உயிர்களையும் மறைக்க வல்லது. உயிரோடு சமவியாபகமுடையது. குருவருளால் முத்திகாலத்து நீங்கப்பெறுவது. இம் மலத்தின் காரியம் மோகம்—மதம்—இராகம்—கவலை—தாபம் —வாட்டம்—விசித்திரம்—என ஏழாம் என்ப. இம் மலம் எப்பொருளினது இயல்பினையும் தன்னையும் காட்டாதது. நிஷ்காமியச் சிவபுண்ணியத்தால் பரிபாகப்பட்டுழி விட்டு நீங்குவது. திரோதைக்கு நிலைக்களன் இதுவாம். "நாகம் மாநதி மதியம்" கொண்டவன் என்ற குறிப்பால் இம் மலச்செயல் குறிப்பிக்கப்படுவதுண்டு. தண்டுலத்தின் உமி, முளை தோன்றுதற்கு நிமித்தமாய்ப் பற்றி நிற்பது

போல ஆணவமலம் சுகதுக்கங்களை உயிர் அனுபவிக்கு மாறு பற்றுச் செய்து நிற்கப் பண்ணும். ஆகவே ஆணவம் நிமித்தகாரணம்; பிரதிபந்தம். (கலந்து நின்று தடுத்தல்). "ஆதியன்றாகி—ஆணவந்தான்" என்ற கூவப்புராணம்—4 ஆம் சருக்கம் 17-ம் பாட்டு இம்மல இலக்கணத்தைத் தொகுத்துரைப்பது. ஆணவம், இருள் என்றும் சகசமலம் என்றும் கூறப் படும்.

மும்மலங்களுள் ஆணவம் நீங்க ஏனையவை இரண்டும் கன்மமலம் எனவும் மாயை எனவும் கூறப்படும். இவை உயிர் பக்குவப்படுதற்பொருட்டு இடையிலே வந்து கூடுவனவாதலால் ஆகந்துகமலம் எனக் கூறப்படும். இவற்றுள் மாயை ஆன்மாக் களின் அறிவை மயக்கி விளக்குவது. மாய்தல் ஆதல் என்னும் சொற்கூட்டம் இவ்வாறானதென்பர். உல கம் ஒடுங்கித் தோன்றுவதற்கு இடமாய் நிற்பது. இது அசித்து, நித்தம், அருவம், உலகத்துக்கு உபா தானம் (அல்லது) முதற் காரணம். அநேக சத்தி களை உடையது. தன் காரியங்களில் வியாபக முடை யது. மூவகை ஆன்மாக்களிடத்தும் உள்ளது. சகலரை மிகவும் பந்திப்பது. தம்மில் ஒன்றையொன் றாவ்வாத தனு—கரணம்—புவனம்—போகங்களைத் தோற்றுவிப்பது. இது சிவத்தின் வைப்புச் சத்தி யாம். சங்கார காலத்தில் ஆணவ மலம் நாசமடை யாத எல்லா ஆன்மாக்களையும் தன்னிடம் வசிக்க இடமாகும். இருளில் உதவும் விளக்குப்போல்வது. உயிர்களுக்கு அற்பஞானத்தைவிளக்கும். சரீராதியில் ஆன்மபாவனை உண்டாவது இதனாலேதான். இருளில் மஞ்சள் வெள்ளை மயக்கம் போல்வது. 36 தத்து

வங்களாய் மூன்று காண்டங்களாகநிலவும். சுத்தம், அசுத்தம், பகுதிஎன மூன்ருய் விளங்கும். காட்டாய் நின்று விடயங்களை அறியும் வண்ணம் உயிர்க்கு அறிவை விளக்குதல் மாயையின் செய்தி. (அவ்வறிவைத் தடைசெய்வதே ஆணவம்) மாயை கன்மங்கள் இறைவனுக்கு உடைமைப்பொருள்.

இனிக் கன்மமலம் என்பது. ஆணவத்தால் மறைப்புண்ட உயிர் சிவத்தை அறியாமை காரணமாக விளைவது. சாதி, ஆயுள், போகம் என்னும் மூவகையால் ஆன்மாக்களிடம் பொருந்துவது. உடலோடு ஆன்மா பொருந்துவதற்கு ஏதுவாவது. பலவித போகங்கட்கு உற்பத்திக்களம். நாசத்தைச் செய்வது. ஆன்மாக்கள்தோறும் பேதப்பட்டது. புத்திபூர்வமாகவும் அபுத்தி பூர்வமாகவும் செய்யப்பட்டு இதம் அகிதங்களால் உண்டாகும் புண்ணிய பாவரூபம் உடையது. மாயையைச்சார்ந்து இருப்பது. தனித்துக்காணப்படாதது. சஞ்சிதம் முதலிய மூன்ருகமாறி மனத்திலே தோன்றுவது. தெய்விகம் முதலிய மூவகையால் ஆன்மாக்களை அடைவது. வன்மைமென்மைப்படி புசிப்பாவது. அனுபவித்தாலன்றி அழியாதது. வேதாகமவிதி உபாயங்களால் தனது சக்திகுன்றுவது. சிவப்பிரகாசம்—பொது—16. "நண்ணியிடும் உருவதனுக்கேதுவாகி"—மேற்கோள். நல்வினை தீவினைகள் கன்மம் எனப்படும். ஆன்மாவின் இச்சாசத்தியின் காரியமாகிய வெறுப்பு விருப்புக்களால் மூலகன்மம் தோன்றுவது. எனவே விருப்பு வெறுப்புக்களைச் செய்வது கன்மமலம். பிரபஞ்சப்பொருளைத்தோற்றத்செய்வது மாயாமலம். விபரீதவுணர்வு மேம்படச்

செய்வது ஆணவமலம். ஆணவம் உயிரைப்பற்றி யது. மாயை மனத்தைப்பற்றியது. கன்மம் உடம்பு பற்றியதென்க. இம்மூன்றும் மெய்யுணர்வை உண்டாக்காமையின் இவற்றை நீக்கவேண்டியதா யிற்று. இவற்றைக்கழியச்செய்வதும் சிவத்தினது அருளேஎன்க.

மூதுயிர் - உயிர்கள் அநாதியானவை. இவை மூன்றுவகைப்பட்டு நிகழும். இவை பாசபந்தம் உடைமையின் பசுக்கள் எனப்படும். தம்மை யென்றமையால் உயிர்கள் எண்ணில என்பது கருத் தாம்.

வரி—94

தம்மடிப்படுத்துவதாவது—ஆன்மாக்கள் சுத்தப் பட்டுத் தாமழியாமலும், சிவனேயாகாமலும், அவனையின்றிக் காரியப்படாமலும், அம்முதல் வனுக்கு வேருகாமலும், சிவபெருமானுடன் சுத்தாத்துவிதமாகப் பொருந்திநிற்றல்—இது பர மானந்தாவசசாயுச்சிய சிவபோகமுத்தி எனப்படும், இதனைத்திருவடி நீழலடைதல் என்பர். கொம்மை சான்ற—வலிமை நிரம்பிய. எல்லாமந்திரங்களினும் இதுவலிமைமிக்கதென்க.

வரி—95.

அருமறை—வேதம்; வாசகம் — திருவாசகம். அருமறையில் இதயமாய் விளங்குவது இன்ன தென்பதைத் திருவாசகம் எடுப்பிலேயே வெளி யிட்டுக்கூறுகிறது.

வரி—96.

மந்திரக்கிளவி — மந்திரச்சொல். இங்குப்பஞ் சாக்கரமந்திரச்சொல். "ஐந்தெனுமெவையும் வந்

துறல் பொருந்த ''—மயிலாசலமாலை. மானதம் முதல் மூன்ருகக்கணிக்கப்பெறும். இது தூலம்—சூக்கு மம்—அதிசூக்குமம் எனமுந்திறப்படும். இவற்றுள் தூலம் நகரத்தை முதலாகவுடையது. தூலவை கரிவாக்கால் தனக்கும் பிறர்க்கும் கேட்கும்படி உச்சரிக்கப்படுவது உரை எனப்படும். மந்திரம்— தன்னை நினைக்கிறவனை இரட்சிப்பது எனப் பொருள்படும்.

வரி — 97.

"நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவா யவே" என்றனர் சுந்தரர். மனங்கலவாவிடினும் சொல்லத்தக்கதிது வென்க. நற்பெயர் என்றமை யால்—சமாதியினை அடைதல் கூடாதார்க்கு இதனை விதிப்படி ஓதவே இன்புறு நிலைகூட்டுமாதலின் இவ் வாறு கூறப்பட்டது. மயக்கத்தினைப்பொருந்திய திரோதானமும் மலமும் ஆகிய இவைகள் நீக்கற் பாலனவெனவும், நீக்கின் வீடடைதல் கூடுமெனவும் இஃதுணர்த்துவது என்க. எல்லா நூற்பொருளும் இத்திருவைந்தெழுத்தினுள்ளே அடங்கும். நயந்தோன் என்றமையால் இறைவற்குரிய பல்லா யிரப் பெயர்களுள்ளும் இத்திருப்பெயரே பந்தம் × முத்தி இரண்டையு முணர்த்தி உயிர்களை இன்புறச் செய்யவல்லதென நாமறிதரற்பொருட்டு இத்திரு மடத்து ஆதிமூர்த்திகட்கு இத்திருப்பெயர் விருப்பமா யிற்றென்க. "அரும்பெறல் மரபின் பெரும் பெயர் முருக" என்ற இடத்துவிரிவு போலக்கொள்க. இப் பொருள் தத்துவாதீதப்பொருள். அதன் திருப்பெயர் இது. ஆதலால் 96 வரிகள் கடந்து 97ஆவது அடித் தொடக்கத்தே இத்திருப்பெயர் அமைக்கப்பட்டது.

காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி—ஓதுவார்தம்மை நன்னெறிக்குய்ப்பது—வேதநான்கினும் மெய்ப்பொருளாவது—நாதன்நாமம் நமச்சிவாயவே'' என்பது தமிழ்மறை.

வரி—98.

மானிடம்—மானிடர்; மானிடம்—மானை இடக்கையிலே; ஆன்ம வர்க்கங்களைத் தாங்குவதும் உயர்த்துவதுமே தமது செயல் என்பது புலப்படும் வண்ணம் மானொன்றை இடதுயர் கரத்திலே பரமன் தாங்கியருளுகின்றான். "பாணிமான் ஒலியும்நீ கேட்டிலையோ" என அம்மானின் இழிபும் பெம்மானின் அருளும் தெரிதரக்கூறப்படுதல் காணலாம். மான்—உமையம்மையும் ஆம்.

வரி—99.

வால்—தூய்மை. தூய்மையான வெண்ணிறமுடைய இடபக்கொடியினை வலமாக உயர்த்தியவன். இஃது அறக்கொடி. "வெள் ஏறு வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள் செல்வன்" எனவும் புகழப் படுதல் காண்க. இஃது, தான் அறநெறி திறம்பா ஒரு தனித் தெய்வம் என்பதை அறிவுறுத்துவதாம். உயர்—என்றமையால் யாவர் கொடிகளினும் உயர்ந்து விளங்குதல் தேற்றம்.

வரி—100.

இன்மை-வறுமை; (ஆணவமலமின்மை); ஆசையின்மை; தம்பால் அணுகுவோரின் வறுமை கண்ட மாத்திரத்தில் இமைப்பொழுதிலே அவர்க்கு வேண்டுவயாவும் தந்தருளுகின்ற அவா அற்றவர்க்கும் இங்ஙனமே ஆனந்தானுபவத்தைத் தருகின்ற.

வரி—101

இமையா நாட்டம்—இமைத்தலில்லாத நாட்டம். உயிர்கட்கு அருளும் வண்ணம் விழிப்போடிருக்கும் கண்களையுடையவன். சேவடி—செவ்விய சீபாதம்: ஞானனந்தமே திருவடியாம். சேவடியின்கண் என ஏழனுருபுவிரிக்க.

வரி—102

படர்தல்—செல்லுதல்; செல்லவேண்டுமென்கிற ஒரே எண்ணம் அந்தரங்கத்தே கொண்ட உள்ளத்தோடும். சென்று இன்னவற்றைக் கேட்கவேண்டு மென்னுமல் செல்லவேண்டுமென்பதே கருதின் அமையுமென்க. சருவக்ஞனுதலின் அவனைக் கேட்க வேண்டுவதில்லையாம். நாம் கேட்பதைவிட அவன் கொடை பெரிதாகும்.

வரி—103

இயல்பு உணர் என்றேனும் இயல் புணர் என்றேனும் கொள்க. அவனது இயல்புகளையெல்லாம் அறிந்த புலவனே! (அல்லது) பேரின்பப் பெருவாழ்வுக்கான எல்லா இயல்புகளும் சேரப்பெற்ற ஞானவானே! இன்றே நீ சென்றால். 'நாளைக்கு' என்று காலங்கடத்தவேண்டுவதில்லை. செல்லும் முயற்சி இப்போதே கொள்ளத்தகுவது. இறைவனிடம் செல்லற்கு காலங் கருதவேண்டா என்றபடி. சம்பந்தப் பெருமான் திருமதுரை சென்றாற்போலச் செல்லுதல்.

வரி—104

'இதுகாறும் எங்கும் ஏதும் பெற்றிலமே' என் செய்வோம் என்று இரங்கிய நெஞ்சத்தினது இனிய எல்லா விருப்பும் அடங்குமாறு. எனவே ஆசை

இனி எழா வண்ணம். இன்னொருவன்பால் செல்ல வேண்டுமென்ற எண்ணமே எழாதபடி நெஞ்சி லுள்ள அலுப்பும் ஆசையும் நீங்குமாறு.

வரி—105

இன்னே – இப்பொழுதே; முன்னிய—கருதிய; நீசெல்வதற்குத் தாமதம் செய்வையேல் அவன்றானே இங்குற்று அருள்செய்யத் தொடங்கிவிடுவன் என்பது தோன்ற இன்னே எனப்பட்டது. அவன் ஈந்தருளிய நலங்களுள் நீ கருதிய நலன்களும் அடங்கிக் கிடத்தலும் காணலாமென்றற்கு 'முன்னிய' எனப் பட்டது. . எண்ணவேண்டாமலே ஈந்தருள்குவன் அப் பரமதயாளன் என்பதாம். பெறுகுவை—என்பது அடிமைத் தன்மையை உணர்த்தும். அறிவோடும் உடைமைப்பட்டுக் கிடத்தல் அடிமையின் இலக்கண மாம்.

## வரி 106—116.

முடிபு — அவன் திருக்கயிலாயத்திருத்தலும் உரியன்.

வரி—106.

இனி அவன் என்றேனும் இனியவன் என்றேனும் கொள்க. இனி – இதன்மேலாக, அவன் —அப்பரமன்; (அல்லது) நம்மினும் நமக்கினியவ னாகிய அவன். "என்னினும் எனக்கினியான் இன்னம்பர் ஈசன்" என்பதும் காண்க. வேர் இயல்பதம் — கிழங்காகிய இயல்பினையுடைய உணவு. ஏனம்— பன்றி. ஆதாரமான இயல்பினையுடைய திருவடியை அடையமாட்டாமல் முன்னம் ஓர் ஏனம் வருந்தியது. ஆனால் இங்குப்பல பன்றிகள் வேரியல் பதங்கொண்டு களிக்கின்றன என்க. பதம்—உணவு; பாதம்.

வரி—107

முடி—கொண்டை; சிரசு. முன்பு ஓரன்னம் முடியினைக் காணமாட்டாமையின் வருந்தியது. இங்குப்பல அன்னங்கள் முடி (கொண்டை) உடையனவாய்ச் சுனைகளில் நீந்தி மகிழ்கின்றன என்க.

வரி—108

தந்தி—யானை; முன்னம் ஓர் யானை பகைத்து வந்துபட்டது. வேங்கையும் அப்படியே; பாம்பும் அவ்வாறே. ஆனால் இங்கு அவ்விதமானபகையேதுமில்லாத யானைகளும், வேங்கைகளும் (109)மாணிக்கம் ஒளிர்கின்ற பாம்புகளும் இன்போடுலவுகின்றன என்க.

வரி—109

தேனைச்சொட்டிக்கொண்டிருக்கும் தேனடையும், தேனீக்கள் உண்டு மிஞ்சியமையால் பொழிவதாயின இருல்கள்.

வரி—110

பச்சைத்தோரணம் (கால்நாட்டாமல்) கட்டியமைபோல் பறக்கின்ற கிளிக்கூட்டங்கள். நெருங்கிய பல கவரிகளும். கவரி ஒருவகை மான்.

வரி—111.

களித்தாடுகின்ற மயிலினங்களும், வண்டுகள் கிண்டுகின்ற சுனைக்குவளைகளும்.

வரி 112–113

வளி—காற்று; காற்று வீசுதலினாலே தலை வணங்கிநிமிரும்போது மற்றை மூங்கிலோடும் உரசி 'ஹரஹர' எனச்சப்திக்கின்ற மூங்கிற்புதர்கள் பல உள்ளமலைகள் சூழ்ந்துள்ள வழிகள் பற்பல மேலே செல்லுகின்ற. தோரணங்கட்டிக், கவரிவீசி,

நடனம் நிகழ, மலர்பரப்பி, வணங்கி 'வர' என்று சொல்லி வழிகாட்டி வரவேற்பது போன்ற காட்சியுள்ள திருக்கயிலை என ஒரு நயம் காண்க.

வரி—114

வேதமே உயர்ந்த கோயிலாக, அக்கோயில் விளங்கும்படிஒளிருகின்ற, நீள் கோயில் என்றமையால் முடியறியப்படாததென்க. அன்றிப்பிரணவமே கோயிலாக விளங்க எனினுமாம். கோயிலாற் கயிலையும் கயிலையாற் கோயிலும் வேறுபட்டும் ஒன்றியும் உடனாகியும் விளங்குகின்ற தன்மைதெரிக.

வரி—115.

திருக்கை இலாருக்கு — திருக்கு = ஆணவமலம்; எனவே மலரகிதர்கட்கு இருக்கையாக உள்ள. எனவே பற்றறமுயல்வோர் எப்போதும் தங்கியிருந்து பூசனையும் ஓமமும் தியானமும் புரிகின்ற தவச்சாலையாக விளங்குகின்றது திருக்கயிலாயம் என்க.

வரி—116.

அழியாமரபினது திருக்கயிலாயம் என்க. ஆண்டு எப்போதும் காட்சியளித்துக்கொண்டிருக்கும் உரிமையுடையவன்.

இத்தகைய சிலம்பினைக்குறுகுதற்கு இயலாதென்பையாயின், அவனை அவ்விடத்துப்போல வேறு இடங்களிலும் காணலாம். யாங்கென்பையேல் கூறுவன்; அக்கயிலையிடத்திலேயல்லாமல்,—

முதல் முடிபு

பரம்பொருள் — காட்சித்து — அவன் சேவடி— திருக்கை—மார்பினன்— சென்னியன்—மழுவினன்—

முன்பினன்—நயந்தோன் — பொறுத்தோன்—கொடியினன்—இறையவன்—சேவடி செல்வுறின் புலவ! பெறுகுவை; அவன் — திருக்கயிலாயத்திருத்தலும் உரியன். அதாஅன்று, —

## 2. திருவெண்ணெய்நல்லூர்

## வரி 117—122.

குறிப்புரை.—முடிபு.

உயிர் தங்குறும் அங்குரம் நிகழ் வித்தினை, விளைவு எய்துவான், வயற்குடையவன் கருத்து முறைமென்புலம் தெளித்திடல் நிகர்வுற—மன்பதை உலகினை மடுத்து அமர்மாயை விடுத்தருள் திறத்தினன்.

*வரி—117.*

தான்உடை — தான் தனது உடைமையாக உடைய; உழவன்பாலுள்ள வித்துக்கள்யாவும் அவனுக்கே உரியன. அவன் இச்சைவழி இயங்குறும் சுதந்தரவீனம் உடையன. உயிர்களாகிய நாமும் இறைவனுக்கு உடைமையாவோம். பரதந்திரரேயாவோம் என்க. ஓருயிர்—ஓரறிவுடைய உயிர்; "புல்மரம் முதல உற்றறியும் ஓரறிவுயிர்" இவைபயிலத்தொடுங்கால் புலருமாகலின் ஓரறிவுணருயிர். இவ்வுயிர் தங்கியிருக்குமிடம் அங்குரமாம். அங்குரம்-முளை; உறாஉம்-இன்னிசையளபு.

*வரி—118.*

தான்நிகழ்வித்தினை—இவ்வுயிர்த்தன்மை யெய்திய அங்குரத்தினை இயல்பாகத்தாங்கியடக்கிக்கொண்டு பாதுகாக்கும் விதையினை; தண்மை—குளிர்ச்சி; மென்புலம்—ஈரவயல்;



திருவெண்ணெய்நல்லூர் திருவருட்டுறை ஆலய உள்தோற்றம்

விளைவு—பயன் ; எய்துவான் — அடையும் பொருட்டு ; விதைகள் தம்வலிமைக்கியைய விளை வினை எய்துதற்பொருட்டு. தட—பெரிய ; உடைய வன்—உழவன் ;

வரி—120

கருத்துத்தரும் பதத்து முறை — திரும்பவும் விளையச்செய்ய வேண்டுமென்ற எண்ணம் உண் டாகி, அவ்வெண்ணத்துக்கேற்ற பருவத்திலே, அவ்விதைப்புக்கு ஏற்றமுறையினுலே ; தெளித்திடல் —தூவிவிதைத்தல். எனவே, குடியானவன், உயர்த்தன்மையமைந்துள்ள அங்குரத்தைக் கொண்ட விதையினைத் தனக்குரிய வயலிலே விளைந் திடுமாறு கருதிப் பருவத்திலே முறைப்படி விதைக் கிருன்.

வரி—121.

நிகர்வுற—அதுபோலவே ; இறைவன், உயிர்கள் தங்கியுளள உலகினைத் தாங்கியுள்ள மாயையினைத் தனக்குரிய சிற்சத்தியினிடமாக, உயிர்களின் வினை நீங்கும் விளைவுக்காகத்தாமே கருணையால் (சங்கற் பத்தினுல்) எண்ணி, மீளவும் சிருட்டிக்கவேண்டுங் காலத்திலே சுத்தமாயை முதலாகவும் பிரதிட்டா கலை யறுதியாகவும் படைப்புறச் செய்கின்ருன என்பது பொருள். மன்பதை—உயிர்த்தொகுதி.

வரி—122.

மடுத்துஅமர் — அடக்கிக்கொண்டு உள்பொரு ளாக உள்ள. மலம் நீங்காவுயிர்க்கிடம் உலகு. இவ்வுலகு மாயைக்குள் அடக்கம் ; இம்மாயை சத்தியுள்தங்குவது. இச்சத்தி சிவத்துள் ஒடுக்கம். இந்நிலையே ஏகன் ஆம்நிலை. திறம்—சத்தி. மாயை,

உயிர்கட்கேற்பத்தனுகரண முதலவாகப் பரிணமிக்கின்றதேயன்றிச் சத்தி பரிணமிப்பதில்லை யென அறிக. வயல் விளைவை உண்டாக்குகிறதேயன்றி வித்தாக மாறுவதில்லை. வித்து, அங்குரத்துக்கேற்ப மாறியமைகின்றமை காண்க. சிவாத்துவைதர் சத்திக்குப் பரிணாமம் கூறுவர். பாஞ்சராத்திரியர் இறைவனுக்கும் பரிணாமங் உரைப்பர். இங்ஙனம் கூறும் பரிணாமங்கள் ஏற்புடையன அல்ல வென்ப. குடியானவன் வித்தாகப்பரிணமியாமை யாவரும் அறிவர். பரிணாமப்படும் மாயை உபாதானமாயிற்று. சத்தி, துணைக்காரணமே; இறைவன் நிமித்தகாரணனாவான் என்ற முறைமையும் இதனில் பொருந்துமாறு காண்க.

## வரி 123–125.

முடிபு: அரசன் முதன்மைகொள் மூர்த்தியன்;
வரி — 123.

ஐம்பெருங்குழு—அரசற்கு உறுதிச் சுற்றத்தினராகிய ஐவகையர்; இவராவார் அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தூதுவர், சாரணர் என்போர். இவர்கள் அரசனாணைப்படி அரசகாரியங்களை ஆற்றுபவர். இவ்வாறே ஐவகைத்தேவர், (அல்லது) சத்தியர் உயிராட்சிக்குரிய ஐந்தொழில்களை இறைவனாணைப்படி செய்வர். “தாமேவு தொழிலைந்தும் பரை இயற்ற” என்பது மேற்கோள். அரன் செயலை அரசன் செயற்கு உவமிக்கும் நூல்கள். விதியில் தவறினாரைத் தண்டித்தற்கும், விதியில் ஒழுகினாரை வாழ்வித்தற்கும் அரசனை உவமையாக்கி உரைப்பர். அருள்நெறி நடாத்துதல்—அரசற்கு இன்றியமையாத் தொழில்போல அரற்கும் ஆவது.

"அழிப்பிளைப்பாற்றல் ஆக்கல் அவ்வவர் கன்மமெல்லாம்..... ......பார்த்திடின் அருளே எல்லாம்" என்பது சித்தியார் கூற்று. "மறத்திற்கும் அஃதே துணை" என்பவர் வள்ளுவர்.

வரி—124.

முரசு — பேரிகை; முரசொலி அரசிருப்பினை உணர்த்துவது; சிறப்பினை உணர்த்துவது. வேதமே முரசாம் ஆகமமே அதன் ஒலியாம். வேதாகமங்கள் இறைவனை உணர்த்துவன. முந்துறும்—சந்நிதானத்தினைப் பொருந்தும்; சூரியன் திருமுன்பு தாமரை நிகழ்ச்சிகள்போல இறைவன் திருமுன்பு எத்தொழிலும் நடைபெறுகின்ற தென்க. ஐவர்—படைத்தல் முதலிய தொழில் புரிபவராகிய அதிகாரமலத் தேவர்கள். பஞ்சசத்தியர் எனினும் ஆம். "பரை முதற்கன்னியர் நிரைவினை தெரிதர நிகழ்த்துவர்"—ஞாயிறு வாழ்த்து.

வரி—125

முறை முறை தொழில்செய—தத்தமக்கு விதிக்கப்பட்ட தொழில்களை ஏறுமாறின்றி ஒழுங்காகச் செய்ய; முதன்மை கொள்—தாமே முதன்மையை எப்போதும் கொண்டுள்ள; மூர்த்தியன்—உயிர்கள் பொருட்டு வேண்டும் வடிவுகள் கொள்ளும் சுதந்திரன். ஈசானர் முதலியோர் மூர்த்திகள் எனப்படுவர்.

வரி 126–129.

முடிபு:—பரிதியின், நிவந்து, உமிழ், பளிங்கென விளங்கும் ஒருமுகம். இது சிவத்தினது சூக்குமத் திருமேனியில் ஈசான முகம் கூறுவது.

வரி—126.

அலகிலா—அளவுபடாத; ஆர் இருள்=அடர்ந்த இருட்டு; அளவுபடாத புவனப்பரப்பின் இருட்டுத் தானே ஓடும்படியாக. "மாயிருள் ஞாலம் மறு வின்றி விளங்கப் பல்கதிர் விரிந்தன்று" என்பது மேற்கோள்; சூரிய கிரணங் கண்ட மாத்திரையே திணிந்த இருட்படலம் ஓடுகின்றது. கதிரோன் கோள்களின் நடுவே விளங்குவது.

வரி—127.

இலகு ஒளி=இயல்பாகவேவிளங்கும் பிரகாசம்; விளக்குறும்=விளங்கச்செய்யும்; சூரியனுக்கு ஒளி இயல்பாயுள்ளது; புவனப்பரப்பினும் பெரிதாகப் பரந்து வியாபிப்பது; எப் பொருளையும் காணும்படி உபகரிப்பது.

வரி—128

பல் கதிர்—பலவாகிய கிரணங்கள்; பரிதி—சூரியன்: வட்டம்; இடை—நடுவு; நிவந்து=உயர்ந்து; ஒளி உமிழ்=திருவருட் பிரகாசத்தை வெளிப்படுத்து கின்ற; சிவனை் முகத்துள் ஈசானம் இடையே விளங்குவது; சர்வ ஜகத்துக்கும் மேலானது; குணத் தாலே உலகங்கட்கெல்லாம் ஈசுவரனுயிருப்பது; அனைத்தையும் ஆள்வது; படைத்தலாகிய அருட் செயற்குரியது; சுத்தமானது; கரணங்கடந்தது. அளவுபடாத ஒளியையுடையது; தியானரூபி; தற் பதத்தை ஆன்மாக்கட்குக் கொடுப்பது. இதன் சத்தி ஈசானி;

வரி—129.

பளிங்கு என—பளிங்குபோல; படிகம்போல; பான்மைத்து—தன்மையுடையது; இம் முகம் படிக

வண்ணத்தது. மூன்று நேத்திரமுடையது. சிவ சாதாக்ய சதாசிவமூர்த்த ஐக்யமுடையது. சர்வ வியாபக முடையது. திருநடம் உடையது. உயிர்களின் துன்பத்துக்குக்காரணமான ஆணவ இருளைப் போக்கி இன்பத்தைத் தருதற்கான படைப்பினைச் செய்தலின் கதிரோன் போல்வது எனப்பட்டது. ஒரு முகம் – ஈசானம்.

## வரி 130—139:

முடிபு—பொருந்தி புறந்தரும் பொலிவுடைத்து ஒரு முகம்; படுத்து அகற்றி அருள் மைத்து ஒரு முகம்; மறைத்திடுதன்மை கொள் செவ்வித்து ஒரு முகம்; அமர்ந்து வழங்கு அருள் வெண்மைத்து ஒரு முகம்; பொதிந்து வாராதுயிற்று ஒரு முகம்.

## வரி 130—131.

புரம்—அரண்சூழ்ந்த நகரம்; இறைவன் — அரசன்; மன்பதை—உயிர்த்தொகுதி; புறந்தரும்= பாது காக்கும்; சிந்துரம்=செங்குங்குமம்; காவல் சூழ்ந்த நகருக்குள்ளே அரசன் தங்கியிருப்பதுபோல, சீவ வர்க்கங்களின் உயிர்க்குயிராய்ப் பொருந்தியிருந்து, உயிர்த் தொகுதிகளைப் பாதுகாத்தல் புரிகின்ற, செஞ்சாந்துபோலும் விளங்குகின்ற அழகினையுடைய தத்புருடம் எனப்படுவது ஒரு முகம்; உலகமாகிய உடம்புக்கு அரசனே உயிர் ஆவான்; அவன் நடத்தும் வழி உலகம் நடப்பது. "மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்பர் பெரியோர். இதுபோல, சிவமும் ஆன்ம வர்க்கங்களை நடத்தும் பொருட்டு உயிர்க்குள் அந்தர்யாமியாய் வீற்றிருக்கின்றான். உயிர்களைக் காத்தற் கடமைக்கும் தாமே

முதன்மை பூண்டுள்ளமையின் இங்ஙனம் உள்ளுயி ராய் இருத்தல் வேண்டுவதாயிற்று. "என்றுநீ அன்று நான்" என்பதும், "மலர்மிசை ஏகினான்" என்பதும் இக்கருத்தை விளக்குவனவாம். இம் முகம் கீழ்த்திசையது. குங்கும நிறத்தது. இதன் சத்தி—பூரணி.

## வரி 132–133.

படுத்து—சங்கரித்து; ஆருயிர்–மக்களுயிர்; அணி =அழகு ; மை=கருமை ; மைத்து=மைந்நிறமுடை யது. உலகம், உடம்பு முதலிய யாவற்றையும் சங் கரித்து இளைப்பாறவைத்து மக்களாவார்க்கு அஞ் ஞான விரோதியாகிய ஞானத்தினைப் பாலிக்கின்ற அழகிய கருமை நிறத்தது அகோரம் எனப்படும் ஒரு முகம். இது தென்றிசையது. பிறந்து இருவினைக் குட்பட்டுழன்று அலுப்புறும்போது அவ்வுயிருக்கு வேண்டுவது ஓய்வு; ஆதலால் அதனை நல்கும் பொருட்டுச் சங்காரத்தினை நிகழ்த்தி, இவ்வலுப்பின் வாயிலாக அநுபவஜனிதமான ஞானத்தை இம்முகம் விளைக்கின்றதென்க. படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் இம் மூன்றும் உடம்பின் மாட்டுச் செய்யப் படுவனவாகிய இறைவன் முத்தொழில்களாம். மறைத்தலும், அருளலும் உயிரின்பாலியற்றப் படுவனவாகும். இம் முகம் தன் தொழிற்கேற்பக் கருமை வண்ணங் கொண்டது. இதன் சத்தி ஆர்த்தி.

## வரி 134—135.

இம்மை = இப்பிறப்பு ; மறைத்திடு = உண்மை உணரவொட்டாமற் செய்து ; செவ்வித்து=அழ கொளியுடையது ; இது வாமம் என்னும் திரு முகத்

தியல்பு கூறுவது. நிலைபெற்ற ஆன்ம கோடிகளை அறம், பொருளின்ப உண்மையுணர வொண்ணுவண் ணம் அநுபவ ஞானமுண்டாகி நிலைபெறற்பொருட்டு மறைத்து அதோமாயையுட்படுத்தியருளுதலால் இப்பெயர் உடையது என்பர். இது வடக்குத் திசையது. செந்நிறம் உடையது. இருத்தல்நிலையது. திரோபவத்துக்குரியது. இதன் சத்தி வாமை.

## வரி 136—137.

நுவல் மறை அமர்ந்து—மந்திரேசுவர மந்திரங்களை அதிட்டித்து; நுண்மை = சூக்கும உடலம்; பருமை—தூல உடலம்; நன்மை—அநுக்கிரகம்; இது சத்தியோஜாத முகம் கூறுவது. இது வெண்மை நிறத்தது. மேற்றிசைக்குரியது. கோடி சூரியப்பிரகாச முடையது. நிற்றல் நிலையது. காரண உடலம் கொண்ட ஆன்மாக்கட்கு மனோமயமாதியான மூன்று கோசமுள்ள சூக்கும தூல உடலங்களைத் தமது இச்சாமாத்திரத்தில் மந்திரேசுவர மந்திரங்களை அதிட்டித்து உண்டாக்குவது. இதன் சத்தி மூர்த்தி எனப்படும். இங்ஙனம் உயிர்கட்கான ஐந்தொழில்கட்கும் உரியவையானவும், ஆகமங்களை வெளியிட்டருளியவுமான ஐம்முகங்களும் உடையது சிவம்.

## வரி 138—139.

கிளத்தற்கு = சொல்லுதற்கு; கெழுதகை = விளங்குந்தகுதி; பொதிந்து = மறைத்துவைத்து; அறிதல் வாரா-உணர்ந்துணர்ந்துணரினும் உணர இயலாத; அறிதுயிற்று = யாவும் அறியும் துயில் நிலையுடையது. இஃது அதோமுகம் எனப்படும். இது பூஜாங்கோர

மில்லது. "ஐந்து முகத்தோடு அதோ முகமும் தந்து" என்று கூட்டி யுரைப்பர். முருகப்பிரான் ஆறுமுகங் களும் இவ்வறு முகங்களே என்பர். இது பாதலத்துக் குரியது. இங்ஙனம் பெருந்திசையாறினும் சிவம் காட்சி கொண்டிருத்தல் புலப்படுத்தப்பட்டது. இவ் வாறன் எல்லைக்கு அப்பாற்பட்ட பொருள் எதுவு மில்லை என்பது துணிபு.

## வரி 140—147.

முடிபு: அதோமுகம் இருப்ப, நால்மறை நவில் முகம் நான்கினோடு உயர்முகம் ஒன்றிட—ஐம்முகம் —ஒழுகலின், ஏமம் புணர்க்கும் பரவிடல் பொதிந்த அகலத்து தோள்.

வரி—140

அளப்புஅரும் = சொல்லுதற்கரிய; அமை வுற்று = அமைந்த நிலையினை உடையதாகி; இருப்ப = துயில்நிலைகொண்டிருப்ப; அதோமுகத்தின் இயல்பு கூறற்கியலாதது. ஆதாரமாக அமைந்து கிடப்பது. "அண்டமோ டெண்திசைதாங்கும் அதோமுகம்" என்பது திருமந்திரம்.

வரி—141.

புரத்தல் = காத்தல்; சிறப்புஅமை = உயிர் கட்கு மேன்மையை அமைக்கின்ற; புணர் = கூடிய; காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய நான்கு தொழில்களையும் தற்புருடம் முதலான நான்கு திருமுகங்களும் கொண்டிருப்ப;

வரி—142.

நவில் = சொல்லியருளுகிற; உயிர்முதல் = பசு, பதி, பாசம் என்கிற; தற்புருஷம் முதலான நான்கு

திசைமுகங்களும் நான்கு வேதங்களையும் வெளியிட்டருள; காயத்திரி முதலிய இருக்குகளைக் கற்பந்தோறும் அவ்வப்பிரமற் கருளிய எனினும் ஆம்;

வரி—143

ஒருமூன்று — முப்பொருட்கள்; உயர்முகம் = மேலான ஈசானமுகம்; ஒன்றிட = சேர்ந்திட; பதி, பசு, பாசங்களைப்பற்றித்தெளிவாகக்கூறுவன ஆகமங்கள்; இவ்வாகமங்களை ஈசானமுகம் அருளிச்செய்ததென்க. இஃது ஐம்முகங்களுள்ளும் நடுவமர்வதாகலின் உயர்முகம் எனப்பட்டது. நடுவிருத்தல் உயர்வு குறிப்பது. "கைவல நெல்லியங்கனியது போலச்-சைவசித்தாந்தத் தெய்வ ஆகமத்தை-வரன்முறை பகர்ந்த திருமலர் வாய" என்பர்.

வரி—144

ஐம்முகம் - ஈசானமாதி பஞ்சமுகங்கள்; மறை —வேதாகமங்கள்: முறை = வரிசை; இங்ஙனம், பஞ்சானனங்களாலும் வேதாகமங்களை அருளிச்செய்து தன்னிருப்பையும், விருப்பையும், ஒறுப்பையும் உயிர்கட்குணர்த்துகின்றான் இறைவன். இங்ஙனம், இறைவன், வேதாகமங்களால் தன்னை உணர்த்தாவிடில், ஆன்மவருக்கங்கள், தம்மையும், தலைவனையும், தடையையும் அறிந்து நற்கதிபெறல் இயலாது. இஃது இறைவன் பேரருட் பெருங்கருணைச்செயலாகும். இவ்வாறு அவ்வவ் ஊழிதோறும் புரிதலின் "ஒழுகலின்" எனப்பட்டது.

வரி 145—147.

ஏமம் = பாதுகாப்பு; பாயல் = படுக்கும்பாய்; பனிப்பு = நடுக்கம்; பரவிடல் = கலந்து பரவிக்கிடத்தல்; மொய்ம்பு = வலிமை; அகலம் = மார்பு; எவ்

வளவு உயிருண்டோ அவ்வளவுயிர்கட்கும் பாதுகாப்பைச்செய்தற்குரியதான, இஷ்டர்கட்குப்பாய் போல் இன்பம் செய்வதாயும், துஷ்டர்கட்கு அச்சம் விளைக்கத்தக்கதாயும் இவ்வாறு ஒன்றுக்கொன்று முரணுன இரண்டு தன்மைகளும் பொருந்தியமைந்துள்ளதும் எல்லாவல்லமையும் உடையதான திருமார்பினுடன் அமைந்துள்ள பூரணமான வலிமையுடைய திணிந்த தோள்கள் இருப்பன. "எண்தோள் முக்கண் எம்மானே" எனத்தோளும் கண்ணும் புகழப்படுவன. எண்டிசைகளும் எட்டுத்தோள்கள் எனவும் கூறுவர்.

## வரி 148—150.

முடிபு: விளக்கும் —பிலிற்றும்—சூலத்து—ஒரு கரம். மும்மைமாயை—சுத்தமாயை முதலிய மூன்று மாயைகள்; முயங்கலர்—சேராதவர்கள்; ஒன்றும்=திருவடிநிழற்கீழ்த்தங்கும்; பிலிற்றும்=துளிக்கும்; சூலத்து=சூலம் உடையது; பிரகிருதி முதலான மூன்றுமாயைக்கும் அப்பாற்பட்டதூயோர் இறைவன் அடிக்கீழ்ச்சேரும் தன்மையை, தனது அச்சம் பயக்கும் கவர்பட்ட மூன்று தலைகளும் ஒன்றுபட்டுக்கைப்பிடிக்குள் அடங்கும் விதத்தால் காட்டும், ஆலம் என்னும் நஞ்சுத்தன்மைகக்கும் திரிசூலம் என்னும் படையினை உடையது ஒரு கரம். "மும்மாயை கடந்து முயங்குமதே" என இறைவன் திருவடிப்பேற்றுக்கு வழிகூறுவர் அநுபூதியாளர்.

## வரி 151—152.

முடிபு: தடிந்து — வீழ்த்துமாறு—துணித்திடும் பரசிற்று—ஒருகரம். முதல்=ஆணிவேர், பாத

பம்=மரம்; உருமுதல்=இந்த உடம்பிற்குக்காரண மான பிறப்பு; பரசு=கோடரி; பருத்த ஆணிவேர் முதலியவற்றை வெட்டி மரத்தை விழச்செய்வது போல, இப்பிறப்பின் வடிவிற்குக்காரணத்தைத் துணித்துதவும் பிரகாசம்பொருந்திய வாயினையுடைய கோடரியினையுடையது ஒருகரம். எனவே ஆணவத் தின்வேரறுப்பவன் சிவபெருமானே யாவன் என்க. பாதபம் பல கிளைகளைப்பெற்றிருப்பதுபோல, பிறப் பும் பல கிளைகளை யுடையது ஆகும். ஆணிவேரற் ருல் மரம் வீழ்தல் ஒருதலை; அதுவே போன்று ஆணவம் என்னும் மூலமலம் அற்ருல் பிறப் பொழிதலும் உறுதி; பல அடியார்களின் பிறப் பினைத்துணித்துத் தொழிலாற்றுவதாகலின் 'ஒள்வாய்' என்ற அடைதரப்பட்டது. உரு=வடி வம். "புல்லாய்ப் பூடாய்" என்ற வடிவுகள். கவிழ்மாத்துணித்தது முருகன் கைவேல் என்பது கருதத்தக்கது.

## வரி 153—154.

முடிபு: எரிசெய் அழல் ஏந்திடும் ஒருகரம்; இருவினை—நல்வினை, தீவினை; (அ) பெரிய சஞ்சிதம் பிராரத்தம், ஆகாமியம் என்பன. குவை=குவியல்; மேடு; துகள்=துரும்பு; தூசி; அழல்=நெருப்பு; ஆன்மவர்க்கங்களின் பெரிய சஞ்சிதம் முதலிய வினை களினது மிகவுயரமான குப்பைக்குவியலை எரித்து ஒழிக்கவல்ல ஒளிபொருந்திய சுடரினைத்தாங்கியுள் ளது ஒருகரம்; இரு—என்றசொல்லினை இரண்டு என்றேனும் பெரிய என்றேனும் பொருள் செய்து கொள்ளல் கூடும். "என்பிறப்போ எண்ணத் தொலையாது"; "எல்லாப்பிறப்பும் பிறந்து எய்த்

தேன்'' என்றெல்லாம் அறிஞர் கூறுதற்கிணங் கப் பலவகைப் பலமுறைப் பிறவிகளினும் ஈட்டப் பெற்ற வினைச்சமூகம் பெரிதாதலின்—அது வரவர உயருவதேயன்றிக் குன்றுவதின்றுதலின்—உயர்கு வைத்துகளுக்கு ஒப்பிடப்பட்டது. வைக்கோற் போர் எத்துணை பெரிதாயினும் சிறு நெருப்பு அதனை எரித்துத்தரைமட்டமாக்கி விடுதல் கண்டுணர்ந்த தாகலின் 'எரிசெய்' எனப்பட்டது. "எரிமுன்னர் வைத்தூறு போலக்கெடும்'' என்பர் நீதி நூலி னும். வினையை ஒழிக்கவல்லது ஞானமே யாத லால் ஒள் அழல் எனப்பட்டது. ஒளி, ஞானத் திற்கு அறிகுறி. தீக்ஷையினும் ஞானம் தரப்படு தல் அறிந்ததொன்றும். இவ்வரிகளால் எவ்வினை யையும் பரிகரிப்பவன் சிவபெருமானேயாவன் எனத் தெரியலாகும்.

## வரி 155—156

முடிபு: துணிக்கும் வாள்குலவுறும் ஒருகரம்; ஆர்க்குறும்=கட்டுகின்ற; அவா-விடாப்பற்று; அலக் கண்=துன்பம்; குலவுறும்=விளங்கும். ஆன்மா வினைப் பிறவிக்கல்லோடு சேர்த்துக்கட்டுகின்ற பற்றின் மூலத்தினுல் ஏற்படும் துன்பங்களை அறுக் கின்ற கூர்மையான வாட் படை விளங்கப்பெறுவது ஒரு கரம். பற்றே பிறவியைத் தருதலின் ஆர்க்குறும் எனப்பட்டது. "அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும் தவாப் பிறப்பீனும் வித்து.'' அற்றது பற்றெனில் உற்றது வீடுயர்'' என்பன ஆன்ருேர் வாசகங்கள். கயிற்றினை அறுத்துவிட்டால் ஊஞ்சல் ஆதாரமான நிலத்தை அடைவதுபோலப் பாசமுதலை அறுத்துவிட்டால் ஆன்மாவும் இறை திருவடியை

எய்திவிடும். பிறவி, துன்பங்கட்கு ஏதுவாகலின் 'அலக்கண்' எனப்பட்டது. வாளும் ஒளி உடையது. கூர் என்பது ஒளியை உணர்த்தும். பாசஞானம் ஒழிதல் இங்குக் கூறப்பட்டது. அவாவாகிய முதல் என விரிக்க.

## வரி 157—158

முடிபு: பொடிக்கும் வச்சிரம் தயங்குறும் ஒரு கரம். நெகிழ்வு—பத்தியால் தளருதல்; சிலை—கல்; பாறை; மலை; தகை=வலிமைப் பண்பு; தயங் குறும்=விளங்கும். பக்தியினால் உருகும் தன்மை இல்லாத மனம் என்கிற உயர்ந்தபாறையைப் பொடி யாக்கும் வல்லமை நிறைந்த வச்சிரம் என்னும் படை விளங்குவது ஒரு கரம். "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சு" என்பராகலின் நெஞ்சுக்கு உரு கும் தன்மை உளவாதல் வேண்டும். அங்ஙனம் இல்லாத நெஞ்சு கல்லாகக் கூறப்படும். "கல்லே னும்ஐய ஒருகாலத்திலுருகும் என்கல்நெஞ்சம் உருக விலையே" எனவும் "திணியான மனோசிலைமீது" எனவும் பெரியோர் கூறுவர். ஆதலால், அத்தகைய மனப்பாறையைப் பொடியாக்கிக் குழைக்க வல்லது வச்சிரமென்க. தானாகக் குழையாததைப் பொடி யாக்கிக் குழைப்பது உலக வழக்கம். ஆகவே உள் ளத்தைக் குழைத்து நற்கதிக்கு அழைத்துக் கோடல் சிவத்தின் செயலாகும்.

## வரி—159

முடிபு: நுங்கிடும் பணித்து ஒரு கரம்; நுணல் =தவளை; புரை=போன்ற; சிறுமதி=ஜீவபோதம்; தவளையொத்த ஜீவபோதத்தைப் புசித்திடும் பாம் பினை உடையது ஒரு கரம். ஜீவபோதம்—பசு

ஞானம்; தவளை, வாயால் கதறிப் பாம்புக்கு இரை யாகி மாளும். அஃதே போன்று ஆன்ம போதமும் செருக்குட்பட்டுக்கேட்டிற்கூட்டும். ஆதலால் அத் தகைய ஜீவபோத முனைப்பினை அடக்கியருள்புரிய வல்லான் பரம்பொருள் ஒருவனே யாவான் என்பது கருத்தாம். பசுஞானம் பரமனை அறியும் வல்லமை யுடையதன்று. பரமனைப் பரமனருளொன்றே கூட்டவல்லது. சூரியனைச் சூரியனொளியே காட்டும். பிற விளக்கங்கள் காட்டமாட்டா. அன்றிக் காட்டி னும் வேறு பொருளைக் காட்டுவனவாம்.

## வரி 160—161

முடிபு: அடக்கி, பிணிக்கும் பாசாங்குசம் கொள் பண்பிற்று ஒருகரம். வெங்களிறு—மத யானை; கட்டுதற் கருவி பாசம்; குத்துதற் கருவி அங்குசம். பஞ்சேந்திரியங்களாகிய வலிய யானைகளை அடங்கச்செய்து கந்தொடு பிணிக்கவல்ல பாசாங் குசமென்னும் கருவியைச் சுமந்துள்ள தன்மை யுடையது ஒரு கரம். மதங்கொண்ட கையிகந்த களிறு பிறர்க்கும் அனர்த்தம் ஆக்கித் தன்னையும் தொல்லைக்குட்படுத்திவிடும். அதுவே மதந்தணிந்து பாகன்வழிப்படரின் அரசன் அமரும் சிறப்புப் பெறும். அது போலவே பஞ்சேந்திரியங்களின் வழியே உயிர் செல்லுமாயின் நரகினை அடைய வல்லதாகிவிடும். அவற்றை அடக்கிடின் உயிர் உயர்கதி எய்தும். "ஐம்புலவேடரின் அயர்த்தனை" என்பதும் புலன்களின் செயலை உணர்த்துவதாகும்.

## வரி 162—163

முடிபு: மணி கொண்டு இரட்டிடும் ஒருகரம். நல்லமார்க்கத்துக்கு அழைக்கின்ற நாவொடு

விளங்குகின்ற மணியைப்பற்றிக்கொண்டு ஓயாது ஒலித்தலைப்புரியும் தன்மைவாய்ந்தது ஒருகரம். "பாடின் படுமணி இரட்ட ஒருகை" என்பர் திருமுருகாற்றுப்படையில். மணியின் நாதத்துக்குப் பிறர் கவனத்தைக் கவரும் தன்மையிருத்தல் வெளிப்படை. அறிவு விளக்கத்துக்கு நாதமே உதவுதல் கண்கூடு. "நாத விந்துகலாதி நமோநம" என்பது திருப்புகழ். கோயில்களிலெல்லாம் மணியொலித்தல் அறிந்த செய்தி. எனவே தீ நெறிப் படராமல் நன்னெறிச் சேறற்குதவுகின்றது இத் திருக்கரம் என்க. புறச் சமயநெறி படராமல் அகச் சமயத்தே செலுத்தற்கண் உதவுவதெனினும் பொருந்தும்.

வரி—164

முடிபு: அஞ்சுவரல் தவிர்க்கும் அபயத்து ஒரு கரம். அடியார்கள் அச்சங்கொள்வதை நீக்கும் அபய முத்திரை காட்டுவது ஒருகரம். ஞானிகள் பிறப்பு இறப்புக்கருதி அஞ்சுவர். "யானேதும் பிறப்பஞ்சேன்; இறப்பதனுக்கு என்கடவேன்" என்ற வாசகம் கருதத்தக்கது. அச்சம் துன்பத்துக்கு ஏதுவாம். போர்க்களத்தில் வீரனுவான் அஞ்சாது நின்று வெற்றி கோடற்கண் சேனைத்தலைவன் படைன்படுமாறு போல, வாழ்க்கைக்களத்தே நேரும் அச்சம் தவிர்த்தற்கண் பரமன் உதவுகின்றுகைக்கொள்க. கடவுள் உள்ளங்கொண்டார்க்கு அச்சமும் ஐயமும் கூடா. "அஞ்சுவதுமில்லை அஞ்ச வருவதுமில்லை" என்ருர் துணிபு நோக்கற்குரியது.

வரி—165

முடிபு: வழங்கும் வரதத்து ஒருகரம். தன்னடியடைந்தார்க்கு எல்லையில்லாப்பேரின்பத்தை அளவு

குறியாது வழங்கும் வரதக்குறிப்புடையது ஒருகரம். மற்றும் அடியார்க்கு வேண்டுவன யாவற்றையும் இக்கரம் வழங்குகின்ற தென்க. நாம் கேளாதே நமக்குத் தனுகரண புவனபோகங்களை இம்மையில் வழங்கி அம்மையிலும் அளப்பிலின்பம் அளிப்பது அரனுக்கியல்பு என்னலாம். "பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடலீந்த பிரான்" என்ற ஆன்றோர் பாடல்கள் இவ்வள்ளன்மையை உணர்த்துவனவாம்.

## வரி 166—167

முடிபு—சால்முகன்; ஏற்குறும் கரன். இங்ஙனம் கூறப்புகின் ஒருவரம்புக்குட் படாதாகலின், மிகப் பெருந்தகைமை நிரம்பிய சகச்சிர சிரங்கள் உடையன்; அவ்வாயிரமுகங்கட்கு ஏற்பப்பல திறப்பணிகள் புரியும் பல்லாயிரம் கரங்களுடையன் எனப் பட்டது.

## வரி 168–169

முடிபு: அருள் செய ஏவல் தருப்பொருள்: மூவகைப் பட்ட உயிர் வருக்கங்கட்கும் அவ்வவ் வுயிருக்கும் ஏற்ற முறைகளில் அருள் புரிந்து தவுமாறு எவ்வகைப்பட்ட தெய்வங்கட்கும் ஏவல் (அதிகாரம்) தந்துதவுகின்ற பொருளாயிருப்பவன். உயிர்—பசு—ஆன்மா என்பன ஒருபொருட் கிளவிகளாம். பாசத்தாற் கட்டுப்படுதலின் பசுவெனப் படுவதாயிற்று உயிர். உபநிடதங்களும், ஆகமங்களும் உயிரை, ஆன்மா என்னும். இது ஞானமும், விழைவும், செயலும் உடையது. ஆணவ மலச் சேர்க்கையினுல் இவ்வறிவு விழைவு செயல்கள் மழுங்கிக் கிடக்கின்றன. "மாந்தர்க்கு இனத்தியல்பதா

ஆகும் அறிவு" இதுபோன்றதே ஆன்ம வியாபகம். இவ்வுயிர்கள் எண்ணில. எல்லா ஆன்மாக்களும் மூன்று பிரிவாக்கியுரைக்கப்படும். ஒரு சாரார் விஞ்ஞானகலர் ஆவர், இவர். விஞ்ஞானத்தாற் கட்டுப்பட்டு ஞானத்தால் வீடெய்துவர். இவர்கள் ஆணவமல மாத்திரம் உடையர். சுத்த தனுகரண புவன போகங்களை உடையர். பரமன் அறிவுக் கறிவாயிருந்து இவர்கட்கு அநுக்கிரம் புரிவர். இரண்டாம் பிரிவினர் பிரளயாகலர் ஆவர். இவர்கள் ஆணவம், கன்மம் என்னும் இரண்டு மலங்களை உடையர். இவர்கட்கு இறைவன் மான்மழுத் தாங்கிய தெய்வத் திருமேனியுடன் முன் நின்று அருள் புரிவர். இனி, மூன்ரும் பிரிவினரே சகலர் எனப்படுவர். இவர்களில் பெரும்பாலர் நாமே. இவர்கட்கு ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்களும் உண்டு. இவர்கட்கு இறைவன் ஆசாரியக் கோலத்தை அதிட்டித்து நோக்கம் முதல் அவுத்திரி ஈருன தீட்சைகளால் நற்கதியருளுவர். "முத்தியடைவர் இருவினை யொப்பின் அருட்குருவி ஞலே" என்பது. சிவநெறிப் பிரகாசம். எனவே அதிதூல மல சத்திப் பிணிப்புடைய நம்மனோர்க்கு இறைவன் மானிடச் சட்டை சாத்தி (மான் காட்டி மான் பிடிப்பதுபோல) குருவுருவாய் எழுந்தருளிவந்து உபதேசத்தாலும், நூல் முகத்தாலும், பல் வேறு வகைப்படஉணர்த்தியருளுவர். "மும்மலமும் சேர்ந் தார் சகலர்; அவர்க்குத் திருவுருவாய் ஓர்ந்தே விழித் துரைப்பனுற்று" என்பது சிவானந்த மாலை 68. இங்ஙனம் இறைவன் இருவினையொப்பு முதலியபக்கு வங்கண்டு அருள்புரியாக்கால் நிலைபெருது கொள்ளி வட்டமும் காற்ருடியும் போலப் பிறப்பிறப்புள்

சுழன்று நால்வகைத்தோற்றத்து எழுவகைப்பிறப்புள்ளழுந்தியே வருந்த வேண்டிக் கிடக்கும் என்க. ஆதலாலே நம்மனோர்க்குக் குருவும், தீட்சையும் இன்றியமையாதன. "குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" என்றார் அநுபூதியிலும். அரி அயனாதியோரும் சகலரே என்பர் நமக்கு அறிவு விளக்கம் உண்டாக்கும் பொருட்டே உபகாரிகளாகி ஒழுகும்படி அரியயனாதியோர், இறைவனாணையால் அதிகரிக்கப்பட்டுள்ளனர் என்க. எத்திறத்திறை—படைத்தல் முதலிய பலதிறத் தேவல்புரி தலைவர். யாவரும் யாவும்இறைவன் பேராணைப்படி நிகழ்தலின் ஏவல் தரும்பொருள்சிவமே எனப்படுவதாயிற்று. "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்பர் பெரியோர். "அறிதரும் சிவனே எல்லாம் அறிந்தறிவித்து நிற்பன்' என்பதும் இதுவே பற்றியது.

## வரி 170—173.

முடிபு:- அருளியும், அருளியும், ஆகும் தேசிகன். ஒருமலம்—ஆணவமலம்; இருமலம்=ஆணவம், கன்மம்; மும்மை = ஆணவம், கன்மம், மாயை; ஆர்=கட்டப்பட்ட; அருமையான; உள்+நின்று=உண்ணின்று; ஏய்ந்தோர் = பொருந்தியவர்; இயைவ—ஏற்பனவற்றை; செம்மை—நடுவுநிலைமை; சமநோக்கு; தேசிகன் = பரமாசாரியன். ஒருமலம் எனப்பட்ட போதிலும், இவர்க்கு ஏனையவை இரண்டும் சூக்குமமாக உண்டு. இருமலம்—எனினும் பிறிதொன்றும் குறைந்த நிலையிலுளது; மூன்று மலமும் தூலப்பட்டு அமைபவர் சகலராவர். விஞ்ஞானகலர், பிரளயாகலர் தம்முள்ளும் உட்பகுப்புண்டு. இங்ஙனம் படிப்படி

யாக உயிர் வருக்கங்கள் ஒன்றினென்றுயர்ந்து விளங்குதல் பக்குவநிலைக்கேற்றபடியாம். இப்படி நிலைக்கேற்பவே இறைவனும் விஞ்ஞாநாகலருக்குத் தன்மை நிலையாகவும், பிரளயாகலருக்கு முன்னிலை யினும், சகலர்க்குப் பின்னிலையினும் தோன்றி அருள் புரிவன் என்க. "பந்தமும் பிரிவும் தெரிபொருட் பனுவற் படிவழி சென்று சென்று ஏறி" என்பத னால் பக்குவமுறைக்கேற்ப அறிவிப்பதுணர்த்தப் படும். இவ்வுணர்த்துகை, முன்னைய இருதிறத்த வர்க்கு நிராதாரதீக்கைப்பெயர் பெறும். பின்னைய சகலர்க்குச்சாதாரதீக்கை எனப்பெயருறும். இறை வனுடைய சுத்த பூரணசைதன்னியம், ஆன்ம சைதன்யத்துடன் நீருள்நிழல் போலக்கலந்து நிற்ப தாதலால் இங்ஙனம் அவரவருக்கேற்ப இயற்றுதல் இறைவற்கு எளிதாயிற்று. அறிவைச்சிவமாகவும், உருவைச்சிவமாகவும், குருவைச்சிவமாகவும் கொள் ளும் நிலை பக்குவிகட்கே தெரிவதாகும். குழந்தை யைப்பெற்றபின், அதுகாறும் தாயன்பு இன்ன தெனத்தெரியாத மலடி, முலைப்பாலும் கண்ணீ ரும் தோன்றப்பெற்றுத்தெரிகிருள். இதுபோவே பக்குவிகளாய பின் அறிதல் நிகழும். "இல்லா முலைப்பாலும், கண்ணீரும் ஏந்திழை பாலல்லாய் உள்வாம்" என்பது மேற்கோள். சகலருள்ளும் தீவிரதரம், தீவிரம், மந்தம், மந்ததரம் உண்மை யால் அவைகட்கேற்ப அருள்புரிதலின் செம்மை ஆசான் எனப்பட்டது. ஆகுறும் என்றமையால் பொதுவும் சிறப்புமான அதிட்டானங்கள் சொள்ளப்படும். தெள்ளிய ஞானத்தைப்போதஞ் செய்பவனுதலால் தேசிகன் எனப்பட்டது. கலை முதலியதத்துவங்களோடு கூடியவர் சகலர்; அத்தத்

துவங்கள் பிரளயத்தே நீங்கப்பெறுபவர் பிரள யாகலர்; இவற்றை விஞ்ஞானத்தால் நீக்கப்பெறு பவர் விஞ்ஞானகலர். ஓரே பிறப்பும், ஒன்றின் பலபிறப்பும், பல்வகைப்பிறப்பும் முறையே இவர்கள டைவதே பிறப்பு வேறுபாடென்ப.

## வரி 174—177,

முடிபு: அவிர்ந்தும் செல்லா இருள் பரிகரித் தருள்மார் தந்து அமைஇ அடைத்தும்;

### குறிப்புரை:—

முச்சுடர் — சோமசூரியாக்கினி; அவிர்ந்து— விளங்கி; முசித்தல்=அழித்தல்; பந்தம்—தடை; அகஇருள் = அஞ்ஞானம்; (பசு, பாசஞானங்கள்); பரிகரி = நீக்கு; அருள்மார் = அருளற்காக; நந்தி = விரும்பி; நந்திதேவர்; சனக்கு = சனங்கட்கு; (சனத்துக்கு என்பதன் அத்துச்சாரியை தொக்கது); சனற்குமாரர்; ஞானம் = மெய்ஞ்ஞானம்; போதம்; சத்தியஞானதெரிசனிகள்; நல் சோதி = நல்லவிளக் கம்; பரஞ்சோதியார்; அகவழி = உள்ளிடத்தே; அகச்சந்தானம்; சகவழி = உலகமார்க்கம்; பிறப்பு நெறி;

சூரியன் முதலிட்ட மூவகைச் சுடர்களும் ஒன்று கூடிப் பிரகாசிப்பினும் அழிக்கமுடியாத கட்டாகிய ஆணவ இருளைப் பரிகரிக்கவேண்டி (விரும்பிச் சனங் கட்குச் சிவஞானபோதத்தையும் நல்லதெளிவையும்) நந்திதேவர்க்கும், அவரால் சனற்குமாரமுனிவர்க்கும், அவரால் சத்தியஞானதரிசினிகட்கும், அவர்மூலமா கப் பரஞ்சோதிமுனிவர்க்கும் உபதேசமுறையில்தந்து அகச்சந்தானகுரவர் பரம்பரையை அமைத்தருளி

அவர்கள்மூலமாகப் பிறப்பிற்கான கீழ்நெறியை முற்ற அடைத்தருளியும்;— இது தேவபரம்பரைச் செய்கை.

சூரியன் முதலியசுடர்கள் உலகின்புறவிருளையே போக்கவல்லன. மக்களின் அகவிருளை நீக்கமாட்டா; அத்திறமை அவையாவும் ஒன்றுகூடி ஒளிறினும் அவைகட்கில்லை. இருட்டு எல்லோருடைய கண்களை யும்மறைப்பதுபோல, ஆணவம் யாவருடைய போதங் களையும் மறைப்பது. அதனைப்போக்குவதற்கு ஈறி லாச் சிவஞானமொன்றேவல்லது. அது சிவனரு ளாலே அமைவது; ஆதலின் சிவமே கருணைமேலீட் டால் அந்த மெய்ஞ்ஞானத்தை அருளற்பாலர். நிரந் தரமாக மக்கட்கு வழங்கும்பொருட்டு அப்போ தத்தை (வேதத்தைக் கடைந்தெடுத்த போதத்தை)ப் பரம்பராமுகமாக்கக் கருதித் திருநந்திதேவர்முதலிய வர்வழி கிடைக்கச்செய்துள்ளார். இங்ஙனம் சிவ பரம்பொருள் தமது இயல்பான கருணையினால் விரும்பி மக்கட்கு ஞானமுண்டாக விளக்கம் செய் தார் எனவும் பொருள்படுமாறு "நந்தி சனக்கு ஞானநற் சோதிதந்து" எனப்பட்டது. இவ்வகச் சந்தானகுரவர்களின் பெயர் மாத்திரையே இவ்வுண் மையை விளக்கிநிற்றல் வியத்தக்கதாகும். சகவழி தொலைத்தற்கு அகவழியே உதவுவது, "ஓடு மனத்தை ஒடுக்கிடல் முத்தி" என்பதும் இக்குறிப்புடையது. "பரிந்து, நாகமா நதிமதியம் பொதிசடையான் அடிகள் நணுகும் வகை கருணைமிக நயக்குந்தானே" —என்பதும் இவ்வுண்மையருளும் பிரகாசமாகும்.

இனி இவ்வகச் சந்தான பரம்பரையினை இப் பூமியோடுதொடர்புகொள்ளும்படி அடைத்தும் என

வும் பொருள் படுத்தலாம். உம்பரின் வழி வழிவந்த இப்பரம்பரையை இம்பரின் விளங்கச்செய்தது பின்னர் வரூஉம்பதி என்க.

## வரி 178—182.

முடிபு: தாங்கிய அருட்டுறை; மதித்தே கழிப்பான் உணர்த்துபு அருள்பதி;

## வரி 178—179

தடுத்தாள் — ஆலாலசுந்தரராகிய நம்பியாரூரரை ஞானநெறியிலே படராமல், இல்லற நெறியிலே படருமாறு தடுத்தவளை; (சடங்கவியார் திருமகள்); கொள் = மனைவியராக ஏற்றுக்கொள்ள லுற்ற; வன்தொண்டர் = சுந்தரர்; தடுத்தாட்கொண்டு = தடுத்து ஆட்கொண்டு; அவர் = அச்சுந்தரரை; அருட்டுறை = திருவெண்ணெய்நல்லூர்ச் சிவாலயம்; நம்பியாரூரரை ஆவணங்காட்டி மன்றத்தேற்றி ஆட்கொண்டமை வெளிப்படை. மறைப்பு தவிர்த்து இறைவன் ஆட்கொள்ளுதலையும், யாவருமே சிவத்துக்கு அடிமைப்பட்டவர் என்பதையும் இவ்வரலாறு நினைப்பூட்டும். வலிமை பேசித்தொண்டராயினமையின் வன்தொண்டர் எனப்படுவர். ஏழாந்திருமுறையின் துவக்கச்சொல் இதனை உணர்த்தும். தடுத்தாட்கொண்டவர் என ஒரு சொல்லாக்கிச் சிவபெருமானைக்குறிப்பதாகவும் கொள்ளலாம். வாங்குதலின் தாங்குதல் சிறந்த செயலாகலின் 'தாங்கிய' எனலுற்றது. அருட்டுறையிற் குளித்துப் பெருந்துறையிற் படிந்து ஆவடுதுறையில் தூய்மையுறல் சீவர்க்கு மரபென்க. நூலறிவுகொண்டு உபதேசம்பற்றித் தீக்கையுற்றுத் தூய்நிலை எய்துதல் இங்குக்கூறியதன் உட்கிடை.

தடுத்தாட்கொள்ளப்பட்ட வன்தொண்டர் எனினும் ஆம்; கொள்ளப்பட்டவர், கொண்டவர் ஆகிய இருவரையும் நம்முன் நிதரிசனமாகத் தாங்கிக்காட்டுகின்றது இத்திருப்பதி எனக்கொள்க. ஆதலின் உண்மையின் அடைந்தால் நம்மையும் வெம்மை கெடுத்துத் தாங்கும் இயல்பினது இந்நகர்ஆம். "தன்கடன் அடியேனையும் தாங்குதல்" என்பர் பெரியாரும். மற்றும் இப்பதி—

## வரி 180—182:

மறைஆன் = வேதமாகிய பசு; தரு = உதவிய; கடத்து அகம் = பானைக்குள்ளே; பெண்ணுகடத்தினை; மதித்து = மத்தித்து; கடைந்து; கருதி; மண்ணை = இம்மண்ணை; இவ்வுலகச் சிறுநலங்களை; உண்டு = சாப்பிட்டு; அநுபவித்து; ஒழி = வீணே இறந்துபடுகிற; மாசு = குற்றம்; வினை; நோய்; அற = முழுதும்; கழிப்பான் = போக்கும் பொருட்டாக, வெண்ணெய் = வெண்ணெயாகிய மருந்தை; அமுதத்தை; திருவெண்ணெய்நல்லூர் என்னும் பெயரை; உணர்த்துபு = உணர்வித்து; வீடு = பேரின்பவீடு; விழுப்பதி = சிறந்ததலம்; அருட்டுறை, விழுப்பதி என்னும் தொடர்களைச் சிவத்தையே குறிப்பனவாகவும் கொள்ளலாகும். வேதப்பசு அளித்த பாலினைக்கொண்ட கடத்தைக் கடைந்து, இவ்வுலகபோகங்களையே பெரிதெனஎண்ணிமாண்டுபடும் மக்கட்டு அத்தீங்கு நீங்குமாறு அமுதத்தைத் தெரிவித்து முத்தியருளும் சிறந்த இடம்; வேதமென்பது எல்லையற்ற விரிவுடையது. அதுகல்பந்தோறும் உகந்தோறும் வேண்டுமளவுக்கு வெளிப்படுவது; பசுவின் இயல்பும் இத்தகையதேயாத

லின் வேதம் பசுவாக உரைப்புண்டது. "வேதம் பசு அதன்பால் மெய்யாகமம்" என்பது மிவ்வுருவகம் தருவதாகும். பசுவையோம்பிக் கன்று காட்டிப் பால் கோடலினும் ஆளுடைய பிள்ளையார் போன்று பாலையே நேராக அடைதல் சிரமமில்லாத தென்பது இயல்பாக அறிதலாவது. பாலைக்கடத்திலிட்டுக் கடைதல் வழக்கம். மத்தித்தல் = குழைத்தல் (அ) கடைதல். மண்ணுண்ணும் பிள்ளைகட்குப்பீர் நோய்நேரும். அதற்கு வெண்ணெயே மருந்தாம். மண்ணுலக போகங்களையே நுகரும் மானிடர் அப் பிள்ளைகளையே நிகர்ப்பர். இவர்நோய்க்கும் வெண்ணெய்ப்போதமே விழுமிய மருந்தாம். "மண்டான் சோர்ந்த துண்டேலும் மனிசர்க்காகும் பீர்—சிறிதும் அண்டா வண்ணம் மண்கரைய நெய்யூண் மருந்தோ மாயோனே" என்று ஆழ்வார் கூறுவதும் காணத் தக்கது. எனவே, சிவபெருமான், மக்கட்கருளும் கருத்தோடு வேதப்பாலை நெய்யாக்கி உதவும் பொருட்டு மெய்கண்டதேவரைப் பெண்ணாகடத் தத்தே பிறந்திடவும், திருவெண்ணெய்நல்லூரிலே வளர்ந்திடவுந் திருவுள்ளங்கொண்டருளினான் என் பதும் இவ்வரிகளின் உள்ளோடும் உரையாம். கடத்தகம் = பெண்ணாகடத்திடம்; இனி, மறை = வேதாகம நெறிப்படி (திருநாவுக்கரையர் அடைய விரும்பிய) ஆன் தருபால் = இடபம் (சூலம்) இலச்சினையை அவர்க்குப்பொறித்தளித்தபான்மையுடைய எனவும் பொருள்படுத்திப் பெண்ணாகடத்துக்கு அடைமொழியாக்கினும் அமையும். இச்சரிதமும் அறிந்த வொன்றும். வெண்ணெய்—பெயர்வாசி, வெள் + நெய்; "நெய்யின் உறுசுவையாம் நீள்



திருவெண்ணெய்நல்லூர் திருவருட்டுறை ஆலயம்

வெண்ணெய் மெய்கண்டான்—செய்த தமிழ்நூலின் திறம்'' என்பது காட்டாகும்.

### வரி 183–184.

முடிபு: பாடியை ஆக்கி அருள் புண்ணியன் புகன்று உறை பதி. கவி=குரங்கு; இறை=தலைவன்; இராமன்; பாடி=பாடியவன்; கம்பன்; கவிக்கு இறை=கவிச்சக்கரவர்த்தி; புண்ணியன்=சடையப்ப வள்ளல்; புகன்று-விரும்பி;

குரக்குப்படைக்குப் பெருந்தலைமைபூண்ட இராமனைப் புகழ்ந்து இராமகாதை பாடிய கம்பநாடரைக் கவிச்சக்கரவர்த்தியாக்கி இப்பூவுலகுக்குத்தந்தருளிய நல்வினையாளராகிய சடையப்பபூபதியார் விரும்பி வாழ்ந்தருளிய அழகிய நகரம். "சடையன்வெண்ணெய்நல்லூர்வயின் தந்ததே'' என இராமாயணம் உருப்பட்ட இடம்ஓதப்படுவது. "அடியிணை அநுமன் தாங்க" என்பதனால் கவிக்கிறை என இராமன் இசைக்கப்படுவன். கம்பனும் இராமாயணம்பாடிய முகமாகச் சிவத்தையேபோற்றினன் என இராமாயண தாற்பரிய சங்கிரகத்தாலுணர்த்தப்படும். இராமன் புகழை உலகம் அநுபவித்தற்குக் கைகேயி காரணமானாற்போல, இராமாயணத் தமிழ்க்காப்பியத்தை இன்று உலகம் ரசித்தற்குச் சடையப்ப வள்ளல் காரணராயினர்என்க. கம்பரால் ஒரு பத்திடங்களில் இராமாயணத்தே ஓதப்படுதற்கான புண்ணியமுடையவர் சடையப்பவள்ளல்; ஆதலின் புண்ணியன்எனப் புகலப்பட்டார். அல்லாமலும், சிவஞானபானுவாகிய மெய்கண்டதேவரைத் தமது குலத்திலே—மகளாகிய மங்களாம்பிகையாரின் மகனாக அவதரித்தருளப்பெற்ற பெரும்பேறுடையவர்

எனலும்ஆம், பெருநிலக்கிழவராம் தவப்பேறுடைய வர் எனினும் அமையும். பூம்பதி—நல்லூர்.

## வரி 185—187.

முடிபு : கீண்டு, பெருகுறும், புனல்வயல்புவிக்கு அளித்திடும் அருமை தாயது. பெண்ணை—பனைமரங் களை ; பெண்ணை—தென்பெண்ணைநதி : தட—விசால மான ; கன்னல்=கரும்பு ; தாயது, தாய்போல்வது.

பனைமரங்கள் பலவற்றை வேரோடு பெயர்த்துப் பெருகிவருவது பெண்ணைநதி ; "பெண்ணை சாய்த்துப்பெருகி" என்பர்கூவப்புராணத்தே. தீம் புனல் — பெண்ணைநதியின் தீர்த்தச்சிறப்பைக்கூறுந் தொடர். இவ்வூரின்வயல்கள் தம்மிடம் நெருங்கும் மக்கட்குக் கரும்பும் நெல்லும் வழங்குமியல்பின என்க. இரண்டும் சேர்ந்ததே பொங்கல் எனப்படு வது. இங்ஙனம் அயலார்க்கு உணவளித்துதவுவது வயல்எனவே, ஞானபோனகத்தையும் அடைவார்க் களிக்கும் இயல்புடையது இவ்வூர்என்க. ஆம்புவி= தம்மிடம் ஆகின்றமக்கள் ; புவி — ஆகுபெயர் ; அருமை = 'தாயோடறுசுவைபோம்' எனப்படும் அருமை. தாய் ஊனத்தைவளர்ப்பதுபோல இப்பதி ஞானத்தை வளர்க்குமியல்பினதெனவறிக. வணங் காது நிற்கும் பனைமரங்களை அடியோடுவீழ்த்தி, வணங்குமியல் பினவாகிய கரும்பையும், நெற்பயிரை யும் வாழ்த்தி நலம்செய்வது பெண்ணைக்கியல்பு ; இதுபோல, சிவத்தை வணங்காதாரைப் பவக்கடலில் வீழ்த்தி, வணங்கியோரை வாழ்த்துவது இவ்வூர்க் கியல்பெனவுணரத்தகும். அருமைத்தாயது=அருமை யுடையது எனினும்ஆம்.

## வரி 188—192.

முடிபு: விளைபதி; குழீஇயபதி; வழிபட அருள் பதி; உறும், கொள்நகர் வயின்;

### வரி—188.

போதக்கதிர் = ஞானக்கதிர்; ஞானச்சூரியன்; பொற்பு—அழகு; துங்கர்—பரிசுத்தர்; சங்கம் = திருக்கூட்டம்; ஆவடுதுறையினர் = தமது பசுத்தன்மையை நீக்கற்கு இடங்கொண்டவர்கள்; (அ) திருவாவடுதுறை மடாதிபதிகள்; தகை = சிறப்புகள்; மொய்த்துறும் = மிகுதியாகக் கொண்டுள்ள; கடம்கொள் = பெண்ணுகடத்துதித்தாரைத் தம்மிடத்தே கொண்டிட்ட; வெண்ணெய்க்கடிநகர் = நடுநாட்டுத் திருவெண்ணெய்நல்லூர் என்னும் விளக்கமுடைய நகரம்; அகவயின் = உள்ளிடத்திலே; சிவஞான போதம் என்னும் கதிரைவிளையச்செய்த அழகு பொருந்திய நல்லதலம்; கதிர்–சூரியன்எனினும் ஆம். சிவஞானபோத நூலாகிய சூரியன் என்றேனும் அந்நூலை அருளிய சூரியனை என்றேனும்கொள்க. இஃது அகத்திருள் சீய்த்தலின் கதிராயிற்று. இந்நூலின் பன்னிரு சூத்திரங்களும் துவாதசாதித்தரை நிகர்ப்பனஎன்ப. சாதக்கதிர்விளைக்கு மூரினும் போதக் கதிர்விளைக்குமிவ்வூர் பொற்புடையதென்க அறிவுக்கும் வேறிடம் சென்றிரக்க வேண்டாமையின்.

### வரி—189.

மதுரைக் கடைச்சங்கத்தே நக்கீரதேவருள்ளிட்ட நாற்பத்தொன்பதின்மர் சங்கங்கொண்டு, தமிழகத்தென்பாலிருந்தமைக் கேற்ப—வடபாலில் மெய்கண்டார் இறைமையின் கீழ், சதாசிவசிவாசாரியார் உள்ளிட்ட நாற்பத்தொன்பதின்மர்

தமிழ்ப்போதச்சங்கமாகக்குழுமிக் கி-பி 13 ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் இவ்வூரிலிருந்தன ரென்க. (மெய்கண்ட சிவம்-கி-பி 1225-'45)

வரி—190.

ஆ=பசுத்தன்மை; இதனை—அடு = நீக்கக் கருதி; துறையினர்=அதற்கான துறையை நாடிய வர்கள்; வழிபட=வணங்க; அருள்பதி=வானுல கம் தரும் நகர். அன்றியும் இந்நகர் (திருவாவடு துறையினர் கண் காணிப்புடையதாகலின்) அவர்கள் வழிபாடு செய்யத் திருவருள் பாலிக்கும்பதி என்க. இதற்கிணங்க—

[குறிப்பு:— திருவாவடுதுறை 21-ஆவது பட்டத்து ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமா சாரிய சுவாமிகள் முதல்முதல் பட்டமேற்றதும் இத்தலத்தே விசயஞ்செய்தருளியமை நினைவுகூர் தற்குரித்தாம்.]

வரி—191.

இப்படிப்பட்ட பன்னரும் பெருமைகள் மிகுதி யாகக் கொண்டுள்ள—

வரி—192.

வெண்காட்டுப்பெருமான் பெண்ணுகடத்தவரா யினும், அம்மூர்த்திகளைத் தன்பாலேகொண்டளித் தது திருவெண்ணெய்நல்லூர் என்க. தன்னிடம் சார் வாரது மலவலிமையைக்கடியும் நகர் எனலும் தகும். ஈண்டு மெய்கண்ட தேவர் ஆலயமிருத்தல் காணத்தக்கது. சாலையூடு செல்வார்க்கும் காட்சி தரும் நிலையினில் இக்கோட்டம் சமைந்திருத்தல் கண்கூடாம். அகவயின்—இதயத்தானம்; இவ் வூர்க்கு இம்மடம் இதயமெனக்கொள்க.

## வரி 193—197.

முடிபு: வருமுதல்; சிவம்என, பொழிந்து மெய் கண்டார் என மிளிர்தலும் உரியன்.

### வரி—193.

வேதஞ்சொல்லும் உமையப்பரின் கான்முளையாக வந்த நமதுமுதல்வர். மறைஅருள் என மாறிக் கொள்க. அன்றியும், அருணந்திசிவம்—மறைஞான சம்பந்தர்—உமாபதி சிவம்—என்னும் புறச்சந்தான குரவர்கட்கு மெய்கண்டார் முதல்வர் ஆவர். ஆகவே, அருளும், மறையும், உமைச்சிவமும் தமது திருவடிப் பரம்பரையினராமாறுதந்தருளிய தலைவர் என்க. இதுபுறச்சந்தான குரவர் வழிமுறை கூறியவாறும். இது பூதபரம்பரை முறைமை.

### வரி—194.

உடம்பினை (பிறப்பை)க்கொண்டவர் யாவரும் உண்மை தெரிந்து அமைக என்று சொல்லி; ஆர்க+என=ஆர்கென;

### வரி—195.

வெளிப்பட்டுத் தோன்றலுற்ற மிகஇளமை யழகுவடியும் சிவம் என்று;

### வரி—196.

கண்டார் துதிக்க என்றும் விளங்கும் எங்கும் விளங்கும் தமிழாற்சமைந்த சிவஞானபோத அமுதத்தைப் பொழிந்தருளி,

### வரி—197.

மெய்கண்டார் என்று எவரும் கூற (மேற் சொன்ன நகரில்) விளங்குதலும் உரியன்; அங்கண் அன்றியும்,—

இப்படை வீட்டிறுதிக்கண், நால்வர் நால்வராக எண்மரெனவிளங்கலுறும் உபதேச பரம்பரையினர் கூறப்பட்டனர் என்க. இனி வருபவர் அபிடேக பரம்பரையினர் ஆவர். மூவகை உயிர்கட்கு மூவகையால் சிவம் அருள்புரிதல் தேற்ற நம்மனோர்க்கருள இம்மூவகைப் பரம்பரையினராகி இறையருள் கூர்கின்றதென்னலாம். சிந்தித்தும், ஓதியும், வழிபட்டும் நாம் உய்தற்கு தவுவது இந்தத் தேவபூத அபிடேக பரம்பரையாகும்.

II. முடிபு: திறத்தினன்—மூர்த்தியன்—முகன்—கரன்—பொருள்—தேசிகன்—வெண்ணெய் நகரகவயின்மெய்கண்டார் என மிளிர்தலும் உரியன்.

## 3. சுசீந்திரம்
## வரி 198—203.

முடிபு: பிறவியுள் மானிடர் ஈண்டிட, புணைதர நயப்போர் புரிகடன் உறல் உணர்த்திடு செய்நோன்பினர்—

வரி—198.

உலகினைத் தம்பிறப்பிடமாகக்கொண்டிடுகின்ற பல விதமான பகுதிப்பாட்டினுட்படுகின்ற பிறப்பு வருக்கங்களில்—(விரிவுரை) நரகம் துன்பம் தருவது; நிலைத்த இன்பமற்றதுசுவர்க்கம்; ஆதலால்,பேரின்பப் பேற்றினுக்கு இம்மண்மண்டிலமே இடமாவது. எவ்வுயிரும் தாம் நன்மையடைதற்காகப் பார்க்கும் இடமாதலாலும், அவையாவும் தங்குதற்கான பருமையுடையதாதலாலும் பார் எனப்பட்டது. உலகினைப் பார்த்தே இறைவனிருப்பை உயிர் அறிய வேண்டியுள்ளது. 'ஆதிபகவன் முதற்றே உலகு'என உலகின்மேலேற்றிக்கூறப்படுவது பிரசித்தம். மற்றும்,

புரந்தரப்பண்ணவன் உலகும், வரசரோருகத்தன் சிறியவுலகும், அச்சுதன் அமரிடமும் அழிவன; இந்திரசாலமும், முந்துநீள் கனவும், வெண்தேர் போலவும் உண்டெனத்தோன்றி இலவாம்; ஆதலின் நலமல ஆங்கு அவை; நிலைபேறுடையது நின்னருட்செல்வம்' என்ற பட்டினத்தார் பாடல் சுவர்க்க இழிபுரைக்கும். பிறவிகள் எண்ணிறந்தன. அவை உயிர்கள் தூய்மைப்பட, அவற்றின் கருமங்கட்கேற்ப அமைவன. இவற்றை நாற்கதி எழுவகை எண்பத்து நூருயிரமென இயம்பும் நூல்கள். இவற்றுள் பிறந்து பிறந்துழல்வது அலுப்புடையது. "யான் இனிப் பிறத்தல் ஆற்றேன்" என்பர் பெரியோர். இவ்வறிவில்லாப் பிறப்புகள் கடந்தடையப்படுவதே மாணிடப் பிறவி. "இந்தப் பார்மேல் நாட்டிய நற்குலத்தினில் வந்தவதரித்து" என்பது சித்தியார்.

வரி—199.

ஏர் = எழுச்சி; ஏர்பு = கிளர்ச்சி; ஈண்டிட = குழும; பிறப்புகளுட் சிறந்த தன்மை கொண்ட மானிட வர்க்கத்தார் கிளர்ச்சிகொண்டு கூட; "மானிட ராதலரிது" என்பது தேற்றம். "ஆடாய் மாடாய் அடியாரல்லார்க்குழைத்து இளைத்துநொந்து தோன்று பிறப்பினிற் சிறந்த மாந்தனுயும்" என்பதும் நூலுரை. "மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே" என்பர் அப்பர். இறையுண்மையை அறிதற்குரிய அறிவு பெற்றிருப்பதே இப் பிறவியின் ஏற்றம் என்ப. ஈண்டிட = தொகுதி தொகுதியாகத் திரள; தனித்தனியே கிடந்து கெட்டழியாமல் ஒன்று கூடி ஒரு வழிப்படுதல் தக்கதாம்.

வரி—200

நான்குபடு=நான்கு பிரிவுபட்ட; கொள்கை= சமயம்; ஆறு=ஆறுவகைச் சமயம்; வழி; நல்வினை=புண்ணியம். நான்காகத் தொகுப்புண்ட சமய பேதங்களில் ஆறாக வகுப்புண்ட மதங்களுட்பட்டுச் செய்த புண்ணியமென்கிற (தெப்பம் என முடியும்). சமயம் என்னும் சொல் நியமித்தல், நியமித்தற் கருவி, நியமிக்கப்பட்டது எனப் பொருள்படுவது என்ப. சுருதியிலே நியமிக்கப்பட்டது சமயம்; "Religion is the breathing of an eternal spirit through this temporal world" என்பர் Henry Drummond. அகச்சமயம், அகப்புறச் சமயம், புறச் சமயம், புறப்புறச் சமயம் என்பன நான்குபடு கொள்கை, தத்துவ ஞானிகள் கண்டது அகச்சமயம்; கலை ஞானியர் கண்டது அகப்புறம்; விசேட உலக அறிஞர் கண்டது புறம்; சாமானிய உலக அறிவர் கொண்டது புறப்புறம். இந் நான்கின் மேலாயது சித்தாந்த சைவம். இது சிவம் நிறுவிய சமயம். எனவே புறப்புறச் சமய முதலானவை படிப்படியே ஏறிப் பேரின்ப நிலயம் பெறுதற் கமைந்த சோபானங்களாம். சித்தாந்தம் என்பது முடிந்தமுடிபு. இனி அகச்சமய வகை, பாடாணவாத சைவமுதல் பரிணாமவாத சைவம் ஈறாக ஆறாகும். மாவிரதம் முதல் ஐக்யவாத சைவம் ஈறான ஆறும் அகப்புறம் ஆகும். புறச்சமயமென்பன தார்க்கிகம் முதல் யோகவாதம் இறுதியான ஆறும். புறப்புறச் சமயம், உலோகாயதம் முதல் ஆருகதம் ஈறான ஆறும். எனவே சித்தாந்த சைவம் இவ்விருபத்து நான்கு சமயங்களுக்கும் மேற்பட்டதென்க. இஃது

அதீத சமயம் எனவும் படும். எல்லாச் சமயங்கட்கும் உள்ளீடாய் நிற்பது சிவமே. "ஓது சமயங்கள் பொருளுணரு நூல்கள்" என்னும் சிவஞான சித்தியார்ப் பாடல் இக் கருத்துக்களைத் தெளிவிப்பது. இங்ஙனம் இருபத்துநான்கான சமயத் துறைகளிலே படிந்து படிந்து செய்தலுற்ற பாசநல்வினை—பசுநல்வினை—பதிநல்வினைகள் பலவற்றால் மேலேறுவன உயிர்கள். "சுவர்க்கம் வேண்டியோன் சோதிட்டோமம் வேட்க" என்னும் சுருதி இவ் வுண்மை தேற்றும். யாகாதிகள் பசித்துண்டு பின்னும்பசிக்கப் பண்ணு மியல்பின.

வரி—201

புணை—தெப்பம்; தர=செலுத்த; வரை=எல்லை; மலை புரையோன்=உயர்ந்தோன்; தாடலை—தாள்+தலை; தாளொடுதலை;

நல்வினை என்கிற தெப்பம் இச்சமயப் பெருங் கடலைக்கடக்கத்துணைபுரிந்து சமயாதீத வரைப்பின் எல்லையிலே கொணர்ந்து நிறுத்துதலும், ஞானங்கை வரப்பெற்று, இறைவனோடு தாடலை போல ஒன்று பட்டு—கங்குகரை காண இயலாத கடல் போல்வது இந்நிலவரைப்பின் சமயபேதக்கொள்கைகளின் திறம். மாலுமி, கலங்கருவியாகக் கடல் கடக்கச்செய்வது போல, நல்வினை, சமயங்கள் கருவியாக உயிரைச் சித்தாந்த சைவ நெறியுட்படுத்துமென்க. "புறச் சமய நெறிபுகுந்தும்" முதலவான வாசகங்கள் இவ்வலைவினைத்தெரிவிக்குமவை. வரைப்புரையோன்=சயிலாதிபதியாகிய சிவம் எனப்படுவன். வரை—மலை; இங்குக்கயிலை. கடலைக்கடந்து கரையையடைந்து மலை மீதேறியமர்பவர் வெள்ளத்

துக்கு அஞ்சுவதிலர். அதுபோலப் பல் சமயக்கடல் கடந்து சித்தாந்த சமயக்கரையடைந்து, ஞானமயமான சிவத்தொடு கூடியுறையப்பெற்றவர்க்குப் பிறவி வெள்ளம் பற்றிய அச்சமில்லை என்க. கடல் கடந்து, கரையேறி மலையடைவதனை இம்மலை நாட்டுச் சுசீந்திரப்பதியின் இருக்கை யுணர்த்துவதாகலாம். புரையோன் = உயர்ந்தோன் ; சிவன் ; "புரையே உயர்ச்சி". ஏனைத்தெய்வங்கட்குப்பிறப்புண்டு; சிவமே பிறப்பிலாதது. இதுபற்றியே, "பிறவாயாக்கைப்பெரியோன்" என்பர் பழையோர். தாடலைச்சொல் ஒன்றாய் வேறாய் உடனாய்நிற்கும் அத்துவிதத்தியல்பை யுணர்த்துவது. இதனை 3+3+7 ஆகப் பதின்மூன்றுவமையால் "பண்ணிசை வெம்பரிதிமதி" என்னும் குருவணக்கப்பாவினால் மாதவச் சிவஞானயோகிகள் உணர்த்துவர். இவர் தீட்சைப் பேறெய்தியது இப்பதியில் என்ப.

வரி—202

புணர்ந்து = சேர்ந்து ; உறை = வாழ்வு ; கடன் = கடமைகள் ; மூன்றினோடு = சரியை, கிரியை, யோகம் என்பன. சிவபெருமான் திருவடியிலே தமது சிரம் பொருந்தியுறையும் பேரின்பாநுபவ வாழ்வை விரும்புபவர் முறையே புரிகின்ற சரியை முதலான மூன்று கடமைகளுடன்—சரியையாதிகள் சிறந்த தவமெனப்படும். இவை அமுதம்போல்பவை. சாமானிய உணவுகள் பசியைநீக்குதல் மட்டும் செய்யும் ; அமுதமோ பசியைநீக்குவதோடு நரைதிரையாதிகளையும் தவிர்க்கும். சாலோகம் பயனாகத்தந்து ஞானமளிப்பது சரியை ; சாமீபம் பயனாக்கி ஞானமளிப்பது கிரியை ; யோகம் சாரூபம்பயனாக்கி

ஞானமளிப்பது. இவைபதமுத்தி எனப்படும். சாயுச்சிய முத்திஞானத்தாற் கிடைப்பது. "தானமி யாகம் தீர்த்தம்.....நற்றுளே" என்னும் சித்தியார் எட்டாம் சூத்திரத்திரத்து 25 ஆவது பாடல் இது கூறும்.

வரி—203.

ஒன்று=ஞானம்; நன்று=நன்மை: உதவி; நோன்பினர்=விரதசீலர்; தம்பிரான்மார்; சரியை யாதி மூன்றன் சாதனத்தால் ஞானமடைதலை உல கினர்க்கு, (உபதேசத்தாலும், ஒழுக்கத்தாலும்) உணரச்செய்கின்ற உதவியாற்றுபவராகிய தம்பி ரான் மார்கள்—"முன்மார்க்க ஞானத்தாலெய்து முத்தி முடிவென்பர்"—இதுவே பரமுத்தி எனப் படும். மூன்றிஞேடு ஒன்று என்பதை, தாதமார்க் கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க் கம் எனினும் அமையும். ஞானத்தானன்றி முத்தி யிலது. "ஞானப்பெருமையுடையோர் சிவனைப் பெறுவர்" என்பதும் காணத்தக்கது. மக்களில்லா மனை—தியானமில்லா நெஞ்சு—இவைபோல்வது ஞான மில்லாவினை. "இறைவனடி ஞானமே ஞானமென் பார்" உணர்த்துதல்— அழுக்குநீங்கிய இடத்து ஆடையினது வெண்மை ஆடைமுழுதும் விளங் கினுற்போலப் பரமுத்தி நிலையில் தமது வியாபக முழுவதும் அறிவு விளங்கப்பெற்று முதல்வனேடு ஒன்றுபடுதலை உணர்த்துவதாகும். நிட்டையாலு ணர்த்துதல் இது. கேட்டல் முதலிய முறையில் இஃது இறுதியது. நோன்பினர் என்றமையால் இவர் உலகினர்க்கு ஆசாரவழியறிவித்தற்கான விரதவழிபாடுகளைத்தாமும் உடையர் என்க. இத்

தகையவரெதிர்ப்பட்டோர், தமது இழிநிலேஉணர்ந்து திருந்துவர். கண்ணுடியின் எதிர்ப்பட்டோர் தம் உருவின் அவலக்ஷணம் அறிந்து லக்ஷணங்கொள்ளு மாப்போலே விளங்குபவர் தம்பிரான்மார்கள் ஆவர்.

## வரி 204—229.

முடிபு :—(நோன்பினர்) கிளவியொடு நயந்தே பூசனே உஞற்றிட, ஒளிர்ந்து, இசைந்திட வழங் குறும் உருவொடும், மலிபொடும், உருத்திரகோடியர் உவப்புற, கண்டிட—மன்னியர் வேலவர் மலர் பெய் திட, மேலவர் சரித்திட, உளத்தினர் நடந்திட, உரத் தினர் உறைதர, ஞானியர் மேவிட, அடியனும் அளி பெற, கடல் வழிபட, சிலம்பு நிமிர்ந்திட, தாணு மாலயன் உற, பஞ்சாக்கரர் என, ஏவரும் எழ, வளன் பெருகிட, புகல் சுசீந்திர நகர் இந்திரனென வயங்கலும் உரியன் ; அதான்று—

### வரி 204—205

பயில்—ஓயாது சொல்லப்படும் ; கிளவி-மந்திர மொழி ; நயந்து—விரும்பி ; நூல்=ஆகமம் ; மேல் முறை—பரம்பரை வழக்க முறை ; உஞற்றிட= இயற்றிட ;—நாவிலே ஓயாமற் சொல்லப்படுகின்ற மந்திரச் சொல்லுடன் ஒவ்வொரு நாளும் பொது முறை சிறப்பு முறைகளே விரும்பி ஆகம நெறியின் வண்ணமும், பரம்பரை வழக்கு நெறியின் படியும், கட்டளேயிடப்பெற்ற பூசனேகளே (நோன்பினராகிய தம்பிரான்மார்கள்) செய்திடத் தேசோமயராய் விளங்கி;—கிளவி—அருச்சனே முதலியவற்றிற்குரிய மந்திரம் ; (அல்லது) மந்திர வரசு எனப்படும் பஞ் சாக்கரம். இதனேத் தம்பிரான்மார்களின் நாவானது

எப்போதும் பயின்றுகொண்டிருக்கும் இயல்புடைய தென்க. "நற்றவா உன்னை நான் மறக்கினும் சொல்லுநா நமச்சிவாயமே" என்பது மேற்கோள். ஊணர்நா பஞ்சாமுதத்தைச் சுவைப்பதுபோல இம் மோனர்நா, பஞ்சாக்கரத்தையே சுவைக்கப்பயின்ற தென்க. பஞ்சாக்கரம் சுருதி இருதயமாவது. மும் மறையிடையதாம் யசுரின் ஏழுகாண்டங்களின் நடுவது ஸ்ரீருத்திரம். (இங்கு உருத்திரப்பெயர்கொள் ஆசாரியரே பஞ்சாக்கர மூர்த்தப் பிரதிட்டை செய் தமை கருதத்தகும்.) அதன் நடுவணது 'நமச் சோமாயச' எனப்படும் அநுவாகம். இதனிடையது 'நமச்சிவாய' மந்திரம். "வேத நான்கினும் மெய்ப் பொருளாவது—நாதன் நாமம் நமச்சிவாயவே" என்பது சம்பந்தர் வாய்மொழி. எனவே இம் மறை மொழியே வேத இருதயமாயிற்று. இம்மொழியில் யாவும் அடங்கும். "ஆறெழுத்தடக்கிய அருமறைக் கேள்வி–நாவியல் மருங்கின் நவிலப் பாடி" என்பது திருமுருகுநூல். இவர்கள் ஒவ்வொரு நாளும் பொழு தும் பூசிப்பர். நித்திய நைமித்திகமெனும் இருவகைப் பூசனையும் புரிவர். "சிறப்பொடு பூசனை" என்னும் திருக்குறளும். முறை – தமக்கேற்பட்ட முறையின் படி எனலும் ஆம். அல்லது இன்ன நாளில் இன்ன முறை எனலும் பொருந்தும். நயத்தலாவது வெறுப் பொடு செய்யாமலும், கடமைக்குச் செய்யாமலும் இயல்பாகவே எழும் விருப்புடன் (பக்தியுடன்) செய்தலாம். நயம் கூறப்பட்டமையின் பயம் பக்தி விசுவாசம் என மூன்றுடன் என்பதும் அமையும். நூல் முறை—சிவாகம முறை; ஆகம வழியே பூசனை செய்வது முறைமை. எனவே சிவகோசரி யாரும் திருக்கண்ணப்பரும் ஒருருவராகிப் பூசிப்பது

போலும் இத் தம்பிரான்மார்கள் பூசனை ஆற்றுதல் அறியப்படும். மேன்முறை=மேலோர் அநுட்டித்து வரும் முறைமை; மேலான முறை; அந்தந்த மடாலயங்கட்கும் பூசனை செய்வதில் சிற்சில சம்பிரதாயங்கள் உண்டு. அந்த அந்தவரன் முறைப்படியே பூசனை நிகழ்த்தப்படும். இதற்கு நூலாதாரம் இராது. ஆன்றோர் ஆசாரமே ஆதாரமாம்; (உதாரணமாக, திருவாவடுதுறைக்கும், தருமபுரத்துக்கும் பூஜை அநுட்டானமாதிகளில் வேறுபாடு 96 என்பது ஆன்றோர் மரபுரை.) இனி, நாப்பயில் கிளவியொடு என்பதற்கு, வாசகம், ரகசியம், மானதம் என்ற முறையிலே எண்ணிக்கையோடும் இல்லாமலும் செபித்தலும் கோடலாம். நுவன்றிடும்— நுவன்று—அருச்சனைகூறி; இடும் = நைவைத்தியம் படைக்கின்றதாகிய; உஞற்றுதல்—ஓயாமற் செய்தலாம்; ஒளிர்ந்து—தமக்குரிய சோதிவடிவாய் விளங்கி; "திகழ்ஒளி ஒண்சுடர் வளப்பாடு நின்னுருபு" என்னும் பரிபாடல். ஊன்கண்ணார்க்குப் படிமமாகவும், அந்தணர்க்குவேள்வித்தீயாகவும், யோகிகட்கு உள்ளொளியாகவும், ஞானிகட்கு எங்கும் நிறைந்த சுடராகவும் இறையுருக்காணப் படும் என்பர்.

வரி 206—208

உருகுநர்க்கு—எரியிழுதுபோன்று மனங் கரைந்து கசிபவருக்கு; "வெள்ளம் பாயிருபுனலின் கண்ணீராக உள்ளந்தான் உருகாதால்" என்பர் பெரியோர்; இன்பு-ஆனந்தமேலீடு; சதசத்தான உயிருக்குச் சித்தைத்தந்து ஆனந்தத்தழுத்துமதே இறைதொழிலாம். என்பெல்லாங்கூட இனிப்பூறும்

வண்ணம் இறைவன் இசைந்திடுவன். எழிலியின் = மேகம் போல; மேகம் மழையைப்பொழிந்து, நிலத்திலும் ஊற்றுச்சுரந்து வழிந்தோடச்செய்வதுபோல இறைவன் பேரானந்தத்தைப் பொழிசெய்து உடம்பின் கண்ணும் அவ்வானந்தம் அண்ணிக்குமாறு அருளுவன் என்ப. உருவொடும் = அருளேயாகிய திருமேனியுடன்: மலிபு — நிறைவு; எடுக்களடுக்க வற்றாதஅட்சயக்கலம் போலும், கொடுக்கக்கொடுக்க வற்றாத தண்ணிய அருள் நிறைந்த திருவுள்ளத்தோடும்; நமது பிறப்புறும் வெம்மையைத்தணிக்கவல்லதாகலின் தண் அருள் எனப்பட்டது. வெம்மையைமாற்றவல்லது தண்மையேயாதலின்.

### வரி 209—211

இனி இப்பரமன் வடகயிலையில் தென்முகத் தெய்வமாகி வீற்றிருப்பது போன்று, தென்கோடியினும் அங்ஙனம் படிமங்கொண்ட வரலாறுரைப்பது இவ்வரிகளின் கருத்து. உம்பர் — மேலிடம்; உருத்திரகோடியர் = கோடிக்கணக்கான உருத்திரர்; (அல்லது) உருத்திரக்கோஷ்டியினர் எனலும் ஆம். "சதகோடி உருத்திரர்கள்" எனவும் நூலார் கூறுவர். எனவே இவ்வுருத்திரர் குழாம், இப்பரமன் இங்குக்கோயில் கொள்ளுதல் கண்டு பெரிதும் மகிழ்வுற்றனரென்க. ஈண்டுள்ளார் யாவரும் சித்தாந்த நெறிப்பட்டு வீடெய்தும் தகுதிபெற்றமையின், தமது அழித்தற்றொழிலுக்கு விடுமுறை கிடைத்தமைபற்றி இவ்வுருத்திரர்க்கு மகிழ்வு மலிந்ததென்க. இப்பரின், இவ்வுலகின் கண்ணும்; உருத்திரகோடியர் என = காஷாயவஸ்திரதாரியராகிய குருநாதர் என்று யாவரும் கூற; உருத்திரம் = செம்மை;

கோடி = வத்திரம்; நிகழ் = எப்போதுமுள்ள; கண்ணியர் = ருத்திரங்கூடி உட்கட்டு அணி பவராகிய; இஃது திருவாவடுதுறைப்பண்டார சன்னதிகள் மரபு; (அல்லது) கொலுவிலே மாலை யாதிகள் அணிபவராகிய எனலும் ஆம். அல்லா மலும், தம் எதிர்ப்பட்ட மாந்தராகிய பறவைகளைச் சித்தாந்த சைவத்துட்படுத்தும் உபதேசவலையுடை யவர் எனினும் அமையும். செவ்வந்தியப்ப நாயக்கர், முத்துவீரப்ப நாயக்கராதியோர் இவர்க்காளா யினமை பிரசித்தம். உருத்திரகோடியர்—ஸ்ரீஉருத் திரகோடிதேசிகர்; இவர் பஞ்சாக்கரர் மரபில் நான்காமவர். கண்டிட—பிரதிட்டைசெய்ய; தெரி சிக்க; இவரே சுசீந்திரத்தே பிரதமாசாரியராகிய நமசிவாய மூர்த்திகள் திருவுருப்பிரதிட்டை செய் தருளினர் என்பது வரலாறு. ஸ்ரீருத்திரம், நமச்சி வாயம் கொண்டருள்வது நூற்பிரசித்தம்.

## வரி 212—213

பஞ்சாக்கர சொரூபியாகிய சிவபெருமானுக் குரிய திருக்குமரர் இருவருள் இளையவர் வேலவர். இவர் தம் தந்தையாரருளின்படி தென்னாட்டிற் சூரறுத்து விளங்குபவர். இதுபோலவே, ஸ்ரீவேலப்ப தேசிகரும், இளையபட்டம் பெற்றுத் தென்னாட்ட கத்தே மாந்தர் மருளறுத்துத்திகழ்வாராயினர். மின்ஒளி = மின்னல்போல் ஒளிவீசுகின்ற; வேலவர் = வேலாயுதபாணியாகிய முருகப்பிரான்; மன்னியர் = நிலைபெற்றவர். பிரகாசிக்கும் வேலாயுதராகிய முருகப்பெருமானது இயல்பு நிலைக்கப்பெற்றவராகிய பின்னவர்—ஐந்தாம் ஞானபீடத்தவர்; வேலவர்— ஸ்ரீவேலப்பதேசிகர்; இவர் நான்காம் பட்டத்தவர்

திருவாணையின்படி மேற்குறித்த பஞ்சாக்கரமூர்த்தி கள் பூசனையைநிகழ்த்திவந்தனர் என்ப. விரைமலர் = வாசனையுள்ள மலர்களை; பெய்திட = சாத்தியருச் சித்திட; அன்றியும் பின்னவர்களாகிய ஸ்ரீவேலப்ப தேசிகர் ஸ்ரீகுமாரசுவாமி தேசிகர்களால் அருச்சிக் கப்பட்டிட எனலும் ஆம். இவருள் பின்னவராகிய ஸ்ரீகுமாரசுவாமி தேசிகர் சிவபரிபூரணம் ஈண்டே எய்தினர்.

வரி—214

மேலவர் = சுத்தசைவர்; சரியை — இஃதொரு சாதனத்தின் பெயர்; பூசனைபுரிவோர்க்காகும் தொண்டுபுரிதல்; இது சரியையிற்சரியை கிரியை யோகம் ஞானம் முதலாகப்பலதிறப்படும். திருக் கோயில் அலகிடல், ஆவரணமூர்த்தி பூசனை; உருத்திரர்த்தியானம் தியான அநுபவம் முதலவாகப் பேசப்படும். "நிலைபெறுமாறெண்ணுதியே நீவா நெஞ்சே" என்னும் தாண்டகம் இதுகூறும். சகள வடிவினைக்காயத்தொழில் மாத்திரையால் வழி படுவது சரியைஎன்பர். சாலோகம்பயன். இது அரும்புநிலை போல்வது. "செயிற்கடைநேசம் சிவ பூசையாமே"— திருமந்திரம். "பூதலத்து ஓர்ந்திடும் சுத்த சைவத்து உயிரிதே" என்பர் திருமூலர்.— 1443. சரியை முதலவற்றிற்குக் காரணம் மந்ததரம் முதலிய சத்திநிபாதம் என்பர். யாவற்றிற்கும் அடிப் படை சிவத்தின் கருணைநோக்கே. தாதமார்க்கம் இது.

வரி—215

நார் = அன்பு; 'அன்பின் உருகுவன் ஆளும்பணி செய்வன்'— திருமந்திரம். சகளவடிவத்தைத் திரு

மேனியாகக்கொண்டு, சகளநிட்களமாகிய சூக்கும வடிவமே பொருள்என உணர்ந்து புறத்தொழிலானும் அகத்தொழிலானும் விதிமுறை வழிபடுமதே கிரியை எனப்படும். இது மலர் நிகர்ப்பது. இதுவும் கிரியையிற் சரியை முதலாக நால்வகைப்படும். சிவலிங்க வடிவிற் பூசிப்பது கிரியை. இதயத்தே பூசையும், உந்தியில் ஓமமும், புருவ நடுவில் தியானமும் செய்தல் அகத்தொழிலாம். இதன் பயன் சாமீபம். சற்புத்திரமார்க்கம் இது.

வரி—216.

உளம்பிணி—உள்ளத்தை அடக்கிய; உரம்= வன்மை; சகளமும், சகள நிட்களமும் திருமேனியாகக் கொண்டு நிட்களத்தை அதி சூக்கும வடிவப் பொருளாகக் கருதி, அகத்தொழில் மாத்திரம் நிகழ்த்துவது யோகம். அட்டாங்கங் கொண்டது. இது சாலம்பம் நிராலம்பம் எனும் இருவகைப்படும். இது காய் நிகர்ப்பது. சாரூபம் பயன். சகமார்க்கம் எனவும் படும்.

வரி – 217.

மேல்நிலை=மேலான நிலையினை உடைய; நான்கினுள்—ஞானத்திற் சரியை முதலிய நான்கு திறத்தினும்; மேவிட—விரும்பிப் பொருந்த நிட்கள மூன்றும் திருமேனியெனத் தூலாருந்ததி நியாயத்தாற்கண்டு, காயத்தொழிலையும் மனத்தொழிலையும் கைவிட்டு, கேட்டல் முதலிய அறிவுத்தொழில்மாத்திரையால் வழிபடுவது ஞானம். இது கனி நிகர்ப்பது. சாயுச்சியம் பயன். உபாயச்சரியை, உண்மைச்சரியை முதலவாக அநுட்டிக்கப்படும். ஞானத்துள் ஞானங்களுள் முடிந்தஞானத்துக்குப் பயன் பரமுத்தியாம்.

ஏனையவற்றுக்கு இலயதத்துவ அபர முத்தியே பயன் என்பர். "ஈசனியோகக் கிரியா சரியையினில் நின்றோர்— ஊனமிலா முத்திபதம் பெற்று உலக மெலாம் ஒடுங்கும்போது அரன் முனிலா தொழியின் உற்பவித்து—ஞான நெறியடைந்தடைவர் சிவனை"—சிவஞானசித்தியார் 8. சூ. 25. செ.

வரி—218.

கடுங் கொதி—மிக்க சூட்டுடன் கொதிக்கும் சுவையுணு; துழவுதல்=கிண்டுதல்; காம்பு அகல்=காம்பு நீங்கிய; மூழை=அகப்பை. கொதிக்கும் கூழினுள் புகுந்து ஆங்கேயே துழாவலுற்ற அகப் பைக் குழி, காம்பை விடாதிருப்பின் அச் சூட்டினின் றும் வெளியேறலாம். பண்டத்தை நிரம்ப முகக்கக் கருதிக் கனத்தாற் காம்பை விட்டுவிடுமாயின் அஃது அக் கொதி கூழுள்ளேயே கிடந்து கொதிக்கவேண்டு வதுதான் நிகழும். இல்லையாயின் பிறிதொரு காம் பினைவிடாத அகப்பையால் வெளியேற்றப்படவேண் டும் பாகஞ் செய்வோனல். எனவே மூழைக்குக் காம்புடனிருப்பதும், அக்காம்பு, பாகஞ் செய்வோன் வசப்பட்டிருப்பதுமே நல்லதாகும். மூழையின் = இத் தகைய மூழையைப் போன்று—

வரி—219.

அடும்பிணி=கொடிய ஜனன மரண சமுசார நோயினுள்; அடியனும்=அடிமை நிகர்த்த யானும்; அளி பெற=திருவருளைப் பெற; தெய்வ சிந்தையை விட்டுவிடுவது காம்பகல்வதுபோலாம். எனவே பக்தி யற்றால் மேற்சொன்னதுக்க வெம்மையுள் வீழ்ந்து வருந்துவதே முடிவாகும். இறைவன் ஆசாரிய மூர்த் தங் கொண்டு கரையேற்றுவது, பிறிதொரு காம்

பொடுள்ள அகப்பையால் காம்பற்ற மூழையைப் பாகஞ் செய்வோன் வெளியெடுப்பது போன்றது. எனவே, இத்துணை துயருட்பட்ட என்னையும் ஈடேற்றும் பொருட்டு இங்குக் கோயில் கொண்டருளினர் இப் பரமாசாரியர் என்க. அடியேனுக்கே இங்ஙனம் நன்மை செய்கின்றவர், என்னினும் சிறந்த சீலமுடைய உனக்கு அருள் செய்யாமற் போகார் என்பது கருத்தாகக் கொள்க.

வரி—220

நெடுங்கடல்—குமரிக்கடல்; முழக்கத்து—ஓமென்று முழக்கமிட்டு; நிச்சலும்—நாடோறும்; வழிபட=விழுந்து விழுந்து வழிபாடு செய்ய. அலை எழுந்து விழுதல் எழுந்து விழுந்து கும்பிடுவது போலாம். "ஓவெனும் முழக்கத்து ஓரெழுத்துண்மையும்" என்னும் செய்யுள் வரி இக் கருத்துடையது.

வரி—221.

நீள் சிலம்பு—உயர்ந்த மலை; குமரிக்கோடு; மேல்கீழ்வரைக் கூட்டிடம்; இவ்வூர் மலைநாட்டுப் பதி; இம் மலையிடமானது தமது திருவடித் தாமரையை முடியின் கண்கொண்டு நிமிர்ந்து நிற்க; தாய் குழந்தையை மகிழ்வினால் உயரத்தலைமீது வைத்துத் தாங்கி நிற்பதுபோலென்க. மரை—தாமரை; மரை வரையில் வாழ்வதோரியையுபட நின்றது. மரை—ஒருவகை மான்.

வரி 222—223.

மூவர் தேவரும்—பிரமன்மால் அயன்என்போர்; இவர்கள்யாவரும் சிவத்தின் திருவருளாற் படைப்புண்டவர்என்பது இவ்வுலகில் வாழும் மாந்தர்தெரியும்பொருட்டு; முன்னவன்=சிவன்; "மூளைத்தானை

யாவர்க்கும்முன்னேதோன்றி'' என்பது தேவாரம். யாவர்க்கும் முன்னும் புதுமையுடையவன் எனினும் ஆம். (முன் + நவன்); தெரிதர = தாமேஉணரும் பொருட்டு; தாணுமால்அயன் என்பது இவ்வூர்ப் பரமன்பெயர். இதுவே மேற்குறித்த உண்மையைத் தெரியச்செய்வதாகும்; தாணு—சிவமே; மா—எல் லாப் பெரும்பேறுகளுக்கும்; லயன் = லயத்தானமாக உள்ளவன் எனவும்; தாணுவே பெரியலயத்தான மாக உள்ளவன்என்றேனும் இச்சொற்றொடர் பொருள் படக்கிடப்பதும் போதரும், உற = வந்து பொருந்திட; மருங்கேஅமர;

வரி—224

நெஞ்சம் நினையும்முன் = மனம் இன்னதுவேண்டு மென நினைக்கு முன்பே; "நினைப்பவர்கள் மனந்தன் னுள் நினைவேதாணாய் நிற்கின்ற நிமலனார்அமலனார்'' ஆதலின் இதுசாத்தியமாவது. குறிப்பறிந்து எனி னும்ஆம்; எஞ்சாவளனொடு = குறைவுபடாத செல் வங்களுடன்; இஃது இம்மைக்காவது.

வரி—225.

துஞ்சாநிலை அருள் = இறவாப் பெரும்பேறு; தூங்காநிலை என்பது மது. "தூங்காமற்றூங்கிச் சுகம்பெறுவது'' என்பர். "இறவாத தன்மைவந் தெய்தினேன்'' என்னுமுரையும் இதனையுணர்த்தும். எனவே மறுபிறப்பில்லா நிலைதருவதாம், இறைவன் திருவடி "மறுபிறப்பறுக்கும் மாசில்சேவடி'' ஆகு தல் தேற்றம்.

பஞ்சாக்கரர்—இஃது ஆவடுதுறை ஆதியாசாரி யர் திருநாமம், பஞ்சாக்கரத்தின் பெருமை நூலானும் உபதேயத்தானும் அறியத்தகுவது. "ஐம்பதெ

மூத்தே ஐந்தெழுத்தாமே''; "அருள்வழிகாட்டுவது ஐந்தெழுத்தாமே"; அஞ்சில் இறைவன் அருள்பெற லாமே", "சிவாயநமஎனச் சித்தம்ஒருக்கி—அவாயம் அறவே அடிமையதாக்கிச்—சிவாய சிவசிவ என் றென்றே சிந்தை — அவாயம் கெடநிற்க ஆனந்த மாமே''; "எழுத்தை அழுத்தும் எழுத்தறியாரே" என்னுமுரைகள் திருமந்திரம். மற்றும் பஞ்ச— படைத்தலாதி ஐந்தினையும், (நமக்காக) ஆக்கு=செய் தருகின்ற; அரர்=சிவமாவர் எனவும் இச்சொற் றொடர் பொருள்படுவதும் ஓர்க. எனவே ஆன்ம ஈடேற்றங்கருதி ஐந்தொழிலும் ஆற்றுமவர் அரன் என்க. "அரன் கழல் செலுமே" என்ற இடத்தும் அரன் எனப்பட்டபெயர் பயிலப்பட்டது. நமது மலத்தைப்பற்றறப் போக்குதலால் அரன் எனப் படுவர்.

வரி—226.

குவலயத்து+ஏவரும்=பூமியில் உள்ள யாவ ரும்; (அல்லது) குவலயம் தேவரும்=பூசுரரும்; குடந்தம்பட்டு எழ=கும்பிட்டு வாழ;

வரி—227.

பசி முதல்=பசி முதலியவை; "உறு பசியும், ஓவாப் பிணியும், செறு பகையும்" என்னும் குறள். துடைத்தல்=போக்குதல்; வசிவளன்=மழை முத லிய வளங்கள்.

வரி—228.

சுசி=சுத்தம்; சிவம்; சுத்த நிலையே சிறந்த தெனச் சொல்லுகின்ற; கேவலம்—சகலம்—சுத்தம் என்னும் மூன்றனுள் சுத்தமே சிறந்ததென்பதை

இவ்வூர்ப் பெயர் நினைவூட்டிக்கொண்டிருப்பதென்க. அன்றிச் சிவமே தலைமையான பொருள் எனப் புகல்வ தெனினும்கூடும். புகல் = சொல்; விரும்பு சுசீந்திரம் —என்பது இப் பதியின் திருப்பெயர்.

வரி—229.

வசி இந்திரன் என-நித்தியவாசம் செய்தருளுகிற இறைவன் என்று புகழ; 'வசி' என்பதே 'சிவ' ஆயிற்றென்பதும் ஒரு கொள்கை. அங்ஙனமாயின் ஒளியேறு—பேரொளி எனப் பொருள்படும். பொறி வாயில்ஐந்தவித்தவனுக்கும் வசி என்பதுபெயராகும். அங்ஙனம் கொள்ளின் பரம்பொருள் எனப்படும். இந்திரன் = தலைமையானவன். திருவாவடுதுறைமடா லயத்தலைமையுடையவராதலாலும் இச்சொல்பொருந் தும். அல்லாமலும், இவ்வளநகர் தன் மாட்டுறு வோரை 'வசி இந்திரன்' என்று சொல்ல; அதா வது 'இந்திரன் போல வாழ்க' என்று சொல்லிட; இந்திரன் போகி எனப்படுவன். வசி = வாழ்: சகல போகாநுபவனுய் வாழ் என; பஞ்சாக்கரன் என வயங்கலும் உரியன் என முடிபு இப் பொருளாம் போது கொள்க. வயங்கல் = விளங்குதல்; தேவேந் திரனுக்கு இந்திரப் பெயர் உபசரணை. சிவத்துக்கே உண்மை.

III. முடிபு: நோன்பினர் பூசனை உஞற்றிட, ஒளிர்ந்து, உருவொடும், மலிபொடும், உவப்புற, கண் டிட, பெய்திட, சரித்திட, நடந்திட, உறைதர, மேவிட, அளிபெற, வழிபட, நிமிர்ந்திட, தெரிதர உற, பஞ்சாக்கரர் என, எழ, பெருகிட, சுசீந்திர வள நகர் (இடத்தே) இந்திரன் என வயங்கலும் உரியன்; அதாஅன்று—

## 4. திருப் பெருந்துறை

### வரி 230—234.

முடிபு: அளி, மீகான், உற, கிளர் அமைகொடி நுடங்கிடு கலம் துறுமிட, அறைதிரை கடல் வளை இய—

வரி *230—234*

அரும்பொருள்—வாழ்க்கைக்குரிய அரியபண்டங்கள்; அவா தப=ஆசைகெட, அளி=கொடுக்கின்ற, மீகான்=மாலுமி; மீ=மேலே; நோக்கு=அழகு; நோக்கம்; நுடங்கிடு=அசைகின்ற; கலம்=கப்பல்கள்; துறுமிட = நெருங்கிட; நரை=நரையென்னும் முதுமைச்சின்னம்; அறை=சொல்லுகின்ற; வரைபுரை=மலைபோலுயர்ந்த; திரை=அலை; வளை இய=சூழ்ந்த; வாழ்க்கைக்கான அரும் பண்டங்களை அடைய விரும்புகின்ற அயலிடத்தார்க்கு அவர்களது அப்பண்டங்களின் மீதிருந்த ஆசை தணியும்படி அவரிருக்குமிடம் சென்று கொடுக்கின்ற மிகுந்த சாமர்த்திய முடைய கப்பலோட்டி பொருந்தியிருக்க, வானில் எழுந்து அழகு அமைந்த பலகொடிகள் காற்றிலே அசைந்துகொண்டுள்ள பெரிய மரக்கலங்கள், துறையிட மெல்லாம் நெருங்கித்தங்கியிருப்ப, தன்னிடத்துக்காணப்படுகின்ற வெண்மையான நுரைக்கூட்டமானது மக்கட்கு நரைப்பருவம் வருகின்ற தன்மையை அறிவிக்கின்ற மலைபோல உயர்ந்த அலைகளையுடைய ஆழமான சமுத்திரமானது எல்லாப்புறமும் சூழ்ந்துகொண்டிருக்கிற— (நானிலம்); நோக்கும்=யாவரையும் கூப்பிடும் நோக்கம் எனினும் ஆம். அரும்பொருளைக்கலத்தால் மீகாமன் கொடுத்தளிப்பது போல ஆசாரியன் ஞானத்தைத்



திருப்பெருந்துறை இராஜகோபுரம்.

தீக்ஷை முகத்தால் அடிபணிவோர்க்களிப்பன் என்பது உட்கிடை.

அரும்பொருள்-உடல் வாழ்க்கைக்கு இன்றியமையாப்பொருள்; பெருந்திறல் + காற்றிலும் கொந்தளிப்பிலும் கலங்காது கடவும் திறமை; பல்கொடி—பலநாட்டுக்குரிய கொடிகள் எனினும் ஆம். பெருங்கலம்=கரைசேர்க்கும் பெருமையுடைய (பெரிய) கப்பல்கள்: வெள்ளையான நுரைப்பிசிர்கள், மக்கட்கு நரையின் வருகையை உணர்த்துகின்றன என்க. வரைபுரைதிரை என்றமையால் வாலிபபருவம் கிளர்ந்தெழுந்து தோன்றுதல் தெரியலாம்; அவை அங்ஙனமே யிராமல் மடிந்து வீழ்தலால் மக்களின் வாலிபம் மாறி வயோதிகம் வருகையும் உணரப்படும். ஆழ்கடல் — என்றமையால் பவளம் முத்து முதலிய அரும்பொருளுடைமைபெறப்படும். மற்றும் நமது பிறப்பென்னுங்கடலும் இங்ஙனம் ஆழமறியா இயல்பிற்றென்னலாம். விழைகுநர்—என்றமையால் நாமும் பக்குவமடைந்தாகித்தாலல்லது ஆசானருள் கிட்டாதென்க; சென்று அளி—என்றமையால், ஆசானும் சகலருட் பக்குவிகளின் பால்(தீவிரதரசத்தி நிபாதத்தர்முன்) தாமே (கடல்நீர் உப்பாதல் போலத்)தோன்றியருளுவன் எனத்தெரிதரலாம். வளை இய—என்பதனால், கடல்உலகை முற்றிக்கொண்டிருப்பது போன்று நம்மைப்பாசபந்தம் வளைத்துக்கொண்டுள்ளதென்க. இங்ஙனம் வளைந்த கடலைக் கலத்தாலும் மாலுமி துணையாலும் கடந்து கரையடைதல் போல ஞானநூற்கேள்வியாலும், உபாயகுருவினாலுமே நாம் பிறவிப்பெருங்கடல் கடந்து முத்தியங்கரை எய்துதல்

கூடும் என்க. நோக்கம் — சட்சுதீக்ஷைக்குக் கொள்ளப்படலாம்.

### வரி 235—240.

முடிபு :— நானிலத்து பிறப்பு எய்திடு இவை தொகைஇய உடல், உள்ளம், உயிர்கொள் மக்கள், பொருள் கொள்ள நிறுவிய—பல உறுப்பென இயல் இசை, வேந்துளன பொலி வாழ்வு உடைசைவம் ;

நகு—விளங்கும் ; தொகைஇய=கூடிய ; உலகியற்பொருள் — அறம், பொருளின்பமும் வீடும் ; தொன்று—பழமை ; இசை=புகழ் : வயம்=வெற்றி ; வாழ்வு=என்றும் நிலைத்திருக்கும் இயல்பு ; சைவம்= கடவுட் சமயம் ;— இந்த நாற்கூருகவுள்ள உலகத்திலே பொருந்துகின்ற பிறவினைய அடைந்திட்டு, விளக்கமுற்ற தொழிலும், உணர்ச்சியும், ஞானமும் என்கிற இவைகளை முறையே கொண்டுள்ள உடம்பும், மனமும், ஆன்மாவும் கொண்ட மக்களாவார், இவ்வுலகாலடை பொருளாகவுள்ள அறம் பொருள் இன்பமும் வீடும் பெறுவதற்காக நாட்டப்பட்டுள்ள பலவகைப்பட்ட மதங்களையும் தனது நன்கமைந்த அவயவமாகக்கொண்டு, பழமையான புகழினைப் பெற்று — உலகமுழுதும் ஒரு குடைக்கீழ் ஆளும் வெற்றிபூண்ட தனிநாயக அரசனைப்போல விளங்குகின்ற—எப்போதும் உள்ளதான சைவ சமயம்— (சுத்த சித்தாந்த சைவசமயம்) ; நான்கு கூறுபட்டிருப்பினும் அவை உலகின் ஒன்றுபட்ட உறுப்பாகவுள்ளமைபற்றி நானிலம் எனப்பட்டது இறு=மிகுந்த எனினும் ஆம். உடம்பு தொழிலையும், உள்ளம் உணர்வையும், உயிர் அறிவையும் கொண்டு நிகழ்வனவாம். சமயங்கள் பலவுள ; இன்னம் பல சமயங்கள் ஏற்

படலாம். எவ்வாருயினும் அவையாவும் சித்தாந்த சைவத்துட்பட்டனவேயாம். சித்தாந்த சைவம் எல்லா உண்மைகளையும் வேதாகம முரண்பாடின்றி யாவர்க்கும் ஏற்ப எடுத்துரைக்கும் பெற்றியது. எந்த மதம் கூறும் எந்த உண்மையும் இந்தச் சமயத்தில் இருப்பது தேற்றம். "விரிவிலா அறிவினர்கள் வேருெரு சமயஞ்செய்து எரிவினுற் சொன்னுரேனும் எம்பிராற் கேற்றதாகும்" என்பர் நாவரசரும். எல்லாச் சமயங்களும் சைவத்தின் அவயவங்களாக இஃது அவயவியாயிற்று. "The greatness of a religion depends only upon its tolerance to other religions and not upon the number of sayings it contains" சிவம் அனுதியானது; ஆதலால் இச்சமயமும் பழைமையுடைய தென்றற்குத் "தொன்றிசை" எனப்பட்டது. "வெண்குடை நிழற்றிய ஒருமையோன்" என்பது புறநானூறு. அதுபோல "ஒருகுடை வயவேந்து" எனப்பட்டது. ஏனைச்சமயங்கள் வழிவழி முறைப்பட்ட ஏவலைச் செய்ய இச்சமயம் அரசுபோல யாவற்றிற்கும் தலைமையாய்த் தழுவிக் கொண்டுள்ளதென்க "ராஜாங்க வைதிக சைவசமய அழகிதன்றே" என்பர் ஆன்ருேரும். இச்சமயம் தொன்றுதொட்டு என்று மிருப்பதாதலின் "வாழ்வுடைச்சைவம்" எனப்பட்டது. அன்றி நமக்கான வாழ்வினை உடையது எனினும் அமையும், ஆதலின் இச்சமயத்தே வாழ்வடைதல் சிறப்புடையதும் இறப்பநலம் பயப்பதுமாமென்க. "சாவிபோமற்றச் சமயங்கள் புக்குநின்று—ஆவியருதே என்றுந்தீபற" என்பது திருவுந்தியார். "சொற்பதமேவித் துரிசற்று மேலான தற்பரம் கண்டுளோர் சைவசித்தாந்தரே" —திருமூலர்.

## வரி 241—248.

முடிபு: படர்ந்தே, இயல்பும், என்பதும், நீர்மையும் தெளிந்தே—நுணுக்கம் = நுட்பம்; நாட்டம் = நோக்கம்; நங்கை—சக்தி; தளைந்து = கட்டி; தணிந்து = குறைபட்டு; மேற்குறித்த சித்தாந்த சைவத்திலே சொல்லப்பட்ட பதி, பசு, பாசம் எனப்படும் முப்பொருள்களின் நுணுக்கங்களை உள்ளத்திற்கொள்ளும் வகையாகிய அநேகமான சோபானங்களிலே ஏறி. உயிரின்பால் ஒன்ருகவும், வேருகவும, உடனுகவும் தங்கியிருந்து ஆன்மாவுக்கு அநுக்கிரகஞ்செய்வதே நோக்கமாகக்கொண்ட உமாமகேசுர சிவத்தினது தடத்த சொரூப லக்ஷணங்களையும், எப்போதும் (பெத்த நிலையினும், முத்திநிலையிலும்) தங்களின்நிலை அடிமைத்தன்மையாய் அடங்கிக்கிடப்பதே என்பதையும், உயிரைத்தளைந்தும், பற்பல வினைகளாக விளைந்தும், முடிவில் (ஞானசாரியன் தேற்றியபின்னர்) நீங்கிக்குறைந்து நீரைமறைத்திடும் பாசிபோன்ற தன்மையுடைய பாசத்தின் இயல்பையும், ஐயமறத்தெரிந்து கொண்டு–“ பதியும் பசுவொடு பாசமும் மேலைக்கதியும் பசுபாச நீக்கமும் காட்டி—மதிதந்த ஆனந்த மாநந்தி காணும்–துதி தந்து வைத்தனன் சுத்தசைவத்திலே ”—என்பது திருமந்திரம். நுணுக்கமது— என்றமையால் ஒவ்வொன்றன் பொதுவும் சிறப்புமாகிய இலக்கணங்களையும் தெரியவேண்டும் என்பதாம். இதுபற்றியே “இலக்கண இயல்” முதலில் ஓதப்பட்டதென்க. இவ்வுணர்ச்சி நிலைத்தற்பொருட்டே “ பந்தமும்பிரிவும் தெரிபொருட்பனுவற் படிவழி சென்று சென்றேறி ” என்பர் கருவூர்த்தேவர். ஆன்மாக்

களின் அறிவு தூல அறிவாகலால் சோபானமுறை பற்றியே ஏகதேச மாத்திரையாய் அறியவல்ல தென்க. ஆதலின்படிவழிபடர்ந்து எனப்பட்டது. திரோதானமும் சிற்சத்தியும் முறையே முற்பக்கத்தும் பிற்பக்கத்தும் அறிவிக்குந்தன்மையும் ஈதாம். தீக்கையும் ஞானமுமாகியபடிகளுமாம். சமயவிசேட நிருவாண முதலியனவும் படிவழிகளேயாம். உடலுயிர்போல் ஒன்ருயும், (கலப்புத் தன்மை); கண்ணும்கதிரும்போல் வேருயும் (பொருட்டன்மை); கண்ணொளியும் ஆன்மபோதமும்போல் உடனுயும்; (உயிர்க்குயிராதற்றன்மை); "உலகெலாமாகிவேருய் உடனுமாய்" — சித்தியார்; இவைபொது இயல் பெனப்படும் தடத்தம்; இங்ஙனம் இறைவன் நில்லாக்கால் சீவர்க்காவனபுரிதல் அரிதாகிவிடும். "அகத்துள்ளாரறிவர்" என்பதுமது. சீவராசிகள் முற்போக்கடைந்து சீபாதமதில் சேரவேண்டுமென்ற நோக்கங்கொண்டே பஞ்சகிருத்தியங்களும் இறைவன் நடத்துகின்ருனுதலின் நன்றுபுரிநாட்டம் என்னலாயது. மறைப்புச்சத்தியாயும் அருட்சத்தியாயும் கருணை துணைப்பட்டு நின்றே இங்ஙனம் செய்வித்தலின் நங்கைநாயகன் எனப்பட்டது. பதி, பசு, பாச இயல்புகளை அறிந்தாலல்லது உறைப்புவிளையாதாகலின் அவ்வறிவு இன்றியமையாதாயிற்று. சீவன் அடிமையாய் அநுபவித்தற்குரியன்; பாசம் சத்திச் செயல்களால் படிப்படியே தேய்ந்திறுவது. கல்லெறியும்போது விலகியும், பின்னர்க்கூடியும் நிற்றல் பாசியின் தன்மை. பாசமும்அன்னது.

## வரி 249—254.

முடிபு:– ஒருவியே, ஆக்கம்பயின்றே தெளிவுறல் நீங்கா நிலைஎனத் தெரிந்தபின் உழன்றுழி –

உறழ்தரும் = போன்ற ; ஒருவி = நீங்கி ; அப்பு = ஜலம்; ஆக்கம் = நன்மை; நூலகம் = நூல்களிடத்தே, தெளிவுறல் — தெளிவடைதலென்பது ; வேட்கை = தாகம்; உண்மைஞானம் = மெய்ஞ்ஞானம்; உறைப்பு = நிலைப்பு ; உழன்றுழி = வருந்தியநிலைகையில் ; கடல் என்பது அதன்வெளியும், நீரும், உவரும்ஆகும். இவற்றுள் கடல்வெளி வியாபகம் உடையது. கடல் நீர் வியாப்பியம் ; உவர்ப்பு—வியாப்தி எனப்படும் ; அதாவது, கடலில்உள்ளஉப்பு, நீரோடுமட்டில் கலப்புடையது ; கடல்வெளியோடிலது, கடல்நீர் வெளியோடும் தொடுகைஉடையது. உப்புப்போல்வது பாசம் ; அப்புப்போல்வது சீவன் ; வெளிபோல்வது சிவம் ; இப்படிப்பட்ட விஷயங்களை அநேகவகையான நூல்களிலே பலதடவைகள் தானே படிப்பதனாலே அநுபவஞானம் ஏற்பட்டுவிடாது. அப்படியல்லாமல் ஏற்படுமென்பது சரியன்று ; தாகங்கொண்ட ஒருவன் தெளிவான நீரையுடையதேனும் கடலின்கண்உள்ளநீரைப்பருகுவானாயின் அத்தாகம் தணியப்பெறான். இஃது உலகறிந்தசெய்தி. இதே கடலின்கண் உள்ள நீர் மேகத்தின்கைப்பட்டுத் தரப்படுமாயின் சிறிதளவு பருகியமாத்திரையாலே தாகம்தணிந்து மகிழ்வுபூக்கும். அதுபோல, ஞானாசிரியன் காட்ட அறிவதேதெளிவுபயக்கும் என்பது கருத்தாம். இதனால் சற்குருவின் அவசியம் சாற்றப்பட்டது.

அவ்வாறாயின், நூல்களைக் கற்றதனால் பயனென்னையெனின், சுருதி, குரு, சுவாநுபவம் என்னும் மூன்றனுள் சுருதியறிவுமட்டில்பெற்றால் அதனைத் தெளிவிக்கும் குருவை நாடச்செய்யும். அந்நாட்டம் கைகூடின் அநுபவ ஜனிதஞானம் லபிக்கும் என்க.

அநுபவ ஞானமே தெளிவாம். விஷய ஞானமே பெருக்கால் பிற பெறுதல் எளிதன்று. குருமார் பல வகைப்படுவாரெனினும் சிவத்தினதருள்வழி யாணை யால் சற்குருவாய்ப்பு பக்குவநிலைக்கேற்ப வாய்ப் புறும். நூலறிவு—அருள் தாகம் - சற்குருதரிசனம் இவை முறையே வாய்ப்பனவாம். மணிவாசகப்பெரு மானுர் மந்திரித்தொழிலில் ஈடுபட்டிருந்தும் ஞான நூல்களை ஓதிய தன்மையால் அருட்டாகமேலிட்டுச் சற்குருநாட்டமே கொண்டொழுகினர். அவரது முதிர்ந்த பக்குவநிலை பெருந்துறையில் குருந்தநீழலில் சிவஞானகுரு வடிவைக் குறுகுவித்தது வரலாறு. "தமியனேற்கு அருள் தாகமோ சற்றுமிலை என்பது வெளியாச்சு" "என்பர் தாயுமானுரும். குருவே வலிந்து நம்மை ஆட்கொள்வான் என்பர். ஆன்மக்கு =ஆன்மாவுக்கு;

## வரி 255—263.

முடிபு:- நிகர்ப்பும், பாகமும், நான்கவை(யும்) நடாத்திட, அமைந்து கடந்தே, அவாவி, கிடப்புற, தெரிதன்மையின், ஆசான் ஆவேசத்தால் வயங்குற விளங்கும்.

இருவினை நிகர்ப்பு=சுகதுக்கங்களில் சமபுத்தி; ஆன்மஅறிவின்கண், நல்வினை தீவினைகளும் அவற் றின் பயனுய இன்பதுன்பங்களும் விருப்புவெறுப் பின்றி ஒப்பத்தோன்றலாம். இதனுல் நான்என்னும் ஜீவபோதமாகிய மலச்சேட்டைதேயும். "கன்மஒப்பில் தெளித்திடல் மலங்களெல்லாம் மறைப்பு"—சித்தி யார். மலபாகம்=மலபரிபாகம்; மலசக்திதேய்தல்; ஆணவமல காரியமான மோகமுதலாகக் கூறப்பட்ட கெட்டகுணங்கள் ஆன்மஅறிவைவிட்டு நீங்குதல்;

சமயம், விசேடம் என்னும் தீக்கைவழிநின்று அநுட்டிக்கப்படும் சரியை, கிரியை, யோகநூல் நெறியில் நின்றுயோகமும்ஆகிய இவை ஒவ்வொன்றும் உபாயம் நான்கு, உண்மைநான்கு என்று எட்டுத்திறப்பட்டு $3 \times 8 = 24$ வகையாகி நிகழும். இருவினைஒப்பு முதலாகயாவும் இறைவன் அருளால் நிகழ்வனவேயாகும் என்பதால் நல் அருள்நடாத்திட எனப்பட்டது. அன்றியும் சமயம்முதலிய தீட்சைகள் குருவால் நிகழ்த்தப்படுதலின் நல்லர் உள் நடாத்திட எனவும் இச்சொற்ருெடர் கொள்ளப்படலாம். ஆசான் = ஞானசாரியர்; அவரை இடமாகக்கொண்டுசிவமே ஞானம்விளைத்தலின் பேரருள் எனப்பட்டது. சத்திப் பதிவு — சத்திநிபாதம்; திருவருட்சத்திபதிதல்; அதாவது, சிவபெருமான் திருவடியை அடையவேண்டுமென்ற நாட்டத்தால் ஆன்ம அறிவின்கண் சிவசத்தி பதிதல்; இது சத்தியின்வீழ்ச்சியாகும். இது சற்குருவைத்தேடும்படி தூண்டும். இதன் நான்காம் தரம் முற்றும்பதிதல் எனப்படும். இத்தேட்டத்தின் பயனுகப்பரிபாகம் ஏற்பட்டு மெய்ஞ்ஞான கோடிசூரியரான பரமாசாரியன் சிறப்பதிட்டானமாகிய ஆவேசபக்கமாக மானிடத்திருமேனியை இடங்கொண்டு தோன்றுவர்என்க. பேய்பிடித்தார்செயல் முற்றிலும் பேயின்செயலாகவே ஆவதுபோல தெய்வம் பற்றிஞர்செயலும் முற்றிலும் சிவத்தின்செயலாகவே மன்னும்என்ப. “இனி இவ்வான்மாக்கட்குத் தமது முதல்தானே குருவுமாயுணர்த்து” என்ற 8ஆம் சூத்திரத்து 2 ஆம் அதிகரணம்கூறும். ஞானம் நிகழ்தற்கு சரியைமுதலன முதற்காரணம்; குரு துணைக்காரணம்.

## வரி 264—269.

முடிபு :—நிகர்ப்ப, கவர்ந்தே அடர்த்து, ஆர்த்திட்டு, வார்த்து, மருவி கழித்து மூழ்த்தும். ஈர்த்தல்—இழுத்தல்; மூன்று—உடல் பொருள் ஆவி; அடர்த்து = சிதைத்து ; ஆர்த்திட்டு = பிணித்து ; வார்த்து—பெய்து ; பஞ்சன் = மகன்; மூழ்த்தும் = மூழ்கச் செய்யும் ; தஞ்சம்—அடைக்கலம்;

எதிர்ப்பட்ட இரும்பையே காந்தம் இழுத்தல் கண்கூடு. அதுபோலத் தன் அருளொன்றையே நாடிக்கிடக்கும் ஆன்மாவையே அணையும் குரு என்க. 'காந்தம் கண்ட பசாசம் போல' எனவுரைக்கப்படுமிது. குருவே வேண்டுவன யாவும் தாமே புரிவர். வேசியை வலிவதால் இன்பம் அவள் தாராள். அவளே அணையின் இன்பமாம். யானையைப் பாகன் செலுத்துதல் போலே இது. குரு அருள்புரிதல் இங்ஙனமே என்பர் நூலோர். எல்லாந் தன்னடிமையாகக் கொள்வது குருவினியல்பு ; "எல்லாமுன் உடைமையே எல்லாமுன்னடிமையே எல்லாமுன்னுடைய செயலே" என்பர் பெரியோர். "எல்லாம் விட்டு என்னைச் சரணடை" என்னும் கீதை நூலில் கண்ணன். "அன்றேயென்றன் ஆவியும் உடலும் உடைமையெல்லாமும்" என்னும் திருவாசகப்பாடல் இக்கருத்தறிவிப்பது. "வங்கத்தின்கூம் பேறும்மாப்பறவை" "அவள்தன் அருள்நினைந்தே அழுங்குழவி" என்ற பிறபெரியார்கூற்றுகளும் இங்ஙனே விளக்குவனவாம். ஒழிவற = பற்றற; அடல் = வலிமைமிக்க ; மலம் = பந்தனை ; அடர்த்து = தொலைத்து ; அருட்பதம் = திருவருளாகியதிருவடி ; திருவடிதீக்ஷை எனினும் பொருந்தும். ஆர்த்தல் =

கட்டுதல்; நாம் பிறப்பில் இப்போதுகட்டப்பட்டுள் ளோம். "ஆர்த்தபிறவித் துயர்கெடநாமாடும் தீர்த்தன்" என்பது பிறவியார்ப்புணர்த்துவது. "வம்பலர்தும்பை அம்பலவாண! நின்அருளெனும் நலத்தார்பூட்டித் திருவடிநெடுங்கரை (காயச்சிறைக் கலம் கவிழாமுன்னம்) சேர்த்துமாசெய்யே" என்பது கோயில்நான்மணிமாலை. "பாதகங்கள்செய்திடினும்" என்னும் உண்மை நெறிவிளக்கம் ஆரும்பாட்டு கரு தத்தக்கது.

ஐந்தெழுத்தருள்மறை = பஞ்சாக்கரமந்திர மொழி —இது உபதேசம்; முத்திபஞ்சாக்கரம் எனி னும் அமையும் பாசத்தைநீக்கி; முத்தியை அருளுவ தால். பஞ்சாக்கரம் சிவாயநம. இதனில் சிகாரம் சிவம்; வகாரம் சத்தி; யகாரம் ஆன்மா; நகாரம் திரோதை; மகாரம்—மலம் என்பர். இவ்வைந்தெ ழுத்தே எட்டெழுத்தாகவும், ஆறெழுத்தாகவும், நாலெழுத்தாகவும், பிஞ்செழுத்தும் பேரெழுத்து மென்றும் பேசுமெழுத்தென்றும் பேசாஎழுத்தென் றும் கூறப்படும். "அஞ்செழுத்தும் எட்டெழுத் தும்" என்னும் கொடிக்கவி இதனை உணர்த்தும். "அந்த மாதிகளில்லாத அஞ்செழுத்தருளினாலே வந்தவாறுரை செய்வாரை வாதியா பேதியாவே" என்ற சிவப்பிரகாசச் சுருதியால் "மந்திரசக்தி உள்ளவர்களுக்கு விடம் முதலிய குரூரசத்திகள் தாக்காதவாறு" போல ஸ்ரீபஞ்சாக்கரத்தை ஆசி ரியரநுக்கிரகத்தால் பெற்று அநுபவபூருவமாக உச்சரித்தவர்களைப்பிராரத்வகன்மம் வாதிக்கமாட் டாது. இதனால் ஆகாமியம் ஏறும்வழியும் இராது. சஞ்சிதம் ஞானதீக்கையால் பரிகரிக்கப்படுவது"

தந்தைக்குமகன்போல ஆசானுக்குச் சீடன்முறைப் படுவான் பேரின்பப்பெருவாழ்வில் அழுந்தச்செய் வதாதலால் மூழ்த்தும் எனப்பட்டது. ஆன்மா எப்போதும் சிவத்துக்கு உடைமையாம்; அடிமை யாம்.

## வரி 270—294.

முடிபு:- இவை நிலம் தெரிதர காட்டிடற்கு, எம்பிரான் தேர்ந்தனனும் என செப்புறும் அணைய வெம்மையின், வற்றிய உள்ளம் நனைந்திட, அவாப் பெற, புரள, முகந்து முகந்து வார்த்தடும் இயல் பினன் வாதவூரர்க்காக, குருந்தின் நிழல் அமர்ந்தும், மாறியும், பொறுத்தும், மெய்பெற எதிர்கொள் வண்ணம் நிகழ்த்திட, முகிழ்த்திட, உரைத்து அருள் ததும்பிட, விளங்கிட, ஆசானாகி பேணிய தகை விளங்கிட அமர்ந்து, பேணலும் உரியன்; அதா அன்று—

### வரி 270—274

என்றுஉரை—என்றிப்படிச் செப்புகின்ற; இயல்பு=தன்மை; இருநிலம்=இருகூறுபட்ட நிலப் பகுதியும்; எம்பிரான்—கடவுள்; சிறுதுறை=சிற் றின்பத்துறைகள்; செகுத்திடும்=பிளந்தொழிக்கும் பெருந்துறை = பெரியதோர்களம்; ஞாலம்=உலக மக்கள்; ஆகமத்தே கூறப்பட்டுள்ள இயல்புகள் உண்மையானவை என்பதை நிதரிசனப்படுத்தும் பொருட்டேசிவம் ஆசானாகி மணிவாசகனாரை ஈண்டு ஆட்கொண்டதுஎன்பர் பெரியோர். ஆணும், பெண்ணும் என்கிற இருதிறப்பட்ட உலகமும் தெரி தர என்பான் இருநிலம் எனப்பட்டதென்க. எக் காலத்தும் இக்காட்சிதெரிவுற விளங்குமாறு இத்

தலம் உள்ளதென்பதை 'என்றும்' என்ற சொல் லுணர்த்தும். காட்சியளவை ஐயமறுப்பதெனவிளக் கற்குக் 'காட்டிட' எனப்பட்டது. எமக்கும் இவனே பிரான் ஆதலின் எம்பிரான் என்றும். 'ஒன்றேகுலனும் ஒருவனே தேவனும்' என்பர். 'தம்மானை அறியாதசாதியர் உளரே' எனவியப் புரையாகவும் பாடுவர். சிறுதுறை—அவ்வவர் மூழ்கும்துறை; இஃது அவரவர்க்குரியது; நிலையில் லது. பலதிறப்படுவது. அளவு கூறப்படுவது. பெருந்துறை அங்ஙனமில்லாதது. "மனைசுதர் என்றுயாம்பேணி நாட்கழிப்பது பிழையே" என்னும் வைராக்யதீபம். பெருந்துறை—ஊர்ப்பெயரும் ஆம். ஞாலம்—என்றமையால் இஃது உலகறிந்த செய்தி யென்பது தேற்றம். அங்ஙனமாகவும் ஐயப்பாடு என்? என்பது குறிப்பு.

### வரி 274—275

அவி—உயிர்ப்பலி; மூவெரி—வேள்வித்தீ மூன்று காருகபத்தியம் முதலன. அவை உயிர்ப் பலி பெறுதல்போலத் தாரேஷணை முதலிய மூன்றும் (அல்லது) காமாக்கினி முதலிய மூன்றும் எரித்தலால் அறிவும் உணர்ச்சியும் அடியோடு வற்றிப்போய் எனது நெஞ்சம் முழுதும் மெய்ஞ்ஞானத்தால் நனைப் பேறும் வணணம். யாகாதி தவங்கள் உயிர்ப் பலி செய்து சிறு பயன் பெறுமாறுகும். "அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின்" என்பர் திருவள்ளுவர். "வேள்வி முதலியனவும் சிவபிரானைநோக்கிப் பொது நீக்கிச் செய்யின் பொதுச் சிவ புண்ணியமாகும்" என்பர் பெரியோர். தக்கன் வேள்வி செய்தும் தீங் கடைந்தமை நூல் பிரசித்தம். "பொன்போற்

பொரிய வறுப்பினும்" என் பொன்மணியினை எய்தவொண்ணுதென்பர் திருமூலரும். மணிவாசகரின் திருவாசகமானது இறையன்பினை விளைத்திட்டு உள்ளம் களிதுளும்பவைக்கும் இயல்பினது. "திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்" என்பது பழமொழி. "அன்பர் ஆகுநரின்றி மன்பதையுலகின் மற்றையர் இலரே" என்பர் சிவப்பிரகாசர்.

வரி—276.

முற்றுணர் மோனன் = சர்வக்ஞனுகிய சிவபெருமான்; சிவபெருமானும் எல்லாமுணர்ந்த தமது மோனநிலை நீத்து அடியான் தமிழிற் சொல்லிய அருள் வாசகத்தைப் படிசெய்ய விரும்பினுன் என்ப; "கைகளோ முறிபடும் கைகள்" என வியந்து இச்செயல் பாராட்டப்படும். "கடையூழி வரும் தனிமை கழிக்க அன்ரே அம்பலத்துள் உடையார் உன் வாசகத்தில் ஒரு பிரதி கருதினதே" என்பர் சுந்தரம் பிள்ளை என்பாரும். இம் மடாலயத்துப் பூசை சபாபதியாருக்கு நிகழ்வதும் உணரத் தக்கது.

வரி 277—280.

அன்புபொசி = அன்பினை வெளியே கசிய விடுகின்றதான; "நீர் பூசல்தரும்" என்பர் நாயனுர். "அழுதடி அடைந்த அன்பர்" என்பர் மணிவாசகரை. கண்ணீர் ஆருகப்புரண்டோட; ஏனைய அன்பர்களையும் புரட்டிக்கொண்டு ஓட எனினும் ஆம்; ஆற்றின் இயல்பு அகப்பட்டதைப் புரட்டியோடுவது. பொற்கலம் = பொற்பாத்திரம்; மட்பாத்திரம் யாவராலும் தீண்டுதற்குரியதன்று. உடைந்துவிடுமியல்பினது. பொற்பாத்திரம் யாரும்

தீண்டத்தக்கது. உடையாதது. இங்குத்திருவாசக நூல், பொற்கலம் எனப்பட்டது. "வாசகன் புகன்ற மதுரவாசகம் யாவரும் ஓதும் இயற்கைத் தாதலின் பொற்கலம் நிகர்க்கும்; பூசுரர் நான்மறை மட்கலம் நிகர்க்கும்" என நால்வர் நான்மணியுள் கூறப்படுவது காண்க. திருவாசகமென்னும் பொற் கலத்தினாலே, என் தந்தையும், பூரணனும் ஆகிய சிவத்தினது பெருங்கருணை வெள்ளத்தை மொண்டு மொண்டு (தமிழர்க்குமாத்திரமன்றித்) தரணியர் எவர்க்கும் பயன்படுமாறு வார்த்தருளியபேரருளியல் பினர் வாதவூரர்என்க. அடிகள் ஜி. யு. போப்பைய ராதியோர் இந்நூலின் சுவையுணர்ந்து, போற்றியுள் ளமை இதற்குச்சான்றாம். 'முகந்து முகந்து' என்ற அடுக்கு, பரிவுணர்த்தும் பான்மையது. இயல்பினன் =இயல்பினனாகிய; வாதவூரில் தோன்றியபடியால் வாதவூரர் எனப்பட்டார். புத்தரோடு ஈழத்தே வாதிட்டகுறிப்பும் இப்பெயர்க்கண் தொனிக்கும்.

### வரி 281—283

குருந்துஒசி=குருந்தமரத்தினை ஒடித்த; "கொல் லையஞ் சாரல் குருந்தொசித்த மாயவன் எல்லைநம் ஆனுள் வருமேல் அவன்வாயின் முல்லையந்தீங்குழல் கேளாமோ தோழீ" — என்பது சிலம்புநூல்சொல் வது. கண்ணன்செயல் குருந்தைஒடித்தலும், சிவன் செயல் குருந்தின்கீழ் அமர்ந்து சொல்லைவடித்தலும் என முரண்காண்க. கண்ணைப்பறித்து மலராகச் சிவத்தனடியில் அருச்சித்தவன் என்பது இப்பெயர்க் குறிப்பாம். (ஒசித்த குற்றம் போக்கற்குப்போலு மென்றநயம்படும்); திருந்திய=அருச்சனை ஆற்றி மையால் செம்மைப்பட்ட சிவந்தகைகள் போன்ற

தாமரை மலர்கள், அப்பெருமான் தன்னொருகையில்; பாஞ்சஜன்னியமென்னும் வெண்சங்கை ஏந்தியிருப்பது போல ஆயிரக்கணக்கான சங்குகளைத்தாங்கி நிற்கின்ற பரிசுத்தமான தீர்த்தமமைந்த விசாலமான கரையினிடத்தே; சக்கரம் பெறச்சங்கேந்தினன் போலும்! இச்செய்கையைத் தாமரைகள் காட்டினபோலும்! சிவகங்கையாதலின் துங்கம் எனப்பட்டது. இஃது இத்தலத்துத்தீர்த்தம். புறம் அகம் இரண்டையும் தூய்மை செய்வதாகலின் துங்கம் என்ற அடைமொழிதரப்பட்டது.

வரி 284—288

மருங்கு = சாரல்; மணி நிழல் மணி போலும் நிழல்; (நீலமணி அன்றி மரகதம் எனினும் அமையும்) "குருந்த நீழலிற்குடிகொண்டோயே" என்பர் அறிஞர். மறைப்பரி = வேதமாகிய குதிரைகளை; மாறியும் = பாண்டியனிடம் விற்றும்; இது வரலாறு. மறைப்பரிமாறியும் = வேதத்தைப்பரிமாறியும் எனலும் ஆம். வாதவூரர் செவிக்கண் பரிமாறப்பட்டது மறைமொழிப்போதம். பண் அடி பொறுத்தும் = பிட்டுக்குமண் சுமந்தும், பாண்டியனிட்ட பிரம்படியைப்புறத்தே தாங்கியும்; இது வரலாறு; மண் = மலங்களைக்கழுவவல்ல அடி = தமது திருவடியை; பொறுத்தும் = மணிவாசகர் முடியானது தாங்கச் செய்தும்; இது திருவடி தீக்ஷையாகும். பொறுத்தும் பொறுப்பித்தும் எனப்பிறவினைப்பொருள்பட நின்ற சொல்லாகக்கொள்க. வாச்சியன் = வாசகத்தின் பொருளாயிருப்பவன்; பேச்சது = பேச்சு; மெய்பெற = உண்மையுரையென்பது தோன்ற; வாசகவாச்சியங்கள் ஓரிடத்தே காணப்படுமாறு பரமாசாரியன் ஈண்டு விளங்கினன் என்க. "பெருந்துறை புகுந்து

பேரின்பவெள்ளம்—மூழ்கிய புனிதன் மொழிந்த வாசகமே வாசகம் : அதற்கு வாச்சியம் தூசகலல்குல் வேய்த்தோளிடத்தவனே " என்பர் கற்பனைக்களஞ் சியர். தென்முகத்தெய்வத்திருவோலக்கம்—கல்லா லின் புடையமர்ந்து போதனை புகட்டும் சின் முத்தி ராங்குசத் திருக்கோலக்காட்சி ; நின்முகத்து=உனக் கெதிராக; பிரத்தியட்சமாக; எதிர்கொள்வண்ணம்= வரவேற்கும் விதமாக ; முகக்குறிப்பு வரவேற்பு உணர்த்துவதென்க. சகல ஞானச்செல்வங்களையும் இங்குப்பெறலாமென்பது அறிவிப்பு. " தில்லையுட் சிற்றம்பலத்து நட்டம் என்று வந்தாய் என்னும் எம்பெருமான் தன் திருக்குறிப்பே " எனத்திருநாவுக் கரசர் வாசகமும் காட்டும். நிகழ்த்திட=சொல்ல ; தெரிவிக்க ;

வரி 289—294.

முந்துரை ஞானபோதகம்=முற்பட்டதான சிவ ஞானபோத நூல் ; முகிழ்த்திட=திருக்கரத்திலே விளங்க ; தந்து உரைத்து ஆள் புரி தண் அருள் எனப் பதப் பிரிவு கொள்க. தந்து—நூல் எனினும் ஆம் ; வேத நூல் போற்றுதலை உடைய திருவடி புரிகின்ற எனினும் தகும். ததும்பிட—வழிய ; ஆன்ம நாதர்—இத் தலத்திறைவன் திருப்பெயர் ; உயிர்க்கிறையாயிருக்கும் எனினும் பொருந்தும். அருந்திறல்=உள்ளும் புறம்பும் அமர்ந்திருக்கும் அரிய திறமை ; (அல்லது) திறமையுடையவன் ;

நேசாலயம்=பக்தியாகிய கோயில் ; பூசலார் மானத மந்திரம் கருதத்தக்கது ஈண்டைக்கண் ; ஆசானுகி=ஞானசாரியனுகி ; முன்—முன்பொரு சமயம் ; குறும்பர், கௌமார பாண்டியர் முன்னர்



திருப்பெருந்துறை ஸ்ரீ ஆத்மநாதர் சந்நிதி.



திருப்பெருந்துறை ஸ்ரீ யோகாம்பிகை சந்நிதி

ஆசானுகிப்பெருந்துறை காட்டிய பெரியதகைமை விளங்குமாறு என்பது 64-ஆவது அடியின் குறிப்பு. பெருந்துறை = திருப்பெருந்துறை என்னும் தலத்திலே; அமர்ந்து = என்றுமிருந்து பேணலும் = வருவாரைப் பாதுகாத்தலும்; (நூற்பொருளும் பெறுதற்கு ஆண்டைக்கேகுதி) என்பதுகுறிப்பாகும்.

IV முடிபு: கடல் வளைஇய நானிலத்து நிறுவிய சமயம் உறுப்பெனக் கொண்டியல் சைவம் நுவல் பொருள் படர்ந்து, தெளிந்தே, உழன்றுழி, கடந்தே, கிடப்புற, ஆசான் விளங்கும் மூழ்த்தும்; என்றுரை ஆகமத்து இயல்பு காட்டிடற்கு தேர்ந்தனன் என செப்புறும்; நணைந்திட, அவாப்பெற, புரள, வார்த்திடும் வாதவூரர்க்காக, அமர்ந்தும், மாறியும், பொறுத்தும், நிகழ்த்திட, முகிழ்த்திட, ததும்பிட, விளங்கிட, ஆகி, விளங்கிட, பெருந்துறை அமர்ந்து பேணலும் உரியன்; அதாஅன்று.—

## 5. திருவிடைமருதூர்

### வரி 295—301.

முடிபு:—உதித்து, குறுகுங் குறிப்பொடு, சுமந்து, அருத்தி, புலப்பட, கொழித்துஒதுக்கும் துறைபொலி காவிரிசெய் நாட்டதுவே.

நெடுவரை = உயரிய மேற்குத் தொடர்ச்சி மலை; குறுகும் = அணையும்; தொடைப்பட = தொடுத்த மாலைபோல் காணப்பட; நீரமுது = தண்ணீராகிய அமிருதம்(அ) உண்டி; புலம் = அறிவு; அமைதி = சாந்தம்; பொலி = விளங்கும்; கவின் = அழகு; கழனி நாடு = வயல்வளமிக்கசோணாடு; "மலைத்தலைய கடற்

காவிரி" என்பர்பழையோர்; நானிலமும் அகப்படுத்தும்தன்மை இதனுல்புலப்படுப்பது. மலேயிற்பிறக்கும் நதி ஏற்றமுடைத்து; கடலிற்கலப்பதும் அத்தகையதே; காவிரி: பிறந்த இடத்தானும், புகுந்த இடத்தாலும் பெருமைபடைத்த நதிஎன்க. இச்சிறப்பு "இருவேறுதொல்குடி" என்றுற்போல. ஒருகன்னி, ஒரு பெருந்தலேவனேமணக்கஎண்ணிச் சுயம்வரமாலேயோடு செல்வதுபோன்று இந்நதிசெல்கிற காட்சி உள்ளது. குலமலர்=சிறந்தமலர்; காவிரியைக் கன்னியாகக்கூறுதல் கவிமரபு. அங்ஙனம் செல்லும் போது போகுமிடங்களில் உள்ளஉயிர்க்கெலாம் விருந்தளித்து மகிழ்வெய்துவிப்பதுபோல, நீரமுதருத்திச்செல்லுகிறதென்க. அருத்தி = உண்பித்து; இக்காவிரிநதி இருமருங்கும்உள்ள கரைக்குள்ளே கட்டுப்பட்டு நடக்கிறதென்க. அறிவாளிகள் கல்வியாழங்கண்டு தெளிவுறுவதும் அமைதியடைவதும் இந்நதியோட்டம் காட்டுகிறதென்னலாம். "ஆன்றமைந்தடங்கிய சான்றேர்பலர்" என்பது இவரது அறிவுநுட்பம் புலப்படுத்தும். இயற்கையறிவுக் கூர்மையும், அவ்வறிவுகொண்டு கல்வியானும் கேள்வியானும் ஆய்வுநிகழ்த்துதலும், அதன்பயனுக ஐயந்திரிபு நீங்குதலும், அமைதி பிறத்தலுமே சான்றேராதற்குத் தக்கவை. "இதனேக் காவிரி நதியின் ஆழமும், தெளிவும் அறிவுறுத்துகின்றன. காவிரிநதிக்குப் பொன்னி என்பது பெயர். பொன்றுளே இந்நதி அடித்தும் ஒதுக்கியும் வருதல் பிரசித்தம். திருவிடைமருதூரின்கண் புகழ்பெற்றது பூசத்துறை. இங்குத் தைப்பூச நீராட்டம் சிறப்புப்பெற்றது. "வருந்திய மாதவத்தோர் வானேர் ஏனேர் வந்தீண்

டிப் — பொருந்திய தைப்பூசமாடி உலகம்பொலி வெய்த" என்பது தேவாரம். காவிரி நதியே சோணாட்டின் சிறப்புக்கெல்லாம் உயிர்நாடியாயிருப் பது வெளிப்படை. கழனி = வயல். மருத நிலமாவது.

## வரி 302—319.

முடிபு: கழனிக் கண்ணது; கதலிகள் சூழ்வது; நிலவுறும் பாங்கது; இமைக்குந்திறத்தது, வேலிகட் கிடையது;

### வரி 302—304.

இனிமைப்பண்பு மிகுந்த உள்ளங்கொண்டு அசைகின்ற நீற்றொளிவிளங்கும் நெற்றியையுடைய குற்றமற்ற சிவனடியார் திரள்போலக் கரும்புகள் நெருங்கிக்காட்சியளிக்கும் கழனிகட்கிடையே உள்ளது (இவ்வூர்); கரும்பினுள்ளும் இனிமை உள்ளது; காற்றினால் அசைகிறது; முடியெல்லாம் வெளுத்த பூக்களைக்கொண்டு நெருங்கி நிற்கிறது. "நீற்றலர் பேரொளி நெருங்கும் அப்பதி" என்றஇடம் போல்வது இது. உள்ளத்தே இனிமைப்பண்பும், ஆனந்தத்தால் ஆடுதலும், திருநீறு துதையப்பூசியநெற்றியும், குற்றமின்மையும், கூடிக்குலவுவதும் அடியார் குணங்களாகும் என்பது தெரிதலாம். கழை = கரும்பு;

### வரி 305—306.

மேகத்துக்கு நன்றி செய்வதுபோல, வாழைகள் தலையிலைவிரித்து, பழுத்த பழங்களை அவ்விலை மீது படுத்திக்கனிவுடன் அழைப்பது போன்ற காட்சி காட்டும் வாழைத்தோட்டங்களின் இடையே

உள்ளது ; (இம்மருதூர்) ; கார் = மேகம் ; கோழிலை = இளையபெரியஇலை; படைத்தல்-(இருபொருளாகப் பயன்படும் ;) கதலி = வாழை ; வாழைகள் இங்ஙனம் இலைவிரித்திட்டுப்பழம் படைத்து அழைக்கும் பண் பினைக்காட்டுவது இவ்வூரென்க.

வரி 307—309

சிவிறி = விசிறி ; அன்பினர் = தொண்டர், உள்நீர் = உள்ளே நீரிருப்பதை ; இளநீர்க்காய்களை ; நிழற்றி நிழல்செய்து ; பாங்கது = பக்கங்களைக்கொண்டது ; தண்ணீர்ப்பந்தலில் தொண்டர்செயலைத் தென்னமரங் கள் செய்கின்ற குறிப்பு இவ்வரிகளில் தரப்பட்டுள் ளது. தண்ணீர்க்கரகம் தாங்கி நிற்றல் ; விசிறி வீசல் ; உள்ளன்பு புலப்பட நிழல் செய்தல் ; இவை தொண்டர் செய்கைகள் ; இளநீர்க்காய்களை தாங்கி நிற்றல், பச்சோலைமட்டையால் வீசுதல் ; நிழலளித் தல் இவை தெங்கின் செயல்கள். ஊர்சூழ்பொருட் களின் பண்புகள் ஊரினர் பண்பு குறிப்பன வென் பது உட்கருத்தாக ஏற்கத்தகுவன.

வரி 310—311.

பாசடை = பசுமையான இலைகள் ; தாமரையிலை முதலியன ; பல்விளக்கு = செந்தாமரை முதலிய மலர் கள் மலர்ந்து நிற்றல் ; "தாமரைவிளக்கந்தாங்க" என்பர் கம்பராதியோரும். தேசுடை — விளக்க முடைய ; மடுக்கள் = தடாகங்கள் ; இமைக்கும் = பிரகாசிக்கும் ; பச்சைக்கம்பளம் பரப்பி, விளக்கு ஏற்றிவைத்து வரவேற்கும் சபைகள் போல விளங்கு வன மடுக்கள் என்க.

## வரி 312—319.

புலத்து அடைநீரால்; வயலுக்குள் மடைகளால் அடைக்கப்பட்டுச்செல்லும் தண்ணீரால்; புலம்+ தடை உயர்வினை = ஐம்புலங்களையும் தடுப்பதால் அடையக்கூடிய சிறப்பை; கண்ணெதிர்காட்டும் = பிரத்தியட்சமாகக் காட்டுகின்ற; கால்கள் = வாய்க் கால்கள்; எழுந்து = நின்று; பூரணகும்பம் தாங்கிக் கொண்டு பெரியோரை வரவேற்கப்பலர்நிற்கும் அழகுபோலத் தொண்டைக்கதிர் வீக்கத்தோடு பயிர் கள் விளங்கி, (பிறகு) தருமம் ஒன்று பலவாகப்பய னளிக்குமியல்புடைய தென்பதை, ஒருநெல் தூவிய தன் பயனாகப் பலநெற்களைத்தாங்கிய கதிர்களைப் பரப்பி, தம்மைப் பாதுகாப்போர் கூற்றுவர்போலும் கொடுமைபுரிவோராக மாறிவிட்டாலும், (அக்கொ டுமை கருதாமல், அவர்செய்தநன்றி ஒன்றினை உள்ளி), (சிறந்த உள்ளத்துடன்) சிவந்த நிறத்து டன் தரைமீது விழுந்து, பதிலுதவிசெய்கின்ற நெற் பயிர்கள் விளைகின்ற வயல்களுக்கிடைப்பட்டது; (இவ்வூர்); "ஒல்லாரின் வளர்த்தவரே ஒறுத்துவரிந் தெடுத்தேகி வெல்லாதகளத்திட்டு மிதித்திரும் போர்செயப்பட்டு"; "செறியுலாம்புனல் சிறை செய்து பயன்படஒதுக்கி, வெறியுலாமலர் மிடைந் தகல்வயல் வழிவிடுவார்—பொறியுலாம்வழிபோக்கில தியல்பட அடக்கிநெறியுலாவற நேரவைநிறுத்தினர்" —தேம்பாவணி; "அறப்பயனும் தக்கார்கைப்பட்டக் கால் வான்சிறிதாப் போர்த்துவிடும்" — என்பன போன்ற பாட்டுவரிகள் ஈண்டைக்கு ஒப்புநோக்கத் தக்கன. போற்றுநர் = தம்மைவளர்த்த உழவர்; விதைத்து நீர்பாய்ச்சி எருவிட்டுக் கண்காணித்தல்

செய்பவர். பிறகு இவரே அறுத்துவீழ்த்துபவர் ஆகின்றனர்; அடிக்கின்றனர், மிதிக்கின்றனர், "கொன்றன்ன இன்னுசெயினும்" என்னும் குறள் இதனை உணர்த்தும்.

## வரி 320–349.

முடிபு:– இடையது முன்றிலும், கிடையும், பள்ளியும், சாலையும், நிலைகளும், நியமமும், மாடமும், குறிப்ப, அன்ன தெருக்கள் சூழ்தர, கோபுரம் தணிப்ப, பொருவும் கோயிலும், மாடம்பலவும், அவையும், உறையுளும், இடனும், மருவுறுமாடமும், நிலையமும், சூழ்தர – நாபபண் துளிக்கும் தேறல்;

### வரி 320—321

இருல்=தேன்கூடு மருதம்=மரம்; பயன்படும் =பயனை உதவுகின்ற: தேனடைகளைத்தம் கிளைகளி டையேஉடைய மருதமரங்கள் (பயன்மரம் உள்ளூர்ப் பழுத்திருந்தாற்போன்று) வானுற ஓங்கித்தேனும்பய னைத்தாமாகவே உதவிக்கொண்டிருக்கும் இடத்தை உடையது; இவ்வூர். முடவனுக்கும் கொம்புத்தேன் கிட்டும்படி சொட்டித்தருவது பயன்படுமாருகும். "பூவாய்நெடுங்கோட்டுறுபசுந்தேன் கைகால்முடங்கு பொறியிலிதன் நாவாயொழுகிற்றென" என்னும் பாடல்அடிகள் சிந்திக்கத்தக்கன. இடை=இடம்;

### வரி 322—323.

சிறுவர் விளையாட்டுகள் ஒன்றை உரைப்பன இவ்விரண்டடிகள். தெருவில் சிறுமியர் சிறுவீடு கட்டுகிருர்கள். சிறுவர்கள் நடைவண்டியைச் செலுத்தி அவ்வீடுகளை அழிக்கிருர்கள்; பிறகு செஞ் சொற்சிருர்கள்கூடி ஒரு விளையாட்டுத்திருவிழா நடத்துகிருர்கள். இவ்வாடல் நிகழ்கின்றன வாசலி

டங்கள். சிறுமியரமைக்கும் சிறுவீட்டிலேயே வசிப் படைவது நிலையில்லாதது ; ஆதலால் நல்லநடையிலே ஊர்ந்து பெருவீடடைவதே சிறப்பெனவும், அதற்கு முதற்படி இறைவனை உருவால் வழிபடுவதுதான் எனவும் தெரிவிப்பதுபோல இந்நிகழ்ச்சியுள்ள தென் பது குறிப்பெனக்கொள்க. "அழிக்க உளத்துக் கொண்டனையேல் அடங்காதெழும் வெங்கொடுஞ் சினத்தை அழிக்க" என்னும் பாட்டும் இக்கருத்துக் குத்துணைசெய்யும்.

வரி 324—325.

முதுமறை = வேதம்; கிடை = வேதம்ஓதும்இடம் ; முக்கனிபோல்வது மூவர்பாடல் பள்ளி = தேவார பாடசாலை ; பாடுதலும், பொருளுணர்தலும் ஓதுத லாகும் ;

வரி 326—328.

கலைபலவும், பன்மொழிகளும் கற்பிக்கும் கல்விச் சாலைகளும் ; ஆதீனப்பள்ளி இதற்குரியசான்றும். நெய்யால் நெருப்பை வளர்க்கும் ஓமச்சாலைகளும் ; அடிசில்—உணவு ; பசித்தோர் வயிற்றுநெருப்பை நெய்யடிசிலிட்டு அவிக்கும் அறச்சாலைகளும் ; தீ = பசித்தீ ; முன்னதை வீடுகளிற்புரிவோர் ஆடவர் ; பின்னதைப்புரிவோர் மாதர்என்க.

வரி 329—330.

புண்ணியக்கொடி = துவசம் ; மாடம் = மாளிகை; கொடியால் மாடங்களின் உயர்வு குறித்தவாறு.

வரி 331.

மேற்சொல்லப்பட்ட இடங்கள் ஆற்றின் இரு கரைகள் போலத்தெருக்களின் இருமருங்கிலும்

உயர்ந்துள்ளன என்க. இரு மருங்கின் மாடங்களைக்கரையெனக் கொள்ளின் இடையே கிடக்கும் வீதி நதியெனத்தோன்றக்கூடும். சாதாரணநதியில் ஜலம் ஓடும்; இதில் ஜனம் ஓடுவதுஎன்க. கரிபரி எனினும் ஆம்.

வரி—332.

'திருவிடை மருதூர்த்தெருவழகு' என்னும் முதுமொழி இது தரும்.

வரி—333.

புறம்சூழ்தர=வெளியே சூழ்ந்திருப்ப; இடை= இவைகட்கு நடுவிலே; வாய்விடு பொன்வரை= வாய்திறக்கப்பட்டுள்ள மகாமேருமலை;

வரி—334.

நாற்றிசை—நான்குபக்கங்களிலும்; தோற்றம் =காட்சியொத்த; கோபுரம்=நான்குகோபுரங்கள்; தணிப்ப = தம்மைக் காண்போரைத் தலைவணங்கச் செய்ய;

வரி 335—337.

தான்அமை=தானகவே அமைந்த; (இயற்கையாகவே அமையப்பெற்றுள்ள) தவளப்பெருவரை= வெண்மையான கயிலைமால்வரை; ஈர்இயல்=இயற்கையும் செயற்கையுமாகிய இரண்டு தன்மைகளும் விளங்க அமைவுற்ற; பேரியல்=பெரிய இயல்பினை; பொருவும்=போன்ற; புகல் = அடைக்கலமான; மருதம்=தலவிருட்சம்; புணர்=சேரப்பெற்ற; புரிசை=சுற்று மதிலைக்கொண்ட; கோயில்= ஆலயம்;

வரி 338—341.

ஒரு கோயிலுக்குள்ளே விநாயகராதிய சுற்றுத் தெய்வநிலையங்கள் எவ்வெத்திசைக்கண் அமையப் பெற்றுள்ளனவோ அங்ஙனமே இத் திருவிடை மருதூரை மூலத்தானமாகக்கொண்டு பிறதலங்கள் அமைந்துள்ளன என்பது ஆன்றோர் கருத்து. சுற்றுள் = உள்பிராகாரம்; திருகு ஓட்டிதிகழ் = மயக்கத்தைப்போக்கி விளங்குகின்ற; மருங்கு = பக்கம், வட்டம் = வட்டாரம்; துன்னிய = நெருங்கிய; மாடம் = சிறுகோயில்கள்; ஆடரங்கவை = நிருத்தமண்டபம்; பிரசங்கமண்டபமும்;

வரி—342.

அடி = எம்பிரான் திருவடிகளையே; ஆராய்தரு = எப்போதும் தியானிக்கின்ற; அடியார் உறை உள்ளும் = தம்பிரான்மார்கள் வாழ்கின்ற இடமும்; (கட்டளைத் தம்பிரான்மார்)

வரி—343.

இவ்வரி பட்டினத்தாரைக்குறிப்பது;

வரி—344

இவ்வரி பத்திரகிரியாரைத் தெரிப்பது. இவர்கள் தவம்பயின்ற வாயில்களும்;

வரி 345—346

தனத்துச்செல்வி — திருமகள் (ஸ்ரீ சக்கரம்); மவுனமாமங்கை—மூகாம்பிகை;

வரி—347.

சுவடி கொள்நிலையம் = சரச்சுவதி நிலையம்; நாப்பண் = இவற்றிடையிலே;

## வரி—348.

இடையினம் — ய, ர, ல, வ, ழ, ள, என்பன ; இவ்வெழுத்துக்கள் வல்லினமும் ஆகாமல், மெல்லினமும் ஆகாமல் தனித்துக் கிடத்தல் போல ; "இடையினமே போல இரண்டறமும் அல்லா நடையினமே நாம்" என்பர். "இல்லறத் தனல்லேன் இயற்கைத் துறவியல்லேன்" என்பதுமது. கடையன் = கடைப்பட்ட நான் ; தடை அற = பசி என்னும் தடையானது நீங்கும் வண்ணம் ;

## வரி—349

மருதிடைத் துளிக்கும் = திருவிடை மருதத்தேயிருந்து துளித்துளியாகச் சொட்டுகின்ற ; தேறல் = தேன் ; இஃது பரமானந்தக் களிப்புத் தருவது. இத்தேன் அருந்தப்பெற்றூர்க்குப் பசி, தாகம் முதலியன இரா என்க. சிவபெருமான் பவப்பசி தொலைக்கும் மருந்து போல்பவன். இம் மருந்து நல்கும் வயித்திய நாதனும் அவனே. இம் மருந்தே ஆன்மார்த்தமாம்.

## வரி 350—372.

முடிபு :— களிறும், மடங்கலும் வளர்க்கும் குடுமிக் குன்றம் ; கையனும், முதல்வனும், உருத்திரர் —நங்கையர்— முனிவரும், எண்மரும், எளியரும், பிறரும், இறைஞ்சிட பொழியும் ஒண்முகில் ; அன்பரும், முனிவரும், வரகுண தேவரும், தேவரும் பருகிடும் அமுதம் ; அனலோன் ; கடிவோன் ; தேவன் ; முதல்வன்; தெய்வம்உறைபதி அரும்ப, மலர்தர, வழிதர, அறைதரும் அன்பர் அடையாதுதாங்கி திருவிடைமருதூர் திகழ்தலும் உரியன் ; அதா அன்று—

வரி 350—352.

மழவெம் களிறு=இளைய, யாவரும் விரும்பும் யானை முகம் கொண்ட விநாயகர் (படித்துறை விநாயகர் எனினும் ஆம்); மறை சொல்=பிரணவ மறையை உபதேசம் வைத்த; மடங்கல்=முருகப் பெருமானாகிய சிங்கம். யானையையும் சிங்கத்தையும் என்பது முரணில்லாதாலும் பெருமை விளங்கக் கூறப்படும் கூற்று. "அறுமுகம் படைத்த கேசரியும்" என்பர் ஆன்றோரும். இவ் விலங்குகள் வளருமிடமான மலை இங்குச் சிவபெருமான். சிவபெருமான் முடி மதி தாங்கியது; ஆதலின் மதிதவழ் எனப்பட்டது. குடுமி—தலை; சிகரம்; செய்ய=சிவந்த; கயிலையினின்றும் வேறுபடுத்தற் பொருட்டுச் செய்ய நீள் குன்றம் எனப்பட்டது. "வறப்பினும் வளம் தரும் வண்மையும் மலைக்கே" என்னும் மலையின் பெருமை கூறவந்த நன்னூல்; "செம்மேனியம்மான்" ஆதலின் 'செய்ய' எனப்பட்டது. மதி—இங்குப் பிறையாம்;

வரி 353—372

பைஅரவு அணை—விடப்பையுடைய ஆதிசேடன் என்னும் பாம்புப்படுக்கை: "சென்றால் குடையாம்" என்னும் பாட்டு இப்பாம்பின் இயல்பினை இசைப்பது. "பைந்நாகப்பாய்" என்றும் கூறப்படும். ஐது=அழகியதான; நுட்பமான; இஃது அறிதுயிலாதலின் ஐது எனப்பட்டது. ஆழி அம் கையனும் என்றேனும், ஆழி அங்கு ஐயனும் என்றேனும் கொள்க. ஆழி—சக்கரப்படை; பாற்கடல்; நிரை—வரிசையான; தாமரை—உந்திக்கமலம்; முதல்வன் =படைப்போனாகிய பிரமன்; நெருப்பு உறழ்=

நெருப்புப்போன்ற; இதுதிருமேனி நிறம்; பீடு= தேறும் பெருமை; பெட்பு அமை=ஆர்வம் பொருந்திய; நங்கையர்=இலக்குமி யாதியரான மகளிர்; காடு கெழு=காட்டிலே விளங்கி வாழும்; முனிவர் =தவசியர்; கடிதொழில்=திசை காவல் தொழில்; அட்டதிக்குக் காவல்; எண்மர்=திக்குப் பாலகர் எண்மர்; எண் வரம்பு இகந்த=எண்ணிக்கையின் எல்லையைக் கடந்த; எளியர்=ஏழையர்; பிறர்= பிறமக்களாவார்; இன்புவான் = இன்பமாகிய மழையை; வரையா=குறித்து விலக்காத; வளம் =வற்றாத பேரின்ப வளம்; ஒண் முகில்=ஒளி பொருந்திய மேகம்; சடையொளி முதலியன மின் ஒளி யாமாறு கொள்க.

குருந்தடி சுவைத்த=குருந்த மரத்தடியிலே பரமாசாரியனிடம் சுவை பொருந்திய உபதேசம் பெற்ற: பெருந்துறை அன்பர்=மாணிக்க வாசகர்; பவப் பொழுதின் கண்=பிறக்கும் போதிலேயே; சிவச் சொல் முனிவர்=சிவ என்று சொல்லிய சிவ வாக்கியர்; வரம்பில் தொண்டு=எல்லையற்ற தொண்டுகள்; இன்னது நாம் செய்யத் தகுவது இன்னது செய்யத் தகாதது என்கிற வரம்பு இல்லாது; "அவன் எச்சிலை நுகர்ந்தும் ....நாய்க் கட்டம் எடுத்தும்......தேவியைப் பரிவுடன்கொடுத்த பெரிய அன்பின் வரகுண தேவர்" என்பர் பட்டினத் தார். தேவரும்=மற்றைத் தேவர்களும்; "வருந்திய மாதவத்தோர் வானோர் ஏனோர் வந்து ஈண்டி" எனப் படும் பாட்டில். தெவிட்டா=உண்ண உண்ணத் திருப்தி பயவாத; அமுதம்=அமுதமொத்த சிவன்;

காமற்கு = மன்மதனுக்கு ; காலன் = இயமன், சரிதைகள் வெளிப்படை; தேவதேவன் = மகாதேவன்; மூவா = மூத்தலில்லாத ; முதல்வன் = சிவன் ; மடுத்தும் = ஒடுக்கியும் ; விடுத்தும் = வெளிப்படுத்தியும் ; மன்னுறும் = தான் அழியாமல் நிலைத்துள்ள ; தெய்வம் = கடவுளாகியபரமன்; இத்தலத்திறைவன் பெயர் மகாலிங்கம் என்பது; இலிங்கம் என்னும்சொல் மேற்குறித்த பொருளுடையது என்பர். இத்தகைய சிறப்புடைய சிவபெருமான்,—

அடுத்துஉறை = தன்பக்கத்தே வாழ்கின்ற; அரும்பதி = சிறந்த மத்தியார்ஜுனம் என்னும்தலம் ; பதியாகிய திருவிடைமருதூர் எனக்கூட்டுக.

மெய் = உடம்பு அரும்ப = புளகம்பூப்ப ; அலர் தரும் = திறந்துள்ள ; நீர் = ஆனந்தக்கண்ணீர் ; அம்பலவாணர் என = அம்பலவாணர் என்று ; இது சிவத்துக்கும் பெயர் ; பூஜாமூர்த்திக்கும் பெயர் ; இம்மடாலயத்தே எழுந்தருளியிருந்து இங்குப்பூதத்திருமேனியை நிறுத்தியருளிய பரமாசாரிய மூர்த்தங்கட்கும் பெயர் ; இங்ஙனம் பேதமின்றி இப்பெயரமைந்திருத்தல் ஒருசிறப்பு. (இவ்வாறு உருகிஅழைக்கின்ற) அன்பர் = அடியார்கள் ; கருவிடை அடையாது = மீண்டும் பிறப்பெய்தாவண்ணமாக; அருஉருதாங்கி = தமக்குரிய, சகளம் சகளநிட்களம், நிட்களம் என்னும் மூவகையான் திருமேனிகளுள் நிஷ்களத் திருமேனிதாங்கி ; திருவிடைமருதூர் = இஃது இத் தலத்திருப்பெயர் ; திகழ்தல் = விளங்கியிருத்தல்.

V. முடிபு:— கழனிநாட்டது; கழனிக் கண்ணது ; சூழ்வது ; பாங்கது ; சிறத்தது ; இடையது ; சூழ்தர நாப்பண் தெய்வம் அடுத்துறை அரும்பதி

திருவிடை மருதூர் அருவுருத் தாங்கி திகழ்தலும் உரியன் ; அதா அன்று.—

## 6. திரு ஆவடுதுறை.

## வரி 373–377.

முடிபு: மலர், புனல், கனிமதி முதலா கொண்டு புரி தொண்டர் முன்னம் வெளிப்படும் இயல்பினன்.

எழுத்து எல்லாம் = சுருதிகள் யாவும் ; எண்பேர் ஒண்மலர் = எட்டுச்சிறந்த ஒள்ளிய புட்பங்கள் ; தன் நீர் = தன் தன்மை ; (ஓடுதல்) உடை = நெகிழ்ந்த; எல்லா நூல்களும் உயர்த்துக்கூறுகின்ற — (கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு) என்கிற எட்டுவிதமான சிறந்த மலர்களைக்கொண்டு அருச்சித்தலும், தன்னியற்கையான அடங்காமையை விட்டு, இதயத்தரனை நினைவதால் நெகிழ்ச்சி யடைகின்ற உள்ளம் என்கிற குளிர்நீரால் ஆட்டி அபிடேகித்தலும், பாசமயக்கம் முதலியவற்றை உரித்து நீக்கி அமைத்த சுத்தபோத மாகிய பழத்தை நிவேதித்தலும் வாசனை நீக்கசாதன மாகக்கொண்டு இதயம்—உந்தி—புருவநடு—என்னும் மூன்றினும் முறையே பூசையும் ஓமமும் தியானமும்புரிவோரின்விருப்பப்படி அவர்கள் வேண்டுமிடங் களிலெல்லாம் தோன்றும் இயல்புடையவர் (இவ்வாதி மூர்த்திகள்); "அஞ்செழுத்தாலுள்ளம் அரனுடைமை கண்டு" என்னும் பாட்டுக்காணத்தக்கது. "முறுக வாங்கிக்கடைய முன்நிற்குமே" "எங்கே நினைப்பினும் அங்கே என்முன் வந்து எதிர்நிற்குமே" "உந்தவே காட்டாக்கின் சிவன்தோன்றிக் கண் ஆம்" என்பன ஆன்றோர் மொழிகள். சிற்சில

தலங்கள் இங்ஙனம் ஞான பூசனை நிகழ்த்தியவர் விருப்பிற் கிணங்க ஏற்பட்டவையென்ப. முனம் = முன்னம்; இங்ஙனம் பூசிப்போர் முதல்வனை விட்டுத் தனித்து நில்லாத சேட பாவனையாலும், தம்மைச் சேடமாக உடைய சேடியம்முதல்வன் என்றபாவனையாலும் அடிமையாகின்றார்கள். இவர்கள் சிவோகம் பாவனையர். ஒண்மதி—போதம்; இறைவன் தடத்த நிலை—உயிரின் தடத்தநிலை—இவை மாறி அவ்விரு பொருள்களின் சொரூப நிலையாகிய ஐக்கியத்தை இப்போதாந்தம் விளைவிப்பது.

## வரி 378—379

முடிபு:— வந்து, வந்து, வாழ்த்தும் அவர்க்கும் தருவோன்; அலம் வந்து = வருந்தி; தலம் = உருவத் திருமேனிதாங்கியெழுந்தருளியுள்ள இடம் பிறப்புத் துன்பத்துக்காக நெஞ்சம் அஞ்சி வருத்தப்பட்டு, அதனை நீக்கும் நாட்டமுடையராய் வலம் வந்து திருவடிகளின் கீழே விழுந்து வாயார வாழ்த்தும் பொருட்டுத் தானெழுந்தருளியிருக்கும் தலத்தினிடமாக வருபவர்கட்குப் புறக் காட்சி தந்து, பின்னர் அகக் காட்சிக்கு விஷயமாகும் அருளைப் புரிபவன்; வலம் வருதல்—நம் அடிகட்குரிய வேலை; அடிபணிதல்—நம் முடிக்குரிய கடமை; அலமாத்தல்—நெஞ்சுக்குரிய தொழில்; காட்சி தருதல்—இறைவனருள். இவ்வெல்லாம் ஒன்றுகூடுவது இவ்வித வழிபாட்டின் கண் என்க.

## வரி 380—381.

முடிபு:— புண்ணியர் பூசனை உகப்போன்; திண்ணிய = திணிந்த; கண்ணப்பர்—காளத்தி

நாதர்க்குக் கண்ணவித்த அன்பர்; புண்ணியர் = பூர்வ சிவபுண்ணிய முதிர்வுடையோர்; உகப்போன் = அங்கீகாரம் செய்து கொண்டருளுபவன். இனித் திணிக்க இயலாவண்ணம் நிறைந்த அன்பு திண்ணிய அன்பாம்; கண்ணப்பர் கதை வெளிப்படை. "வாளா பொழுது கழிக்கின்றார் மானுடவர்; கேளார் கொல் அந்தோ கிறிபட்டார்—கேளாடை—அண்ணற் கணுக்கராய்க் காளத்தியுள் நின்ற—கண்ணப்பராவார் கதை"—நக்கீரர். "என் அன்புடைத் தோன்றல்" என்று சிறப்பிக்கப் பட்டமையின் அன்பின் கண்ணப்பர் எனப்பட்டது. "திருக் கண்ணப்பன் செய்தவத் திறத்து விருப்புடைத் தம்ம விரி கடல் உலகே" என்பது அவர் புண்ணியம் தோற்றும். இத்தகைப் புண்ணியர் பண்ணிய யாவும் தன் செயலாகவே கொண்டுகக்கும் இறை.

## வரி 382—386.

முடிபு:- நீங்கா நிமலன்; அமர்ந்துறை ஆசான்; இதயன். நிலைதிரி = தம்நிலைமைமாறுபட்ட; இதயன் இதயத்துள் இருப்பவன்; மலையிடமும், காட்டிடமும், கடலிடமும், வயலிடமும் முல்லையும் குறிஞ்சியும் தத் தம்தன்மை கெட்டமைந்த பாலையிடமும் ஆகிய இப் பூமண்டலத்திலே எங்கும் நீக்கமின்றித்தங்கியுள்ள நின்மலமூர்த்தி; "கடலும் மலையும் ஆகிய கண்ணுதல்" என்பர் பெரியோர். இப்பூமியின் எப்பகுதியி லும் இவன் உள்ளவன்என்பது குறிப்பு. நிலைதிரிந்த பாலையிடத்தும் நீங்காதிருப்போன் என்றமையால் நிலையின் இழிந்தாரையும் கைவிடாதவன் என்பதுண ரலாம். இயல்பாகவே மலரகிதன்; சாரப்பட்ட பொருளிடத்துக் குற்றம்தன்னைச் சாராதிருப்பவன்;

எல்லாஉயிருள்ளும்தங்கி அவற்றை இயக்கிநடத்தும் ஆசாரியன்; "உள்குவார் உள்கிற்றெல்லாம் உட னிருந்து" அறிந்து நெருஞ்சில்நீங்கிய நெறிகாட்டுங் கண்போல் உபகரிப்பவன்; ஆதலால் ஆசான்எனப் பட்டார். நல்ல உள்ளக்கனிவினைக்காட்டி, இறை யருளால் விளைந்தசொற்கொண்டமைத்த கவிமாலை களைச்சூட்டி, நாடோறும் வழிபாடுசெய்பவரிதயத் தில் மெத்தென்றமர்ந்து மகிழ்பவன். இவர் தம் வித்தை இறைவனுக்கு மெத்தைஎன்க. எல்லாச் சொல்லும் தன்னையே குறித்தலால் பொருளாகிய தான்நீங்காதுறைபவனுயினுன். கனி=கனிவு; பழம்; கலைஞானத்தால் நல்வழியறிந்தொழுகுபவராதலின் நல்லவர் எனப்பட்டது. "ஹார்த்தன்" எனப்பிறர் கூறுவதும் இதுகுறிக்கும்.

## வரி 387—397

முடிபு:— வெளியன்; அளியன்; அரியன்; பெரியன்; சிறியன்; பேரிலன்; ஊரிலன்; உறை விடன்; என்னல் வரைத்து அன்றே; குற்றி= நடுதறி; குறுங்கல்=சிறியகல்; நுதி=முனை; படை=சூலம் முதலிய ஆயுதம்; நத்தி=விரும்பி; வளன்=நீர்வளம்; கா=சோலை; மன்று=சபை; திடர்=மேட்டு நிலம்; தரு=மரம்; தொகு=கூடு கிற; தடம்=இடம்; சந்தி=முச்சந்தி; சதுக்கம்= நாற்சந்தி; எந்தை; என் தந்தையாகிய நமச்சிவாய மூர்த்திகள்; இல் இடம்=இல்லாத இடம்; இன்மை யின்=இல்லாமையால்; வெளியன்=வெளிபோலு மிருப்பினன். அளியன்=அருளுடையவன்; அரியன் =காணப்படாதவன்; உறைவு இடன்=தங்குமிட மாயிருப்பவன்; இன்னன்=இப்படிப் பட்டவன்;

என்னல்=என்று அளவிட்டுச் சொல்லுதல்; என் வரைத்து அன்றே=என்சொல் வரம்பினதாகாது. எவரெவர் எங்கெங்கு எவ்வெப் பொருளின் வடிவாகக் கருதி வழிபடுகிறார்களோ அங்கங்கும் அவ்வப் பொருளாகி அருள் புரிபவன்; குழந்தை எங்கே யிருந்து விரும்பியழுது அழைப்பினும் அம்மையப்பர் அங்கே விரைந்து வருதல் கண்கூடாம். குளக்கரையில் ஞானசம்பந்தர்க்குக் காட்சியளித்தமை முதலன சான்றும். "யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகியங்கே — மாதொருபாகன் தானேவந்தருள் புரிவன்" என்பர் அருளுடையோர். "செப்புதற்கரியாய்போற்றி" என்று செப்பப்படுதல் அருமைப் பாட்டினை புலப்படுத்தும். ஆழிமுழுதும் நாழியால் முகத்தலரிதுபோலப் பேரிறைப்பொருளைச் சிற்றுயிர்கள் முற்றுமுணர்த்துமாறில்லை.

## வரி 398—404.

முடிபு:- வண்ணம் அமைத்துநாட்டி காட்டி ஆட்டி நாற்றி ஊட்டி வீட்டி சூட்டி புனை புனிதர் மடங்கள் வாழ்வோன்;

வேதாகம முறைப்படி விசாலமான இடத்தைத் தேர்ந்து ஆங்கேபடங்கொள் உருவேனும், சிலையுருவேனும் உரியவகையோடு தாபித்து, தூபம் முதலிய உபசரணைகள் விருப்பத்துடன் தம்கையினாலேயே பண்ணி, திருமஞ்சனம் செய்வித்து மாலை தரிப்பித்து, அறுசுவையமுதமும்படைத்து, ஆசைநீக்கி, தம்முடைய முடியைத் திருவடிக்கண்ணேவைத்து வணங்கித் திருநீறு தீற்றிடுகின்றமாசற்ற துறவியர் வழிபாடு செய்யாநின்ற மடாலயங்களெல்லாம் தனதிடமாகக்கொண்டு என்றுமிருப்பவன்; ஆகமநூல்கள்

கோயிலமைப்பு முறைகூறும். படத்திற்றீட்டிய உருவு, அல்லது சிலேயிற்செதுக்கிய திருவுருவம்என இயல்புக் கேற்றவாறமைத்துக்கொள்ளல் கூடுவது. உலகம் தன்னைப் பின்பற்றியொழுக நிற்பதாகலின் பூசனையை—தூபதீப நைவேத்திய அலங்கார ஆரத்தி களேத் தன்கையினுலேசெய்து காட்டுதல் பெரியோர் வழக்காம். சிவமே தன்னைத்தான் பூசித்தலும் இக் கருத்துணர்த்தும். நமக்கு இறைவன் தந்தபொருள் களே நாம் அவனுக்குக் காட்டிக்கொள்ளுதல் முறை மையுடைத்து. காட்டாதனுபவித்தல் கவர்தலே நிகர்க்கும். ஆதலின், கைகாட்டி எனப்பட்டது. படமாயின் நறும்புகை தொடக்கம்; சிலேயாயின் மஞ்சனம் தொடக்கம்; நாற்றி = தொங்கவிட்டு; "ஆசையறுமின்கள் ஆசையறுமின்கள்—ஈசனேடா யினும் ஆசையறுமின்கள்" என்பராகலின் ஆசையைவிட்டி என்று கூறப்பட்டது. உயிர்க்குயி ரான இறைவன் நமக்கு வேண்டுவனதானே அறிந்து தருவன் என்பது துணிபாம். ஆசையுடன் செய்வது காமியமாம். ஆசையின்றிப் புரிவது நிஷ்காமியமா மென்க. பொடி—திருநீறு; இது பிரசாதம். பொடி புனைந்தபின்மேலும் பரிசுத்தராதலின் புனிதர் எனப் பட்டது. சரியை முதலிய நான்கு சாதனங்களேயும் மக்கட்கு அறிவுறுத்தும் இடமாகலின் மடங்கள் கூறப்பட்டன. ஆங்காங்கும் நினைப்புவகையாலும், பேச்சுவகையாலும், காட்சிவகையாலும் இம்மூர்த்தி தான் இடங்கொண்டருள்வதென்க. பூசனைக்காக இராமல் எப்போதுமிருப்பான் ஈசனுகலின் வாழ் வோன் என்றுரைக்கப்பட்டது. வீட்டி = தள்ளி; இருக்கு = வேதம்; "இளக்குமிடியற்குறுபொரு ளாம் இறைவர்க் கரசாம்; கூற்றுவனை விளிக்கும்

பிணிக்குமருந்தாகும் விடத்திற் கருஞ்சீர்க்கலுழனும்; வளைக்கும் பகைக்குப்படையாகும் மலடர்க்கரிய மகவாகும் ..... திருநீறே" என்பது சிவஞானிகலம் பகம்.

## வரி 405—406.

முடிபு: வீண்என உயர்த்த மன்னிய சிவம்; விண்ணே—ஆனிலையுலகம்; களிக்க=மகிழ; இருந்திடல் = ஆங்கே அமர்ந்திருத்தல்: வீண்என= பயன்படாச்செயலென (எண்ணி) மண்ணே=மண்ணுலகமக்களை, உயர்த்த=மேலேற்ற; மன்னிய= வந்திங்கிருந்தருளுகின்ற; சிவமே=சிவப்பொருளே யாவான். இவன் சிவமே யாவான். பரமுத்தித் தானத்தே தானிருத்தலால் ஆண்டொன்றியவுயிர்க்கு ஏதும் பெரும் பயனில்லை யென்பதை எண்ணியே, இவ்வுலகமக்களை (கீழே உள்ள கிணற்று நீரைமேலே ஏற்ற ஏற்றச்சால் கீழே இறங்கிவருமாறு) மானிடச் சட்டை சாத்தி (நமச்சிவாய)ப்பெயரொடும் இங்குள்ள திருமடத்தே கோயில் கொண்டுள்ளான் என்க. "என்பொருட்டே பிறவாநினக்குப்பிறப்பு" என்றுளர் பெரியர். எனவே சிவமே தமக்குரிய தக்கிணாமூர்த்திச்சொருபமாக ஈண்டெழுந்தருளி யிருப்பதென்க. புகழுடைதற்கான கொடுப்பாரும் கொடைத்தொழிலும் ஏற்பாரும் இல்லாத விண்ணுலகம் அவை உடைய மண்ணினும் இழிபுடைய தெனக் கூறப்படும்.

## வரி 407—408.

தனக்கு இயல்பாகஉள்ளவிரிந்த சடாபாரத்தை இப்போது மறைத்து வந்துள்ள குருவாயிருப்பானு யினும், தாங்குதலாகிய தொழிலை மறைத்துவிடாமை

தெரிவித்தற் பொருட்டுக்குளிர்ச்சியான மலர்முடியினைத்தாங்கிய திருமுடி உடையவன். இஃது உறுப்பினை மறைப்பினும் அதன் தொழிலை மறைக்க இயலாமை உணர்த்துவது. இதனால் யாவரையும் தாங்குந்தொழிலைச்சிரசாகவகிப்பவன் எனக்கொள்க. விகிதன் = விகிர்தகுரு; பரமாசாரியன், இதுமுடி கூறியவாறும்.

### வரி 409—410.

மன்மதன் வெந்தொழியவல்ல கனற்கடுமையை வெளியிடும் நுதற்கண்ணைப்பண்டுடையபரமனே தானாவதை உணர்த்துதற்பொருட்டு நெற்றியின் கண் இருக்கும் அக்கண்ணினை மறைத்துணர்த்துகின்ற விபூதியணிந்த திருநெற்றியுடையவன். இதனால் காமனைவெல்லும் இயல்பு மறைக்கமுடியாதவன் என்பதுகருத்து. இது, துறவியாதலின் பொருந்துவதாகும். எனவே காமம் இல்லாதவன் என்பது குறிப்பாம். "மற்றை நம்காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்" என்றாற் போலத்தன்னை வணங்குவோரின் காமாதிகளென்னும் காட்டைச்சுட்டெரித்துதவுபவன் என்பது தேறலாகும். குறித்த = காட்டிய அனற்பொடி = வெந்த நீறு;

### வரி—411.

கேவலநிலை என்கிற இருட்டினைப் போக்கவல்ல விழிகளை உடையவன். இறைவனது சந்திர சூரியரென்கிற விழிகள் இருட்டைப்போக்குவன. அதுபோலவே இவ்வாசானது திருநோக்கம் கேவல இருளை யொழித்ததருளவல்ல தென்க. கங்குல் = இரவு; இருட்டு; "காரிட்ட ஆணவம்" என்பதுமது.

வரி—412.

இருவிழிகளுக்கும் இடையே நின்று உயிர்த்தல் என்கிற ஒரேதொழிலைக் குறிக்கொண்டு புரிகிற; எள்ளினது மலர்போன்ற நாசியை உடையவன். பரமனுக்கும் ஜீவனுக்கும்இடையே ஆசானாகிநின்று அத்துவிதத்தன்மையை நம்மனோர்க்கு எடுத்துக்காட்டிப் பூவுலகசுகங்களை எள்ளும்படி குறிப்பிக்கின்ற நாசிஎன்க. இரண்டுதுளைகளும் ஒரு நாசியாயிருப்பது கருதுக. எட்பூ = எள்ளினதுமலர்; பூமியை ஏளனம்செய்;

வரி 413—414

அற்பர்களைப் புகழாது உண்மையே மொழிகின்ற புலவர்களுடைய நல்ல இசைபொருந்திய கவிகளை ஏற்றுக்கொள்ளு மியல்பினவாகிய விளங்குகின்ற குண்டலமணிந்த திருச்செவிகளை உடையவன். "பொய்யாகூறிக்கிளத்தல் செய்யாஎம் சிறுசெந்நாவே" என்பது வன்பரணர்கூற்று. இதுபுலவர் நாவின் இயல்பாம். இறைவனை ஏதுவிதம் சொல்லினும் அதுஉண்மையாகுமன்றிப் பொய்யாது. எப்படிப் புகழினும் ஏற்கும். மிகைசொல்வதாகாது. "புகழ்ச்சி விருப்பன்போலும்" என்பராகலின் புகழ்தல் புலவர்கடனாமென்க. நகு=விளங்குகின்ற; குழை= குண்டலம்; காதணி; "குழைநக்கும் பிஞ்ஞகன்" என்பர்.

வரி 415—416

எவரிடத்தும் சிவமாயிருந்த நிலையில்பலியிரத்தல் செய்ததொழிலை அடியோடுநீக்கி எவருக்கும் ஈயும் இயல்பொன்றே தன்பாலிருப்பது வெளிப்பட, யாவரையும் ஓம்படைசெய்யும் ரக்ஷகமொழிக் குறிப்பாகப்

புன்முறுவல் செய்யும்வாயினன்என்க. இம்மடம் எவரிடமும் ஏற்பதில்லை என்ற நியமமுடைமை ஈண் டறியத்தக்கது. "கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்" என்பர் ஆன்றோர்.

வரி 417—418.

**"கோபித்தல்தவறு"** என்பதை உணர்த்துங்கருத் துக்கொண்டது போலும் கறுப்புநிறமுள்ள விஷக் கறையைக் கழுத்தினிடம் தெரியாவண்ணம் மறைத் துப்பிரகாசிக்கின்ற திருக்களமுடையவன். "சின மென்னும் சேர்ந்தாரைக்கொல்லி" என்னும் குறட்பா சிந்தித்தற்குரியது. கருத்தின் உறைவிடம் நெஞ்சம் என்க. கவினொளி = அழகியபிரகாசம்; மிடறு = கண்டம்;

வரி 419—420.

சிவமாயிருக்கையில் பிரமகபாலமாலை தோளில் புரளுவதைப்பார்த்துத் தன் கணவனது நிலை கேட்டி னுக்கு நாணி நாமகள் அஞ்சினள். இப்போது அக்க பாலமில்லாது ரக்ஷைக்குரிய உருத்திரகண்டிகை தோளில் கிடப்பதால் நாமகள் அச்சமில்லாது போற் றுகின்றுள் என்க. புலவர் நாக்கொண்டு போற்று வதே நாமகள் போற்றுவதெனப்பட்டது. "தற் கொண்டான் பேணும்" தகைமை தன்பாலில்லாமை பற்றி நாணம் விளைவதென்க. சேமம் = ரக்ஷை; புயம் = தோள்;

வரி 421—422.

பன்றிப் பல்லினை அணிந்திருப்பது இபபோது தூய்மைகுறியாதெனக்கருதி அதனை எடுத்தெறிந்து விட்டு உருத்திரமணிகளாலாகிய ஒளி பொருந்திய

தாழ்வடங்களைத் தழையத்தொங்கவிட்டுள்ள விசால மான மார்பினை உடையவன்; ஏனம் = பன்றி; தாமம் = ஒளி தெரியல் – மாலை; மார்புக்கு விசால முடைமை சாமுத்திரிகாலக்ஷணவிதி; சிவமாயிருக் கையால் ஏனமருப்பு அணிந்திருந்தார் என்க.

வரி 423—425.

நாதனையும், தன்னையும், இடையேஉள்ள தடை யினையும் (பாசத்தையும்) உணராத மாந்தர்களுடைய வேதனைகளை நீக்கும் ஞானத்தைத் தெரியச் செய்ய வல்ல "சிவஞான போதம்" என்னும் நூலினையும் சுமந்து, அதன் கண் உள்ள சிவனும் சீவனும் ஒன்று படும் நிலையைக் குறிப்பாற் காட்டி விளங்குகின்ற திருக் கரங்களை உடையவன். வலக்கை = சின் முத் திரை காட்டுவது; "சின்முத்திராங்குசச் செங்கைக் குளே அடக்கி" என்பர் தாயுமானூர். சுமக்கும் கரத் தன், குறிகரத்தன் என ஒட்டுக.

வரி 426—427.

வெவ்வியல் = கொடிய தன்மை; உரி = தோல்; உடாது = உடுத்தாமல்; செவ்வியல் = செம்மைப் பண்பு; துவருடை = காஷாய வஸ்திரம்; மருங் கினன் = இடை உடையவன்; யாவரும் அச்சமின்றி நெருங்கி நடுநிலையான நன்மைப் பேறெய்தலாகும் என்பது குறிப்பு.

வரி 428 – 429

தன்னைச் சரணடைகின்ற அடியார்களின் சிர சுக்கு ஆபரணமாகின்ற சிவந்த தாமரை தாங்கும் திருவடியுடைய சித்தர். சித்தர் சிவப்பிரகாசர் இத் தேசிகமூர்த்திகளை இத்திருப்பதியிலிருந்தருள் செய்ய

வைத்த செயல் நினைக்கத்தக்கது; சித்தன் = சித்தி பெற்றவன்; சித்தி தருபவன்; ஞான மூர்த்தி;

வரி 430—431.

நீறு பூத்த நெருப்பின் தோற்றம் போன்று உத்தூளனமாக அணியப்பெற்ற திருநீறு பூசப் பெற்றுள்ள சிவந்த திருமேனியுடையவன்; இதுவும் சிவத்துக்குள்ள அடையாளமாகும். பவளம்—சிவந்த நிறங் குறிக்கவந்த உவமை.

வரி 432—439

அஞ்சக்கரத்தன் = பஞ்சாக்கரதேசிகர்; இவரே மும்மூர்த்தியுமாயவர்; அம்சம் — அன்னப்பறவைக் கொடி; கரத்தன் = கையிற்கொண்ட பிரமன், (அல்லது) அம் = அழகிய; சக்கரத்தன் = சக்கரப் படையுடைய திருமால் என்பதும் ஒன்றும். அஞ்சு + அ + கரத்தன் = காண்போர் அஞ்சத்தக்க அவ்வகையான கைகளை உடைய உருத்திரன்; அணி மலை = அழகிய திருக்கயிலாயமலையில் விளைகின்ற; மருத்தன் = மருந்தாயிருப்பவன்; (அல்லது) வயித்தியன்; நெஞ்சத்து இருள் = மனத்தின்கண் உள்ள அஞ்ஞான இருட்டை; கடி = நீக்கும்; கதிரோன் = ஞானபானு; நிமலம்—குற்றமின்மை; சாதாரண சூரியன்"; பொழுதென வரைதி! புறக்கொடுத் திறத்தி! மாறிவருதி! மலைமறைந்தொளித்தி! அகலிருவிசும் பினும் பகல் விளங்குதியால்" எனக் கபிலர் கூறிக்காட்டும் குற்றங்களுடையது. நம் தேசிகமூர்த்தி அவ்வகை ஏதம் ஏதுமற்றவன் என்க. ஆதலின் "நிமலக்கதிரோன்" என்றும். செஞ்சொற் புலவர்கட்கு அழியாத செல்வ நிலையம் ஆனவன். இங்கு இவ்வாதீனத்துப் பெரும் புலவர்களை

யெல்லாம் கருதுக. எண்ணற்ற புலவர்களை இவ்வாதீனம் ஆதரித்து வருதல் மலையிலக்காம். இவ்வாறாக அடியேன் அறிந்தவரை சொன்னேன்; அத்தகையவரைச் சார்ந்து, ஒன்றைக்குறித்து விரும்பும் உள்ளத்தையும் ஒடுக்கித் தண்டாகாரமாகப் பூமி மேல் வீழ்ந்து வணங்குவையாயின; "சார் புணர்ந்து சார்புகெட ஒழுகின்" என்றகுறள் இங்கு மனங்கொள்ளத்தக்கது. திருக்களிற்றுப்படியார் இக்குறட்பொருளுரைக்கும் தெய்விகம் குறிப்பதாகும். வாரணப்பரிசு = பரிசதீக்ஷை; ஆமையின் வண்ணம் = பாவனாதீட்சை; மீனுடைநோக்கு = சக்ஷு தீட்சை; "பரம்பிரமமிவனென்றும் ........ அருட்குருவை வழிபடவே அவனிவன் தானாயே இரங்கிய வாரணம் யாமை மீனண்டம் சினையை இயல்பினொடும் பரசித்து நினைந்தும் பார்த்தும் பரிந்திவைதாமாக்குமாபோல் சிவமேயாக்கும் பரிசித்தும், சிந்தித்தும் பார்த்தும் தானே" என்பது சித்தியார் சுபக்க இறுதிச்சூத்திரம். மற்றும் யானைப் பரிசு; அமையவேண்டிய அழகுக்கான ஆபரண வகைகள், ஒளிபொருந்திய பிறநோக்கமுள்ள பொருள்கள் எனச்சாமானியரீதியினும் கொள்ளல் கூடும். மீன் உடை = மின்னும் வஸ்திரம்; பீதாம்பரம்; நோக்கம் = கண்கவர்வனப்பு; வைத்தகண் வாங்காமல் பார்க்கும் அழகு மிகுத்தே = மிகுதியாகச்செய்தே; செம்பொருள் = சிவம்; செவ்வியின் பக்குவகாலத்தில்; நன்றாக; "செந்நெறிக்கேசெலுப்பானை" என்பர் அப்பர். செய்யனை = இத்தகைய சிவத்தினை;

வரி 440—486.

இவ்வடிகள் இம்மூர்த்திகட்கான அருச்சனை வாசகத்தாற் போற்றுவனவாம். ஊழி = இறுதிக் காலம்; ஒண்மலை = திருக்கயிலைவரை; விடை = இடபம்; துவச = கொடியுடையோய்!; அருமறை = அரியவேதம்; மதவலி = வேழம்; "இருகைவேழத்து இராகவன்" என்றாற்போல்வது. எண்கை = எட்டுத்தோள் ஏந்தல் = தாங்கத்தக்கவன்; தீயி யினுள்தெறல் = நெருப்பினுள்உள்ள அழிக்கும்வலி மையே! கல்லினுள்மணி = கற்களில் மேம்பட்ட இரத்தினமே! (இரத்தின சபாபதிஎன்ற இடத்துப் போல); சொல்லில் சிறந்த சத்தியம்; "யாமெய்யாக் கண்டவற்றுளில்லை" என்னும்குறள் ஒப்பிடுக. மைந்து = வலிமை "திறக்கடல்நீயே' என்றாற்போல் வது; ஒளியே = சோதியே! "ஒளியான திருமேனி" என்ற உரைபோல்வது; மாற்றவர் = பகைவர்; சால்வ = சகலகுண சமபூரண! சமர = போரில் வல் லோய்! எமை ஆள்மரப = எம்முடைய பரம்பரையை ஆள்கின்ற முதல்வனே!

வித்தகச்சமய = ஞான சமயமான சித்தாந்த சைவ சமயத்தவ! ஏதம் = குற்றம் தமிழின் தந்தை = தமிழ் மொழியைத் தந்தருளிய தகப்பன்; (சிவன்); "இரு மொழிக்கும் கண்ணுதலார் முதற் குரவர்" என்னும் மொழி கருதுக. இத் திருமடமே தமிழிலக் கியக் களஞ்சியமாயிருப்பது. தமிழ் வளருமாறு தமி ழிலக்கியங்களைத் தந்தருளியது; சிவஞான போதத் தைத் தமிழால் தந்தருளிய சிறப்புடையது. இங்ங னம் தமிழிலக்கியமும் சமயமும் நாளும் வளர இடஞ் செய்து வருவது நன்றியொடு கருதத்தகுவது. இமிழ்

=சப்திக்கின்ற; கலை=சாஸ்திரம்; நாடுநர்=விரும்புபவர்; தருவே=மரம்போலும் நிழல் தருபவனே! "தருவை அடைதலும் தன்னிழல் நீங்கப் பெறும் சிறப்பு இங்கு சிந்திக்கற் பாலது" உள் எழுமதி= உள்ளே தோன்றும் சந்திரனே! "ஆயிரங் கிரணப் பேரருள் தண்மதி அலர்ந்து குமுதம் அடங்கலும் பருகி" என்பது கருதலாகும்; அடியவர்க்கடியன் என்பது வெளிப்படை; நாடக=ஐந்தொழில் நாடகம் நடிப்பவன்; நம்ப=நம்பி அடையத் தக்கவன்; அணியை=சமீபத்தில் இருப்பவனே!; நணியை= நண்ணத் தக்கவனே; சேய்மைய = தூரத்தில் இருப்பவனே! "சித்தமும் செல்லாச் சேட்சியன் காண்க" என்பதும் இது குறிக்கும்; ஐய=அழகனே; தலைவனே; தா அய்=அன்னை; "அன்னை ஒப்பாய்" என்பர்; ஆழி=சக்கரப்படை; பாற் கடல்; வரலாறு தெரிந்தவை; அரசு கொடுத்தோய் —அரச பதவியை அளித்தவனே! "எண்ணெய் உண்ண எண்ணுபு வந்து நந்தா விளக்கை நுந்துபு பெயர்த்த தாவுபுல் எலிக்கு மூவுலகாள நொய்தினில் அளித்த கைவளம் போற்றி" எனப் பாராட்டினர் பட்டினத்தார்; பரிகலம்=சேடம்; (சண்டேசுரர்); படை முதல்=பாசுபதம் (அருச்சுனன்); நாத+ அதீத=நாத தத்துவத்துக்கும் அப்பாற்பட்டவனே!; உரு ஒலிக்காய=ஒலி உருச் செய்யும் ஆகாசம்; ஒடுக்கிடும் மருத்தே=ஒடுக்கும் திறலுடைய காற்று; பரிதி=சூரியன் (தேயு); பகவ—அறுகுணமுடையவ! "ஆதி பகவன் முதற்றே உலகு" என்பது குறள்; நமச்சிவாய=தேசிக மூர்த்தியின் திருப்பெயர்; இதில் ஐந்தெனும் எவையும் அடங்கும். இதுகாறும் 108

அருச்சனை நாமங்களாக நவிலப்பட்டுள்ளமை கொள்ளுக.

வரி 487—488.

எனவே=என்றிப்படிச்சொல்லி; புளகம்= மெய்யரும்பு; புடையே=பக்கங்களிலே; புனிதர்= தம்பிரான்மார்; அடியர்; இறைஞ்ச=வணங்க;

வரி 488—504.

488—இறைஞ்ச, 495 - பதி நடுவண் 499—மட மாடத்துள்; 502 சுப்பிரமணியக் குரவன், 503— உலகம் உய்ந்திடற்கு உளுற்றும் 504—பூசனை என முடிபு கொள்ளுக.

489 முதல் 495 வரை திருவாவடுதுறைப்பதியின் சிலசெப்பரும் சிறப்புகள் தரப்பட்டுள. உமை ஆன்—உமையாகிய பசு இது ஆ அடுதுறை என்னும் பெயர்க்கேற்ற செயலாதலின் முற்கூறப்பட்டது. மாசிலாமணி = ஒப்பிலா முலையம்மை என்பன இத்தலத்துச்சிவம் சத்திகளின் திருநாமங்கள்; போகம் = போகநாதர்; மாளிகை = திருமாளிகைத்தேவர். சிவபோகத்தை விரும்புவார்க்கு அளிப்பதற்கே வளர்கின்ற ஆனிலைமாடம்உடைய திருமாளிகைத்தேவர் எனலும் பொருந்தும். போகம்=பரபோகம்: திருமந்திரம் ஓதித்தெளியின் பிறப்புஒழியும் என்பது கருமூலம்தவிர் என்பதன் கருத்து. பெருந்தவமன்னர்=முசுகுந்தசக்கரவர்த்தி; வரலாறு வெளிப்படை; போதி=போதியம்பலம்; அரசமரம்; விடை=இடபம்; அரசின் அடிநிழலமர்ந்து அசைபோடுகின்றதென்க. புணர்=சேரப்பெற்ற; பதி= ஊர்; தேவபரம்பரை; பூதபரம்பரை — அபிடேக பரம்பரை என்னும் மூன்றுக்கும் ஆதியாகும் நீதி

யானது ஒருங்கே அமையப்பெற்ற சிறப்புடையது திருக்கயிலாயம்; இது திருக்கயிலாய பரம்பரை கூறுவது. இங்கு எல்லாக் குருமூர்த்தங்களையும் சிந்திக்க!; உயர்கோடு=உயர்ந்த சிகரம்; திருக்கயிலாய பருப்பதமே தன்னிடமுள்ள தலைவன் (சிவம்) நமச்சிவாய குருமூர்த்திகளாயினமைக்கு ஏற்பத் தானொரு மடமாட மாளிகையாகி இப்பதியின் நடுவே சமைந்ததெனக்கொள்க. "கயிலை நடந்தனைய நந்தி பிரான்" என்பதுபோலக் கயிலை இருந்தனைய மாடம் என்க.

வரி—500

வரு பத்தியினரை=வருகின்ற பக்திமான்களை; வருகின்ற வரிசையினரை எனினும் ஆம்; பத்தி= வரிசை; இரு பத்தி ஒன்று என=ஒவ்வொரு வரையும்; இரு=ஈங்கிருக்க! பத்தி = பக்தியாலே (அ) பற்றிக்கொண்டு; ஒன்று=ஒன்றுபடுக (சுத்தாத்துவிதப்படுக) என்றுபதேசிக்கின்ற எனப்பொருள் படுத்துவதுடன் இந்நூலை இயற்றுமாறு திருவருளாணை தந்தருளிய இப்பரமாசாரியர் இப்பீடத்து இருபத்தொன்றும் வரிசையினர் ஆவர் என்பதும் தொனிக்கக் கொள்ளுக. அடியாரோடிருத்தலும், பத்திப்பணிவிடையாற்றலும் பரமுத்திபயக்கு மென்பதே இவ்வுபதேயப்பொருளாமெனப் போதநூலின் இறுதிப் பகுதியால் தெளியப்படும். தெருளுறுத்து=ஞானத் தெளிவுண்டாக்கி; இஃது இந்நூல் இயற்றப்பட்ட காலம் களம் காரணம் முதலன கூறும் பயனுடையது இப்புவிக் குரவன்=இவ்வுலக குருவாமவன்;

குறிப்பு:—சித்தாந்தசைவம் உலகினர் யாவரையும் அகப்படுத்துப் பெருஞ்சமயமாதலின் இச்சமய குரவ

ராகிய இவரும் உலக குருவாக ஓதப்படுதல் மிகை யன்று. இங்குள்ள திருப்பெயர் தற்போதைய குரு மகாசந்நிதானத்தின் திருநாமமாகும். நமச்சிவாயத் தின் பேறனைத்தும் சுப்பிர மணியத்துக்கு உரிமை யாய்க்கிடத்தல் முறைமையுடையதே என்க விநாய கத்துவம் பூண்டுள்ளமையால்.

வரி 503—504.

உலகம் உய்யவேண்டு மென்னும் மிகப்பரந்த நோக்கமே இம்மடாலயத்து நிகழ்த்தப்படும் பூசனை யின் பயன் என்க. என்றும் = எந்நாளும்; உஞற் றும் = தளராது (முட்டின்றி) செய்யும்; ஈசனாராகி = தலைவராகி;

வரி 505—506.

இவ்வடிகள் இம் மடாலயத்துக் கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் ஆன்மார்த்த மூர்த்தங்களின் திருப் பெயர்களைக் குறிக்கும்;

வரி 507—509.

மருவி—ஒன்றுபட்டு; கூடி; தற்பரம் = சிவம்; ஆகி 507, அமர் தருவோனே 511 முடிக்க. பஞ்சாக் கர மூர்த்தி என்பதும் திருநாமமெனக் கொள்க. இப் பெயர் ஐந்தெழுத்தாலமைந்தது. இம் மூர்த்தி கட்குமட்டும் இங்ஙனம் ஐந்தெழுத்தாலமைந்த பெருமையோடமையால், இப் பதியும ஐந்தெழுத்தா லமைந்த பெயரையே உடையது கருதத்தகும். ஆவடு துறை—ஐந்தெழுத்தாலானது காண்க. ஆ அடுதுறை எனினும் ஆம்; இப் பெயரும் முறையே பசு பாசம் பதி எனப் பொருள்படக் கிடப்பது போற்றத்தகும். பஞ்சாக்கர மந்திர மொழியும் பசு பதி பாசம் தெரிப்

பது என்ப. எனவே 509 ஆம் அடிச் செய்தியை ஊருக்கேனும், ஊரனுக்கேனும் ஏற்றிக் கொள்ளல் இயையும்; நினைத்தாலே முத்திபயப்பவன் இப் பரமாசாரியன்; நினைப்பினும் முத்தி பயப்பது இக் கோமுத்திநகர். செல்ல இயலாவிடினும் இருந்த இடத்திருந்தேனும் சிந்தித்தலே போதும் என்பது 509 ஆம் வரி புலப்படுத்துவது. சுரக்கும் என்ற சொல்லை முற்றாகக் கொண்டேனும், எச்சமாகக் கொண்டேனும் பொருள் கொள்க.

வரி 510—511.

"மேனுளில் மானிடம் பாடிய நாச்சுத்தம் மேவு தற்கு நாஞ்சையாற்பரவினேன்" என்பது போன்ற கருத்தமைந்தது இவ்வரி. இப்பதி— (தலைவன், ஊர்) புகழ்வோரது நாவின் பாவமும் அகலும் என்க. நாவாகிய அலர்கொண்டு பூசிப்பவர் நாவலர் எனினும் ஆம், ஆவடுதண்துறை—இது இத் திருப்பதியின் பெயர்; அமர் தருவோன் ஏ = என்றும் எழுந்தருளி யிருப்பவன்; (அ) துறையின் கரையில் அமர் = நிலைத்துள்ள; தருவோன் = கற்பகத்தருவா யிருப்பவன்; வணங்குவார் பாசத்தை அமர்தந்து போக்கியருளுபவன் எனவும் கூடும். அமர் = வீடு; முத்திப்பேறு; எனலும் பொருந்தும்; அமர் = விருப் பத்தை; அபீஷ்டத்தை; என்னலாம். ஏகாரம்— அசை நிலை; புகழ்பவர் எல்லாப் பேறும் எய்துவர் என்பது பயன்.

முடிபு:—இயல்பினன்; தருவோன்; உகப்போன்; இதயன்; என் வரைத்தன்றே; வாழ்வோன்; சிவமே; முடியன்; நுதலன்; விழியன்; நாசியன்; செவியன்; வாயினன்; மிடற்றன்; புயத்தன்;

மார்பன்; கரத்தன்; மருங்கினன்; சித்தன்; உருவினன்; அக்கரத்தன்; மருத்தன்; கதிரோன்; வகுத்தனன்; சார்ந்து படியின், சேர்க்கும்; செய்யனே, முதல்வ!— நமச்சிவாய எனவே இளக, பூப்ப, இறைஞ்ச, புணர்பதி நடுவண், மடமாடத்துள் குரவன் உஞற்றும்பூசனை ஈசனுர் ஆகி, ஆகி சுரக்கும்; ஆவடு துறை அமர்தருவோனே.

## விருத்தம்.

பா அரும் அடி=பரவுதற்கரிய திருவடி; பாக்கள் வந்து வீழும் திருவடி; ஆற்றுப்படை— 'வழி காட்டி' நூல்; ஓவறும்=நீங்குதலில்லாத; ஏவரும்=எவரும்; ஏவு அரும்=அப்பரமன் கட்டளையிடுகின்ற அருமையான; துன்பம் இல்லாத; வாழ்வர்=வாழ்வார்கள். இது பயனுரை பாட்டு.

வாழ்க நலம்



நூல் முடிபு :-

1. பரம்பாருள் ; திருக்கயிலாயத்திருத்தலும் உரியன் ; செல்வுறின் பெறுகுவை ; அதா அன்று,

2. திறத்தினன்—மெய்கண்டார் ; என வெண்ணெய்நகரகவயின் மிளிர்தலும் உரியன்—அதா அன்று,

3. பஞ்சாக்கரனென—சுசீந்திர வளநகர் வயங்கலுமுரியன் ; அதா அன்று,

4. பெருந்துறை அமர்ந்து பேணலும் உரியன்; அதா அன்று,

5. திருவிடை மருதூர்—திகழ்தலும் உரியன் ; அதா அன்று,

6. ஆவடு தண் துறை அமர் தருவோன். சார்ந்து படியின் செவ்வியின் சேர்க்கும். நீடருள் சுரக்கும்.

உரை முற்றும்



சரஸ்வதி பிரஸ், திருப்பாதிரிப்புலியூர்.

